# நன்னூல்

# உரை வளம்

15

**சொல்லதிகாரம்**
**பொதுவியல்-3**

இரா. கன்னன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

# நன்னூல் உரைவளம் (தொகுதி-15)

# சொல்லதிகாரம்

# பொதுவியல் 3


பதிப்பாசிரியர்

முனைவர் இரா. கண்ணன்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

இரண்டாம் முதன்மைச் சாலை,

தரமணி, சென்னை–600 113

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Potuviyal 3 (Vol. 15)** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 703 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | 272 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 120/- (Rupees One hundred and twenty only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 113

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றி யிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக் கிடக்கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மை யுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவினை உடையது. காலமும் கடும்புனலும் கொண்டது போக எஞ்சியன சிலவே யாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந் தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந்நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி இன்றளவும் தனிச் சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரைவிளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறுபலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரை வளத்தினைஎம் நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலா சாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர், வ.குமார சாமிப் புலவர், வை.மு.சடகோபராமானுசாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார், பவானந்தம் பிள்ளை, கொ.இராமலிங்கத் தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசசு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவார் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழி பெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல் லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரை வளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின் TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U.போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ்வுரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான முனைவர் இரா.கண்ணன், சென்னை மாநிலக்கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ்வுரைவளத்தின் பதிப்புப் பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவ ராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனப் பணிகளில் எம்முடன் இணைந்து பணியாற்றும் துணை இயக்குநர், பேராசிரியப் பெருமக்கள் மற்றும் அலுவலக ஊழியர்கள் ஆகிய அனைவர்க்கும் எம் நன்றி உரித்தாகுக.

கரு.அழ.குணசேகரன்

சென்னை — 113.

12.10.2010.

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன.பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக் கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப் படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண் டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப்பட்டது. நன்னூல் ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக் கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும் சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சம காலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்று வரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமை யானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகியுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலை நாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளை யேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் ***கரு.அழ.குணசேகரன்*** அவர்களும், துணை இயக்குநர் **திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன்** அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை முனைவர் **ந.கலைவாணி** அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

**10.10.2010** **இரா.கண்ணன்.**

**சென்னை–55**

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அவி | – | அவிநயம் |
| இ.பொ | – | இதன் பொருள் |
| இல, விள | – | இலக்கண விளக்கம் |
| உ–ம் | – | உதாரணம் |
| உணர்–ற்று | – | உணர்த்துதல் நுதலிற்று |
| எ–டு | – | எடுத்க்காட்டு |
| எ–று | – | என்றவாறு |
| எ–னின் | – | என் நுதலிற்றே எனின் |
| சுவாமி | – | சுவாமிநாதம் |
| சூ–ம் | – | சூத்திரம் |
| தொல், எழு | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல், சொல் | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல், பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொன் | – | தொன்னூல் விளக்கம் |
| நச் | – | நச்சினார்க்கினியர் |
| ந.பா | – | நவநீதப் பாட்டியல் |
| நேமி | – | நேமிநாதம் |
| பா–டு | – | பாட வேறுபாடு |
| பொ–ரை | – | பொழிப்புரை |
| மா.அலங் | – | மாறனலங்காரம் |
| மு.வீ | – | முத்துவீரியம் |
| வீர | – | வீரசோழியம் |
| வெண், பாட் | – | வெண்பாப் பாட்டியல் |

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ,ஒ, ஓ, ஔ, ஃ – இவ்வெழுத்துக்கள் முறையே

a , ā , i , ī ,u ,ū ,e, ē ,ai ,o, ō, au, kh

எனவும்,
க், ங் , ச், ஞ் , ட் ,ண், த், ந் , ப், ம், ய், ர் , ல் , வ், ழ், ள், ற் , ன் - வ்வெழுத்துக்கள் முறையே

k, ṅ , s, ñ , t , ṇ, ṭ , n , p , m , y , r , l , v ,ḻ ,ḷ, ṟ , ṉ, kh

எனவும் ஆங்கில எழுத்துப்பெயர்ப்பில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

# நன்னூல் உரைவளம் –15

## சொல்லதிகாரம்

## பொதுவியல் – 3

395. இரட்டைக் கிளவி [1]யிரட்டிற் பிரிந்திசையா.

இரட்டைக் கிளவி இரட்டின் பிரிந்து இசையா.

irattaikkiḻavi irattu iṉ pirinṭu isaiyā

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**words doubled must not be devided**

Words which are naturally repetitive cannot be seperated and used singly.

### ஒப்புமைப் பகுதி

இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா

(தொல்.சொல்.:48)

இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா

(இ.வி.:325)

இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா

(மு.வீ.:723)

### மயிலை நாதர்

எ–ன், மரபுவழுவற்க வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

பாட வேறுபாடு:-

1.யிரட்டுப்

இ–ள்.: [1]இரட்டித்து நிற்குஞ்சொற்கள் அவ்விரட்டிப்பிற் பிரிக்கப்பெறா, எ–று.

வ–று.: செழுசெழுத்தார், மொடுமொடுத்தார் எனவும்,

“கொறுகொறுத்தா ரென்றொருவர் கூறுங்கா லுள்ளம்,
துடிதுடித்துத் [2]துள்ளிவிடும்”

“சலசல மும்மதஞ் சொரியத் தத்தமுட்
கொலைமருப் பிரட்டைகள் குளிப்ப”

(சீவக.: 82),

“கலகல
கூஉந்துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்”

(நாலடி.: 140),

“வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி”

(நாலடி.: 256),

“குறுகுறு நடந்து சிறுகை நீட்டி,
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்”

(புறநா.: 188)

எனவும் வரும். இரட்டைக்கிளவி யென்றமையான், இவை இரண்டின் இறவாவெனக் கொள்க; இறந்துநின்று ஒருசொற்பொருள்படின், இவை யாகாவென்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்–ற்று.

இ–ள்.: இரட்டைச்சொற்கள் அவ்விரட்டிப்பில் பிரிந்து தனித்து ஒலியா, எ–று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறின் பொருள்படாது என்பதூஉம், இரட்டித்துக் கூறுதலே மரபு என்பதூஉம் ஆயிற்று.

---

பாட வேறுபாடு:–

1. இரட்டையாக நிற்குஞ் சொற்கள்
2. துள்ளிவரும்.

வ–று.:–

"சலசல மும்மதம்பொழிய"

"கலகல கூஉந்துணையல்லால்"

"குறுகுறு நடந்தும் சிறுகை நீட்டியும்"

"வற்றியவோலை கலகலக்கும்"

"துடிதுடித்துத் துள்ளி வரும்" என வரும்.

துடிதுடித்து என்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமேனும் முன்னையது பிரிந்திசையாமையின் இரட்டைச்சொல்லேயாம் என்க. பிறவும் அன்ன.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், இரட்டைக்கிளவியின் இயல்பு கூறுகின்றது.

இ–ள்.:– இரட்டைக்கிளவி – இரட்டித்து நிற்குஞ் சொற்கள், இரட்டிற் பிரிந்திசையா – அவ்விரு சொல்லும் ஒன்றாய் நின்று பொருள் விளைதலன்றிப் பிரித்தாற் பொருள் விளையாதாம், எ–று.

உ–ம்.:–

செழுசெழுத்தார், மொடுமொடுத்தார், "என்றவர் கூறுங்கால் உள்ளந் துடிதுடித்துத் துள்ளி வரும்", "மண்காரியங் கடகடவென்றல், நெருப்புத் தகதகவென்றல், வாயு கலகலவென்றல், ஆகாயங் கங்கமென்றல்,"

"வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்,
பச்சோலைக் கில்லை யொலி"

(நாலடி.256)

"இரட்டைக் கிளவி" என்றமையால் இரண்டின் இறவா என்க.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வழூநிலை உணர்த்துகின்றது.

இ–ள்.:– இரட்டைக்கிளவி – இரட்டைச் சொற்கள், இரட்டின் – அவ்விரட்டிப்பின், பிரிந்து – நீங்கி, இசையா–தனித்து ஒலியாவாம், எ–று.

எனவே பிரித்துச் சொன்னாற் பொருள்படா தென்பதும் இரட்டித்துச் சொல்லல் மரபென்பதும் ஆயிற்று.

வ–று.:

'சலசலமும் மதம்பொழிய',

'குறுகுறு நடந்தும்',

'துடிதுடித்துத் துள்ளிவரும்' என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

இரண்டடைச்சொற்கள் நின்றொலிக்கு முறைகூறுஞ் சூத்திரம் யாது?

இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா.

(இரட்டைக்கிளவி இரட்டின் பிரிந்து இசைய.)

இ–ள்.: இரட்டைச்சொற்கள் அவ்விரட்டிப்பினின்றும் பிரிந்து தனித்தொலியாவாம். எ–று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதும், இரட்டித்துக் கூறதலே மரபென்பதுமாயிற்று.

வ–று.;–

"சலசல மும்மதம் பொரிய"

"கலகல–கூந்துணையல்லால்";

"குறுகுறு நடந்து";

"வற்றியவோலை கலகலக்கும்";

"துடிதுடித்துத் துள்ளிவரும்" எனவரும். துடிதுடித்து என்புழிப், பின்னையது பிரிந்திசைக்குமாயினும், முன்னையது பிரிந்திசையாமல், இரட்டைச்சொல்லேயா மென்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழாநிலை யெனக் காத்தலுணர்த்திற்று.

இ–ள்.:– இரட்டைச்சொற்கள் அவ்விரட்டித்தலில் நின்றும் பிரிந்து தனித்து ஒலியாவாம், எ–று.

எனவே வலிந்து பற்றிப் பிரித்துக் கூறிற் பொருள்படா தென்பதும், இரட்டித்துக் கூறுதலே மரபு என்பதுமாயிற்று.

வ–று.:–

சுரு சுருத்தது, மொடுமொடுத்தது என இசை பற்றியும் (இசை–ஒலி,), கொறுகொறுத்தார், மொறுமொறுத்தார் எனக் குறிப்புப் பற்றியும். (குறிப்பு – சிறிதுபொழுது நிகழ்வதோர் மெய்ப்பாடு), குறுகுறுத்தது, கறுகறுத்தது எனப் பண்பு பற்றியும் இரட்டித்துப் பிரியாது நின்றன. இவை, குறுத்தது

குறுத்தது என ஒருசொல் முழுவதும் இருமுறை வாராமைபால் அடுக்கல்ல, இவை மக்களிரட்டையும் விலங்கிரட்டையும் போலாகாமல் இலையிரட்டையும் பூவிரட்டையும் போல ஒன்றுபட்டும் வேறுபட்டும் நின்றன. இவற்றுள் பின்னையது பிரிந்திசைக்குமாயினும் முன்னையது பிரிந்திசையாமைபால் இரட்டைச் சொல்லேயாமென்க. இச் சூத்திரம் மேற்கோளென்கின்ற ஆசிரிய வசனம், இதன் முடிபு விளங்கிற்று.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– இரட்டைக் கிளவி – இரட்டைச் சொற்கள், இரட்டின் – அவ்விரட்டிப்பினின்றும், பிரிந்து இசையா – பிரிந்து (தனித்து) ஒலியாவாம்.

குறிப்பு :– எனவே, வலிந்து பிரித்துக்கூறின் இரட்டைச்சொல்லான போதுள்ளபொருள் படாதென்பதும், இரட்டித்துக்கூறுதலே மரபென்பது மாயிற்று.

உ–ம் :–

"சலசல மும்மதம் பொழிய'
"கொளகொள கொதித்து"
"துடிதுடித்துத் துள்ளிவரும்"

'துடிதுடித்து' என்பதில் பின்னையது பிரிந்திசைக்குமாயினும் முன்னையது பிரிந்திசையாமையின் இரட்டைச் சொல்லே யாமென்க. இரட் டித்தே கூறவேண்டலின் 'இரட்டைக்கிளி' எனப்பட்டது. அடுக்குத் தொடரும் இரட்டைக்கிளவியும் வந்ததுவே மீண்டும் வருதலால் தம்முளொக்கு மாதலால், இவை இரண்டிற்கும் வேறுபாடு என்னை? எனின், அடுக்குத் தொடர் – மக்களிரட்டையும் விலங்கிரட்டையும்போல வேறுபட்டுத் தனித்தனி பொருள் கொடுத்து நிற்கும். இரட்டைக்கிளவி – இலையிரட்டையும் பூவிரட்டையும்போல வேறுபடாமல் ஒன்றுபட்டுத் தனித் தனி பொருள்கொடாமல் நிற்கும் என்றறிக.

இச்சூத்திரம் தொல்காப்பியத்தினின்று எடுத்துக் கொண்ட மேற்கோள்.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: இரட்டைக்கிளவி – இரட்டைச்சொற்கள், இரட்டின் பிரிந்து இசையா – அவ்விரட்டிப்பினின்றும் பிரிந்து தனித்தொலியாவாம், எ–று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதும், இரட்டித்துக் கூறுதலே மரபென்பதுமாயிற்று.

வ–று.:–

"சலசல மும்மதம் பொழிய"; "கலகல–கூந்துணை யல்லால்"; "குறுகுறு நடந்து"; "வற்றிய வோலை கலகலக்கும்"; "துடிதுடித்துத் துள்ளி வரும்"; என வரும். துடிதுடித்து என்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமாயினும், முன்னையது பிரிந்திசை யாமையால், இரட்டைச்சொல்லே யாமென்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– அசைநிலை – அசைநிலைக்கும், – பொருணிலை – விரைவு வெகுளி உவகை அச்சம் அவலமுதலிய பொருணிலைக்கும், இசைநிறைக்கு – இசைநிறைக்கும், ஒருசொல் இரண்டு மூன்று நான்கு எல்லை முறை அடுக்கும் – ஒருமொழி இரண்டு மூன்று நான்களவுமுறையே அடுக்கும்.

எனவே, அசைநிலைக்கிரண்டும், பொருணிலைக்கிரண்டு மூன்றும், இசை நிறைக்கிரண்டும் மூன்றும் நான்கும் அடுக்குமென்பதாயிற்று.

(வரலாறு)

(க). அன்றே யன்றே........................................................ அசைநிலை

(உ) உண்டேனுண்டேன், போ போ போ .................. விரைவு

(ங) எய்யெய்; எறி யெறி யெறி .................................... வெகுளி

(ச) வருக வருக; பொலிக பொலிக பொலிக ........... உவகை

(ரு) பாம்பு பாம்பு; தீத்தீத்தீ ............................................. அச்சம்

(சு) உய்யேனுய்யேன்; வாழேன் வாழேன் வாழேன் .. அவலம்

(எ) ஏயே யம் பன் மொழிந்தனள் யாயே
நல்குமே நல்குமே நல்குமே நாமகள்
பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ ......... இசைநிறை

ஒரு சொல்லைப் பலகாற் சொல்லுதல் வழுவாயினும், இவ்விடத்தே ஆமென்றல் வழுவமைதியும், இதற்கு இவ்வெல்லை கடவாதென்றல் வழுவாமற் காத்தலுமாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: இரட்டைக் கிளவி – இரட்டைச் சொற்கள், இரட்டின் – அவ்விரட்டிப்பினின்றும், பிரிந்து இசையா – (தனித்து) பிரிந்து ஒலியா; எ–று.

எனவே–வலிந்து பிரித்துக் கூறின் இரட்டைச் சொல்லானபோதுள்ள பொருள் படாதென்பதும், இரட்டித்துக் கூறுதலே மரபென்பதுமாயிற்று.

உ–ம்.:–

"சலசல மும்மதம் பொழிய"; "கலகல, கூஉந்துணையல்லால்", "கள கள உதிர்ந்தது", "குறு குறு நடந்து", "துடிதுடித்துத் துள்ளி வரும்" என வரும். துடிதுடித்து என்பதில், பின்னையது துடித்து எனப் பிரிந்திசைக்குமாயினும், முன்னையது பிரிந்திசையாமையால் இரட்டைச்சொல்லேயாம்.

அடுக்குத் தொடர்க்கும் இரட்டைக்கிளவிக்கும் வேறுபாடு: – அடுக்குத் தொடரும் இரட்டைக்கிளவியும் வந்ததுவே மீண்டும் வருதலால் ஒக்குமாதலின் இவையிரண்டுக்கும் வேறுபாடு என்னவென்றால்: அடுக்குத்தொடர், மக்களிரட்டையும் விலங்கிரட்டையும் போல வேறுபட்டுத் தனித்தனி பொருள் கொடுத்து நிற்கும்; இரட்டைக்கிளவி இலையிரட்டையும் பூவிரட்டையும் போல வேறுபடாமல் ஒன்றுபட்டுத் தனித்தனி பொருள்கொடாமல் நிற்கும் என்று அறிக. அன்றியும், இரட்டைக்கிளவி இரண்டுதரத்துக்கு மேல் வந்தது வரப்பெறாது.

இச்சூத்திரம், தொல்காப்பியத்தினின்று எடுத்துக் கொள்ளப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** இரட்டைக்கிளவி – இரட்டைச் சொற்கள், இரட்டின் பிரிந்து இசையா – அவ்விரட்டிப்பினின்றும் பிரிந்து தனித்தொலியாவாம். எ–று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதும், இரட்டிதைத்துக் கூறுதலே மரமென்பது மாயிற்று.

(உ–ம்.)

"சலசல மும்மதம் பொழிய;" "கலகல – கூந்துணை யல்லால்;" "குறுகுறு நடந்து;" "வற்றிய வோலை கலகலக்கும்;" "துடிதுடித்துத்துள்ளி வரும்;" என வரும. துடிதுடித்து என்புழிப் பின்னையதுபிரிந்திசைக்குமாயிறனும், முன்னையது பிரிந்திசையாமையால், இரட்டைச் சொல்லே யாமென்க.

அடுக்குத் தொடர்க்கும் இரட்டைக் கிளவிக்கும் வேறுபாடு: அடுக்குத்தொடர் வழுவமைதி; இரட்டைக் கிளவி வாழநிலை. அடுக்குத்தொடர் மக்களிரட்டையும் விலங்கிரட்டையும் போல வேறுபட்டுத் தனித்தனி பொருள் கொடுத்துமு நிற்கும்; இரட்டைக்கிளவி, இலையிரட்டையும் பூவிரட்டையும்போல வேறுபடாமல் ஒன்றுபட்டு நின்றே பொருள் கொடுப்பதல்லது தனித்தனி பொருள் கொடாது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ – ள்.) இரட்டைக் கிளவி – இரட்டைச் சொற்கள், இரட்டின் பிரிந்து – அவ்விரட்டிப்பின் நீங்கி, இசையா – (தனித்து) ஒலியாவாம். (எ–று)

(பொ–ரை.) இரட்டைச் சொற்கள் அவ்விரட்டிப்பின் பிரிந்து தனித்த ஒலியா.

எனவே, வலிந்து பிரித்துக் கூறின் இரட்டைச் சொல்லான போதுமுள்ள பொருள்படா தென்பதும், இரட்டித்துக் கூறுதலே மாபென்பது மாயிற்று.

(உ–ம்.)

"சலசல மும்மதம் பொழிய,"

"கலகல, கூஉந் துணையல்லால்,"

"குறுகுறு நடந்து,"

"துடிதுடித்துத் துள்ளிவரும்" எனவரும்.

துடிதுடித்து என்பதில், பின்னையது துடித்து எனப்பிரிந்திசைக்குமாயினும், முன்னையது பிரின்திசையாமையால் இரட்டைச் சொல்லேயாம்.

அடுக்குத் தொடருக்கும் இரட்டைக் கிளவிக்கும் வேறுபாடு:–

அடுக்குத் தொடரும் இரட்டைக்கிளவியும் வந்ததுவே மீண்டு வருதலால் ஒக்குமாதலின், இவையிரண்டுக்கும் வேறுபாடு என்ன வென்றால்:– அடுக்குத் தொடர்: மக்களிரட்டையும் விலங்கிரட்டையும்போல வேறுபட்டுத் தனித்தனி பொருள் கொடுத்து நிற்கும். இரட்டைக்கிளவி: இலை யிரட்டையும் பூவிரட்டையும் போல வேறுபடாமல் ஒன்றுபட்டுத் தனித்தனி பொருள் கொடாமல் நிற்கும் என்று அறிக. அன்றியும், இரட்டைக் கிளவி இரண்டு தரத்துக்குமேல் வந்தது வரப்பெறாது.

## கா. நமச்சிவாய முதலியார்

இரட்டைக் கிளவி – இரட்டைச் சொற்கள், இரட்டின் – அவ்விரட்டிப்பின், பிரிந்து – நீங்கி, இசையா – (தனித்து) ஒலியாவாம்.

எனவே, வலிந்து பிரித்துச் சொன்னாற் பொருள்படாது என்பதும், இரட்டித்துச் சொல்லல் மரபு என்பதும் ஆயிற்று.

உதாரணம்

'சலசல மும்மதம் பொழிய'
'குறுகுறு நடந்து'.

## மோசசு பொன்னையா

இரட்டித்து நின்று பொருளுணர்த்துஞ் சொற்கள் இரட்டித்து நிற்றலிற் பிரிந்து நில்லா. எ—று.

இது தொல்காப்பிய நூற்ப.8 ஈண்டு இரட்டைக் கிளவி என்றது இரட்டை இலை, இரட்டைப்பூ போல் அமையுஞ் சொல்லை.

1. தொல். சொல். 411; 2. தொல்.சொல். 423; 3. தொல். சொல். 424; 4, 5. தொல். சொல். 425. 426; 6. நேமி. 74; இது அகத்தியம் என்பர். 8. தொல். சொல். 48.

எ—டு

சலசலமும்மதம் இசைபற்றியன

மொடுமொடுத்தது மரம்

முறுமுறுத்தார் தாயார் குறிப்புப் பற்றியன

வெடுவெடுத்தார் தந்தை

குறுகுறு நடந்தது குழந்தை

கறுகறு என வளர்ந்தது பயிர் பண்பு பற்றியன

கறுத்தது கறுத்தது; குறுத்தது குறுத்தது என இவ்வாறு மக்களிரட்டை, விலங்கு இரட்டை போல்வன தத்தம் பொருள் தந்து அடுக்கி நிற்பன ஆதலின், அவை இரட்டைக் கிளவிகள் ஆகா என்க.

(45)

## 396. ஒருபொருட் பலபெயர் பிரிவில வரையார்.

ஒரு பொருள் பல பெயர் பிரிவு இல வரையார்.

oru poru<u>l</u> pal peyar pirivu ila varaiyār

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Essential adjuncts not to be separated**

When several epithets may be affixed to the same object, the learned will employ ( in the same series) only such as are essential to it.

## ஒப்புமைப் பகுதி

ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்

(தொல்.சொல்.: 460)

ஒருபொருட் பலபெயர் பிரிவில வரையார்

(இ.வி.:355)

ஒருபொரு ளிருசொல் பிரிவில வரையார்

(மு.வீ.:767)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ–ள்.:– ஒருபொருள் கருதிவரும் பலபெயர் பொருளின்நீங்கா வாயின், ஒருபொருட்குப் பலபெயர் வந்தனவென்று கடியப்படா, எ–று.

'பிரிவில வரையா'[1] எனவே, பிரிவன கடியப்படுமெனக் கொள்க.

வ–று.:–

"வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்
தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற்
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு."

இது பிரிவின்றி இருபெயர் வந்தது.

"கொய்தளிர்த் தண்படலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலு மேறும் வயக்களிறே–கைதொழுவல்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணவெம்
சாலேகஞ்சார நட"

இது, காலேகவண்ணம் இவனுக்கே உரிமைத்தன்மையிற் பிரிக்கப்படுதலின், ஆகாதென்க. பிறவுமன்ன. வடமொழிக்கு இரண்டல்லாத வெல்லாம் பலவென்றும் தமிழுக்கு ஒன்றல்லாத வெல்லாம் பலவென்றும் அறிக.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது.

இ–ள்.: ஒரு பொருள்மேல் பலபெயர் கூறுங்கால் அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கூறுவர் புலவர், எ–று.

---

பாட வேறுபாடு.:–

1.வரையார்.

எனவே பிரிவுள்ளனவற்றைக் கூறார் என்பதாயிற்று.

வ—று:—

'ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்', 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான்' என்பன பிரிவிலவாய்ப் பலபெயரும் ஒருபொருள்மேல் சென்று கேட்போர்க்குக் கூறுவோன் கருதிய பொருள் விளக்கி நின்றன.

**"வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்**
**தையலாய் நீயின்று நல்கினை நல்காயேல்**
**கூடலார் கோவொடு நீயும் படுதியே**
**நாடறியக் கவ்வை ஒருங்கு"**

**எனவும்,**

**"கொய்தளிர்த் தண்படலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்**
**வைகலும் ஏறும் வயக்களிறே — கைதொழுவல்**
**காலேக வண்ணனைக் கண்ணாரக் காணஎம்**
**சாலேகம் சார நட"**

எனவும் சுட்டின் பொருளவாய் வரும் பெயரொடு தொக்க ஒரு பொருட் பலபெயர்களும் அன்ன.

பிரிவு என்றதற்கு இவ்வாறு பொருள் கூறாது, "கொய்தளிர்த் **தண்படலை**" என்னும் பாட்டினுள் காலேகவண்ணம் சேந்தனுக்கும் பிறர்க்கும் உண்டாதலைப் பிரிவு என்று கருதி இது வழு என்பாரும் உளர். காலேகவண்ணம் பொதுவியல் பன்றிச் சேந்தனிற் பிரிந்ததன்றாதலானும், சேந்தனைக் களிற்றின்மேல் சேய்மைக்கண் வரக்கண்டாள் அவனைக் கண்ணாரக் காணவேண்டும் பெரு வேட்கை தந்தது அவனது காலேக வண்ணம் என்பாள் அவ்வாறு கூறவேண்டுமா தலானும், இது சான்றோரிலக்கியம் ஆதலானும் அது பொருளன்று என்க.

இனிப் பிரிவுளதாய் வழுவியது யாதோ எனின்:— 'பகையியல்பாயிலி படைக்கை மறவன்' என வரின், பகை இயல்பாயிலியைப் படைக்கை மறவன் என்றல் கூடாமையின் பிரிந்து வழுவாம் என்க. பிறவும் அன்ன.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், ஒரு பொருட்கண் வரும் பலபெயர்க்கு ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

**இ—ள்.:** ஒரு பொருட் பலபெயர் — ஒரு பொருளைக் கருதி வரும் பல

பெயர், பிரிவில – அப்பொருளை நீங்காவாயின; வரையார் – ஒரு பொருட்குப் பல பெயர் வந்ததென்று கடியார் புலவர், எ–று.

உ–ம்.:–

"வையைக் கிழவன் வயங்குதார் மார்பன்" எனப் பிரிவின்றி இரு பெயர் வந்தது. "அரசனைக் காணச் செல்லு ஐம்புல யானையே, வாசல் மந்திரியொடு வாய்மை கூற நட" என இவை ஒரு பொருட் பல பெயர் பிரிக்கப்படுதலிற் கடிவர் என்க.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது,

இ–ள்.: ஒரு பொருள் – ஒரு பொருளின் மேல், பல்பெயர் – பல பெயர்சொல்லும் போது, பிரிவில – அப்பொருளினின்றும் பிரிதலில்லாதன வற்றை, வரையார் – நீக்காது கொள்வார் புலவர், எ–று.

வ–று.:–

ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தான் வந்தான், பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான், என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஒருபொருட்குப் பலபெயர் இன்னபடிவரின் கொள்கவென விதிக்குஞ் சூத்திரம் யாது?

ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.

(ஒருபொருட் பல்பெயர் பிரிவு இல வரையார்.)

இ–ள்.:– ஒருபொருளின்மேற் பலபெயர் சொல்லும்போது அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கொள்வர் புலவர். எ–று.

எனவே, பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

வ–று.:– ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன்வந்தான்; பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப், பலபெயரும் ஒருபொருளின் மேற் சென்று, கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்தபொருளை விளக்கிநின்றன.

பகையியல்பாயிலி படைக்கை மறவன்; எழுத்துணர்வில்லோ னிலக்கண நிறைகடல் எனவரிற், பகையியல்பாகவேயில்லாதவனைப் படைக்கைமறவ னென்றலும், எழுத்துணர்வில்லாதவனை இலக்கண நிறைகடலென்றலுங் கூடாமையாற் பிரிந்து வழுவாமென்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இதுவுமது,**

**இ—ள்.:—** ஒரு பொருளைக் குறித்துப் பலபெயர் வருமாயின் அப்பொருளில் நின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கொள்வர் புலவர், எ—று.

எனவே பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

**வ—று.:—**

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் எனின், பாண்டியன் என்பதும், யாகசாலை என்பதும், குடுமி என்பதும் வழுதி என்பதும், ஒரு பொருளின் மேற்சென்று கேட்போர்க்குச் சொல்லுவான் குறித்த பொருளை விளக்கி நிற்றலாலும், ஆசிரியன் பேரூர்கிழான் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் என்பது மாணாக்கர்க்கு நூற்பொருளுணர்த்தலால் ஆசிரியத் தன்மையும் ஊருரிமையுங் கண்ணின் வேறுபாடு முடையவன் சாத்தனாத லாலுமிவை போல்வன வெல்லாம் பிரிவில்லனவாம்.

**"வையைக்கிழவன் வயங்குதார்மாணகலந்**

**தையலாய்நீயின்று நல்கினை நல்காயேற் கூடலார்கோவோடு நீயும்படுதியே**

**நாடறியக்கௌவை யொருங்கு"**

இதனுள் வையையாற்றிற்கு உரியவனும் கூடலென்னும் பதியிலுள்ளார்க்கு இறைவனும் ஒருவனே ஆதலாற் பிரிவிலதாயினும், நல்கினை என முடிந்த பின்பு மற்றோர் முடிபாகக் கூடலார்கோவென்றதனால் அது அக் கூடலார்கோ வெனச் சுட்டி நில்லாவிடிற் பிரிவுளதாம், இது சுட்டியே நிற்றல் காண்க.

**"கொய் தளிர்த்தண்டலைக்கூடற்பெருஞ்சேந்தன்**

**வைகலுமேறும்வயக்களிறே கைதொழுவல்**

**காலேகவண்ணனைக் கண்ணாரக்காணவெஞ்**

**சாலேகஞ்சாரநட.**

இதனுள், காலேகவண்ணம் சந்தனப்பூச்சு ஆதலால், அது பொதுமையினின்று பிரிவுளதாயினும் காலேக வண்ணனாகிய சேத்தனென மாறி, விசேடித்து நிற்றலும் கைதொழுவல் என முடிந்தபின் மற்றோர் முடிபாய் அப் பொருளையே விளக்கிக்

காலேக வண்ணனாகிய அச் சேந்தனை யெனச்சுட்டி நிற்றலுமுடைமையாற் சிறப்பின்றாயினும் பிரிவிலதென ஆசிரியர் தொல்காப்பியனார்,

**"பொருளோடு புணராச் சுட்டுப்பெய ராயினும்**

**பொருள்வேறு படாஅதொன்றா கும்மே"**

எனக் கூறிய இச் சூத்திரதாற் கொள்க. இவ்வாறு, பொருளொடு புணராச் சுட்டுப்பெயர்கள் புராண காவியங்களில் பெரும்பான்மை வருமென உணர்க. இனிப் பிரிவுளதாய் வழுவியது யாதெனின், **'பகையியல் பாயிலி படைக்கை மறவன்' 'எழுத்துணர் வில்லோன் இலக்கண நிறைகடல்'** என வரிற் பகையியல்பாகவே இல்லாதவனைப் படைக்கை மறவனென்றலும், எழுத்துணர்வில்லாதவனை யிலக்கணம் நிறைகட லென்றலுங் கூடாமையிற் பிரிந்து வழுவா மென்க பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– ஒருபொருள் – ஒருபொருளின்மேல், பலபெயர்– பலபெயர் சொல்லும்போது, பிரிவு இல – (அப்பொருளினின்றும்) பிரிதலில்லாதவற்றை, வரையார் – நீக்காமற் கொள்ளுவர் (புலவர்) : (எனவே, பிரிவுள்ளவற்றை நீக்குவரென்றதாயிற்று)

உ–ம் :–

"ஆலிநாடன் மங்கைவேந்தன் பரகாலன் கலியன் செய்த பனுவல்" என்றவிடத்துப் பிரிவிலவாய், பலபெயரும் ஒருபொருளின் மேற்சென்று, கேட்போர்க்குச் சொல்லுவான் குறித்தபொருளை விளக்கி நின்றன.

"பகையியல் பாயிலி படைக்கை மறவன்", "எழுத்தறிவில் லோனி லக்கண நிறைகடல்" எனவரின் பகை இயல்பாகவே இல்லாதவனைப் 'படைக்கைமறவன்', என்றலும், எழுத்தறிவில்லாதவனை 'இலக்கண நிறைகடல்' என்றலும் கூடாமையின் பிரிந்து வழுவாமென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு – 'ஒருபொருளையே குறித்துவரும் பல பெயர்கள் வேறுபடாமல் அப்பொருளையே சுட்டாய் நின்று உணர்த்துமாயின் அவற்றை நீக்காமற்கொள்வர்' எனப்பொருள் கொள்ளலுமாம். "மீனேறுயர்த்த கொடிவேந்தனைவென்ற பொறற்பிற் – றானேறனையானு ளன் சீவகசாமியென்பான் –

வானேறநீண்ட புகழான் சரிதம் மிதனைத் – தேனூறநின்ற தெருண்டாரவை செப்பலுற்றேன்" என்ற இச்செய்யுளில் 'புகழான்' என்னும் சொல் சொல்லுவான் குறிப்பால் 'அவன்' என்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாயிற்று. இவ்வாறு வருதலைப் "பொருளொடு புணராச் சுட்டுப்பெயராயினும் – பொருள்வேறுபடாதொன்றாகும்மே" என்னுந் தொல்காப்பியத் தானு முணர்க. இத்தகைய சுட்டுப்பெயர்கள் பெரும்பான்மை புராணகாவியங்களில் வருதல் காண்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– ஒருபொருட் பல்பெயர் – ஒரு பொருளின் மேற் பலபெயர் சொல்லும்போது, பிரிவு இல வரையார் – அப் பொருளின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கொள்வர் புலவர், எ–று.

எனவே, பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

வ–று.:–

ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்; பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப், பலபெயரும் ஒருபொருளின்மேற்சென்று கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்த பொருளை விளக்கி நின்றன.

பகையியல்பாயிலி படைக்கை மறவன்; எழுத்துணர்வில்லோ னிலக்கண நிறைகடல் எனவரிற், பகையியல்பாகவே யில்லாதவனைப் படைக்கை மறவனென்றலும், எழுத்துணர் வில்லாதவனை இலக்கணநிறைகட லென்றலுங் கூடாமையாற் பிரிந்து வழுவாமென்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். ஒருபொருட் பல்பெயர் – ஒருபொருளின் மேற் பலபெயர் சொல்லும்போது, – பிரிவு இல வரையார் – அப்பொருளின்றும் பிரிதலில் லாதனவற்றை நீக்காது கொள்ளுவர் புலவர், எ–று.

எனவே, பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

வ–று. :–

ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்; பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப், பலபெயரும் ஒருபொருளின்மேற் சென்று, கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்த பொருளை விளக்கி நின்றன.

பகையியல் பாயிலி படைக்கை மறவன்;
எழுத்துணர்வில்லோ னிலக் கணநிறைகடல் எனவரிற், பகை யியல்பாகவே யில்லாதவனைப் படைக்கை மறவனென்றலும், எழுத்துணர்வில்லாதவனை இலக்கண நிறைகடலென்றலுங் கூடாமையாற் பிரிந்து வழுவாமென்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– ஒரு பொருள் பல்மொழி – ஒருபொருளைக் குறித்து வருகிற பலசொற்கள், சிறப்பினின் – (அவ்வாறு வருவதற்கு ஒருகாரணம் இல்லை யானாலும்) சிறந்து நிற்கையால், வழா–(அவை) மரபுவழுவென்று நீக்கப்படாவாம்; எ–று. வழுவமைதி யென்று கொள்ளப்படுமென்க.

சிறந்து நிற்கை – செவிக்குச் சொல்லின்பம் தோன்ற நிற்றல்.

உ–ம்.:–

மீ மிசை ஞாயிறு, புனிற்றிளங் கன்று, நாகிளங் கமுகு, உயர்ந்தோங்கு பெருவரை, குழிந்தாழ்ந்த கண், வெங்கொடும் போர்.

இனி, இரட்டுறமொழிதலால், சிறப்பினின் என்பதற்குச் சிறப்புப் பொருளைத் தருதலால் என்றும் பொருள் கொள்ளலாம். இங்குக் காட்டிய உதாரணங்களுள் முறையே மிகவும் மேலிடத்திலுள்ள, மிகவும் இளமையான, மிகவும் உயர்ந்த, மிகவும் உள்ளடங்கிய, மிகவும் கொடிய எனப் பொருள்படுதலும் காண்க. (மீ–மேல். மிசை–மேல். புனிறு–இளமை. நாகு–இளமை.)

இது வாய்பாடுபற்றி, 'மீமிசைச்சொல்' எனவும் படும்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– ஒருபொருட் பல்பெயர் – ஒரு பொருளின்மேற் பலபெயர் சொல்லும்போது, பிரிவு இல–அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை, வரையால் – நீக்காது கொள்வர் புலவர். எ–று.

எனவே, பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

(உ–ம்.)

'ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்' 'பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான்' என்பன, பிரிவிலவாய்ப், பலபெயரும் ஒருபொருளின்மேற் சென்று

கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்த பொருளை விளக்கி நின்றன.

'பகையியல்பாயிலி படைக்கை மறவன்' 'எழுத்துணர்வில்லோனிலக் கண நிறைகடல்' என வரிற்,ங பகையியல்பாகவே யில்லாதவனைப் படைக்கை மறவனென்றலும், எழுத்துணர் வில்லாதவனை இலக்கண நிறைகடலென்றலுங் கூடாமையாற் பிரிந்து வழுவா மென்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ—ள்.) ஒரு பொருள்— ஒரு பொருளைக் குறித்து வருகிற, பல்மொழி — பல சொற்கள், சிறப்பினின் — சிறந்து நிற்கையால், வழா — (அவை) வழுவென்று நீக்கப்படாவாம். (எ—று)

(பொ—ரை.)

ஒரு பொருளையே குறித்து வரும் பல சொற்கள் அவ்வாறு வருதற்கு ஓர் காரணமின்றேனும், சொல்லின்பம் தோன்றச் சிறந்துநிற்றலின் அவை வழுவென்று நீக்கப்படாவாம். (சிறந்து நிற்றல் — செவிக்குச் சொல்லின்பந் தோன்ற நிற்றல்.)

(உ—ம்.)

மீமிசை ஞாயிறு.

புனிற்றிளங் கன்று.

நாகிளங் கமுகு.

உயர்ந்தோங்கு பெருவரை.

குழிந்தாழ்ந்த கண்.

(முற்றும்மை வேண்டுமிடம்.)

## கா. நமச்சிவாய முதலியார்

ஒரு பொருள் — ஒரு பொருளின்மேன், பல் பெயர் — பலபெயர் சொல்லும்போது, பிரிவு இல — அப் பொருளினின்றும் பிரிதல் இல்லாதனவற்றை, வரையார்— நீக்காது கொள்வர் புலவர்.

உதாரணம்

ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தான் வந்தான்,
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான்.

இங்கு, பலபெயரும் பிரிவிலவாய் ஒரு பொருள்மேற் சென்று, கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்தபொருளை விளக்கின.

எழுத்துணர் வில்லோன் இலக்கணம் நிறைகடல் என வரின், எழுத்துணர் வில்லாதவனை இலக்கண நிறைகடல் என்றல் கூடாமையால், பிரிந்து வழுவாம் என்க.

## மோசகு பொன்னையா

ஒரு பொருளையே குறித்துவரும் பல பெயர்கள் அப்பொருளையே வேறுபாடின்றிச் சுட்டி உணர்த்தி நிற்பின், அவற்றை நீக்காது கொள்வர் புலவர் எ–று.

எனவே, பொருள் வேறுபட வரும் பல் பெயர்களைப் புலவர் நீக்குவர் எனக் கொள்க.

எ–டு.

**வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்**
**தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற்**
**கூடலார் கோவொடு நீயும் படுதியே**
**நாடறியக் கௌவை யொருங்கு.**

வையைக்கிழவன் என்னும் பெயரும், கூடலார்க்கோ எனச் சுட்டின் பொருளாக வந்த பெயரும் வேறுபாடின்றி ஒரு பொருளையே குறித்து வந்தன.

எழுத்தறிவில்லான் இலக்கண நிறைகடல் வந்தான், என்றவிடத்து, எழுத்தறிவில்லாதவன் இலக்கண நிறை கடலாதல் இல்லையாதலின், பொருள் வேறுபாடின்றிச் சுட்டி உணர்ந்தாமையின், அதனைப் போன்றவற்றைப் புலவர் வரைத்ந்தொதுக்குவர் எனக் கொள்க.

இந்நூற்பாவிற்கு 'ஒரு பொருளின்மேல் பலபெயர் கூறுங்கால், அப்பொருளினின்றும் பிரிதலில்லாதவற்றை நீக்காது கூறுவர் புலவர்' என உரைப்பது பொருந்தாது. அவ்வாறு பொருளுரைப்பது, நூலுக்குக் கூறியது கூறல் என்னும் குற்றத்தை ஆக்குவதாகும். என்னை?

**ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி**
**ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.**

என்ற விடத்து அதனைக் கூறி, அது முடியுமாறுங் கூறி விடுத்தார் ஆசிரியர் ஆதலின் என்க.

## 397. ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.

ஒரு பொருள் பன் மொழி சிறப்பினின் வழா.

oruporut panmoli siüappin in valā

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Redundant words**

In cases of spescial elegance, it is not erroneous to employ several words having same signification.

## ஒப்புமைப் பகுதி

ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ

(இ.வி.:356)

## மயிலை நாதர்

எ—ன், மரபுவழுவமைப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.: பொருள்வேறின்றி ஒருபொருளைக் குறித்து வரும் பலசொற்கள் அப்பொருளைச் சிறப்பித்தலின், வழுவென்று நீக்கப்படா, எ—று.

வ—று.:—

அவன்றான், அதுதான் எனவும்,

"மீமிசைஞாயிறு கடற்பாய்ந் தாங்கு",

"விலங்ககன்ற வியன்மார்ப"(புறாநா. 3),

"ஆடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு" (பொருந. 61),

"உயர்ந்தோங்கு பெருவரை யூறின்றேறலின்" (மலைபடு. 41),

"மழவிளமரையான்பாறேனளாய் மாந்துகென்பார்",

"குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி" (நாலடி. 49),

"கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை" (புறநா. கடவுள்.),

"உண்ணலுமுண்ணேன் வாழலும்வாழேன்" (கலி. 23),

"நனிபெரிதும், வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின்" (நாலடி. 17) எனவும் வரும்,

அஃதேல், "பூமலர்"
"பூம்போது", (புறநா. 25),
"களிற்றொருத்தல்" (கலி. 2),
"கேழற்பன்றி" (புறநா. 152) என்றற் றொடக்கத்தனவோ வெனின், அவை: பூவென்பது பொலிவினை யுணர்த்தலானும், களிறென்பது எருமையி னொருத்தல் முதலாயினவற்றை நீக்குதலானும் கேழலென்பது எய்ப்பன்றி முதலானவற்றை நீக்குதலானும் பொருள்வேறு பாடுடைமையின், ஒரு பொருட் பன்மொழி யாகா; பண்புத் தொகையுள் அடங்குமென்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மரபுவழுவமைப்பு உணர்–ற்று.

இ–ள்.: ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொற்கள் அவ்வாறு வருதற்கு ஓர்காரணம் இன்றேனும் சிறந்து நிற்றலின் அவை வழு என்று நீக்கப்படா, எ–று.

'சிறந்து நிற்றல்' என்றமையால், காரணமின்றி வந்தன என்பது பெற்றாம்.

வ–று.:–

"மீமிசை ஞாயிறு கடற்பாய்ந் தாங்கு"

"புனிற்றிளங்கன்று"

"நாகிளங்கமுகு"

"ஆடுபசி உழந்த நின் இரும்பே ரொக்கல்"

"உயர்ந்தோங்கு பெருவரை"

" குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி" என வரும். பிறவும் அன்ன.

இனிச் 'சிறப்பினின்' என்றதற்கு, அப்பொருளைச் சிறப்பித்தலின் எனப் பொருள் கூறுவாரும் உளர். அச்சொற்கு அப்பொருள் இயையாமையானும், இக்காரணத்தான் வந்தனவேல் ஈண்டு ஒருபொருட்பன்மொழியாய் வரும் பெயர்கள் ஒருபொருட் பல பெயருள் அடங்குமாதலானும், மீமிசை என்றால் மேல் என்றே பொருளன்றி விசேடித்ததோர் சிறப்பு இன்மையானும், உண்டேல் அஃது இஃதென விதந்து கூறுவாராதலானும் அது பொருளன்று என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், ஒரு பொருட்படும் பல பெயர் வழுவன்று என்பது கூறுகின்றது.

இ—ள்.:— ஒருபொருட் பன்மொழி — ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொற்கள், சிறப்பினின் — அப்பொருளைச் சிறப்பித்து வருதலான், வழா — வழுவென்று நீக்கப்படா, எ—று.

உ—ம்.:—

அவன்தான், அதுதான், மீமிசை, அகன்மார்பன், உயர்ந் தோங்கும் பெருவரை, மழவிளநரை, நரையிளங்கன்று, "குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி" (நாலடி. 49), கேழற்பன்றி, வேழக்கரும்பு, "நனிபெரிதும் பெறக்கண்ண ளென்றிவளை வெஃகண்மின்" (நாலடி. 17) என வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபுவழுவமைதி உணர்த்துகின்றது.

இ—ள்.:— ஒருபொருள்—ஒருபொருளைக் குறித்து வருகிற, பன்மொழி— பலசொற்கள், சிறப்பினின் — சிறந்து நிற்கையால், வழா—அவை வழுவென்று நீக்கப் படாவாம், எ—று.

வ—று.:—

மீமிசைஞாயிறு, புனிற்றிளங்கன்று, நாகிளங்கமுகு, உயர்ந்தோங்கு பெருவரை, குழிந்தாழ்ந்தகண் என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஒரு பொருண்மேற் பலசொல்வழங்கல் வழுவேயாயினும் இன்ன வழிக்கொள்க எனக்கூறுஞ் சூத்திரம் யாது?

ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.

(ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா.)

இ—ள்.:— ஒருபொருளைக்குறித்து வரும் பலசொற்கள் அவ்வாறு வருதற்கோர் காரணமின்றாயினும் சிறந்து நிற்கையால் அவை வழுவென்று நீக்கப்படாவாம், எ—று.

சிறந்துநிற்றல் செவிக்குச் சொல்லின்பந்தோன்ற நிற்றல்.

வ—று.;—

மீமிசைஞாயிறு; புனிற்றிளங்கன்று; நாகிளநகமுகு; உயர்ந்தோங்கு பெருவரை; குழிந்தாழ்ந்தகண் எனவரும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழுமைதி யுணர்த்திற்று.

இ–ள்.:– ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொற்கள், சிறந்து நிற்றலின் வழுவாகா, எ–று.

வ–று.:–

**மீமிசை**, இதில் மீ என்றதும் மிசை என்றதும் மேல்; புனிற்றிளங்கன்று இதில் புனிறு, இளமை இரண்டு மொன்று. நாகிளங்கமுகு–இதில் நாகு இளமை இரண்டு மொன்று, உயர்ந்தோங்கு பெருவரை–இதில் உயர்தல் ஓங்குத லிரண்டு மொன்று, குழிந்தாழ்ந்தகண்–இதில் குழிதல், ஆழ்தல் இரண்டு மொன்று, என வரும் பிறவுமன்ன. சிறந்து நிற்றல் செவிக்கு இன்பந் தோன்ற நிற்றல்.

இனிச், 'சிறப்பினின் வழா' என்பதற்குப் பதப்பொருள் விளங்க உரையெழுதாது, இடர்ப்பட்டு உரையெழுதினார். அது யாது நோக்கி யெனின்,

**"இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்**
**கின்னென் சாரியை யின்மை வேண்டும்"**

என்னுஞ் சூத்திரம் நோக்கி என்க. ஆசிரியர் தொல்காப்பியனார் இன்னுருபிற்கு இன் சாரியை ஒரோவழி அக்காலத்தும் வருமென்பது கருதியே,

**'இன்னென் சாரியை இல்லை யாண்டும்'**

என நியதி கூறாமல், **'இன்மை வேண்டும்'** என வேண்டிக் கோடலாயும் பராமுகமாயுங் கூறினார். அதனையும் பாம்பினிற் கடிது தேள் என்னும் வழக்கையும், 'யாதினின் யாதினி னீங்கியா னோத லதனி னதனி னிலன்' என்னுஞ் செய்யுளையும் நோக்கி இந்நூலாசிரியர், 'சிறப்பின்வழா' எனச் சூத்திரஞ் செய்தார். இதற்குச் சிறப்பின் சிறக்குமாயின் எனச் செயினென் வாய்பாட்டு வினையெச்சமாகப் பொருள் கூறின், வழங்கினவற்றிற்கு அன்றென்பதாயிற்று. அதுவுமன்றி, இன் என்பது வாளா நின்றது, (வாளா– வீண்). இனிச் சிறப்பினால் என ஏதுப் பொருள் கொளினும் பொன்னிற் செய்த குடம், வாணிகத்தினாயினான் என்பன போலக் காரணக் காரியத் தொடராய் நில்லாமையு மன்றி, ஆங்கும் இன் என்பது வீணா நின்றது. ஆதலால் சிறப்பினில் நின்றும் தவறி வழா என எல்லைப் பொருளாக உரைப்பதே சிறந்து காட்டிற்று. நீக்கமெனினும், குற்றியலுகரப் புணர்ச்சி ஆயின், இன்

உருபிற்கு இன் சாரியை வருதல் புதியன புகுதல் எனினும் அமையும். இனி,

**“எல்லா வீற்றுஞ் சொல்லுங் காலை**
**வேற்றுமை உருபிற்கு இன்னே சாரியை”**

என்றதை மறந்து பாட்டின் பொருள் என்பதைப் பாட்டன் பொருள் என்றாற் போல மேற சொல்லிய குறளை 'யாதனின்' எனத் திருப்பிச் சொல்லின்பங் கெடச் செய்தாரும் உளர். மொழி வழா என முடிக்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **ஒருபொருள் பல்மொழி** – ஒருபொருளைக் குறித்து வருகிற பலசொற்கள், **சிறப்பினின்** – (அவ்வாறு வருதற்கு ஓர் காரணமில்லையாயி னும்) சிறந்து நிற்கையால், **வழா** – (அவை) மரபுவழுவென்று நீக்கப்படாவாம். (எனவே, வழுவமைதி என்று கொள்ளப்படுமென்பதாயிற்று).

**உம் :–** **மீ மீசை** ஞாயிறு, புனிற்றிளங்கன்று எனவரும்.
**நாகிளங்கமுகு, உயர்ந்தோங்கு** பெருவரை

குறிப்பு :–

சிறந்து நிற்கையாவது – செவிக்குச் சொல்லின் பந்தோன்ற நிற்றல். இனி, 'சிறப்பினின்' என்பதற்கு – சிறப்புப்பொருளைத் தருதலால் எனப்பொருள்கொண்டு முறையே மிகவும் மேலிடத்துள்ள, மிகவும் இளமையான, மிகவும் உயர்ந்த எனச்சிலர் பொருள் கூறுவராயினும், 'சிறப்பினின்' என்பதற்குச் சொல்லின்பந்தோன்றி நிற்றலன்றி வேறுபொரு ளின்றென உரையாசிரியர்கள் கூறிப்போந்தமையானும், 'மீ மிசை' என்றற் றொடக்கத்தவற்றுக்கு 'மிகவும் மேலிடத்துள்ள', 'மிகவும் இளமையான' எனப்பொருள்கூறின், 'மீ' 'புனிறு' என்பவற்றிற்கு 'மிகவும்' எனவும் வேறு பொருள் தோன்றலானும் அது சிறப்பன்றென்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:** **ஒருபொருட் பன்மொழி** – ஒரு பொருளைக் குறித்து வரும் பலசொற்கள், **சிறப்பினின்** – அவ்வாறு வருதற்கோர் காரணமின்றாயினுஞ் சிறந்து நிற்கையால், **வழா** – அவை வழுவென்று நீக்கப்படாவாம், எ–று.

சிறந்து நிற்றல் செவிக்குச் சொல்லின்பந் தோன்ற நிற்றல்.

**வ–று.:–**

மீமிசைஞாயிறு, புனிற்றிளங்கன்று, நாகிளங்கமுகு, உயர்ந்தோங்கு பெருவரை, குழிந்தாழ்ந்த கண் என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– ஒருபொருட் பல்பெயர் – ஒருபொருளின் மேற் பலபெயர் சொல்லும்போது, – பிரிவு இல வரையார் – அப்பொருளின்றும் பிரிதலில் லாதனவற்றை நீக்காது கொள்ளுவர் புலவர், எ–று.

எனவே, பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

வ–று.:–

ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்; பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப், பலபெயரும் ஒருபொருளின்மேற் சென்று, கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்த பொருளை விளக்கி நின்றன.

பகையியல் பாயிலி படைக்கை மறவன்; எழுத்துணர்வில்லோ னிலக் கணநிறைகடல் எனவரிற், பகை யியல்பாகவே யில்லாதவனைப் படைக்கை மறவனென்றலும், எழுத்துணர் வில்லாதவனை இலக்கண நிறைகடலென்றலுங் கூடாமையாற் பிரிந்து வழுவாமென்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– ஒருபொருள் – ஒருபொருளின் மேல், பல பெயர் – பல பெயர் சொல்லும் போது, பிரிவு இல – (அப்பொருளின்றும்) பிரிதலில்லாதவற்றை, வரையார் – நீக்காமற் கொள்வர், புலவர், எ–று.

எனவே, பிரிவுள்ளவற்றை நீக்குவ ரென்றதாயிற்று.

உ–ம்.:–

'ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்', 'பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான்'' என்பன பிரிவிலவாய், பல பெயரும் ஒருபொருளின்மேற் சென்று, கேட்போர்க்குச் சொல்லுவான் குறித்த பொருளை விளக்கி நின்றன.

"பகையியல்பாயிலி படைக்கை மறவன்", "எழுத்தறி வில்லோ னிலக்கண நிறைகடல்" என வந்தால், பகை இயல்பாகவே இல்லாதவனைப் படைக்கை மறவ னென்றலும்,

எழுத்தறிவில்லாதவனை இலக்கண நிறைகடலென்றலும் கூடாமையால், பிரிந்து வழுவா மென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு ஒருபொருளையே குறித்து வரும் பலபெயர்கள் வேறுபடாமல் அப்பொருளையே சுட்டாய் நின்று உணர்த்துமாயின், அவற்றை நீக்காமல் கொள்வர் என்றும் பொருள் கொள்ளலாம்;

உ—ம்.:

"நற்பூங் கழலான் இருதிங்கள் நயந்த வாறும்
கற்பாடழித்த கனமாமணித் தூண்செய் தோளான்,
வெற்பூடறுத்து விரைவின் நெறிக் கொண்டவாறும்"

என்ற இடத்தில், 'கழலான்' என்னும் பொருட்பெயரையே பின் 'தோளான்' என்பது குறித்து, சொல்லுவான் குறிப்பால் அவன் என்னுஞ் சுட்டுப்பெயரின் தன்மையாய் நின்றவாறு காண்க.

## பவானந்தம் பிள்ளை

இ—ள்.:— ஒருபொருட் பன்மொழி — ஒருபொருளைக் குறித்து வரும் பலசொற்கள், சிறப்பினின் — (அவ்வாறு வருதற்கோர் காரணமின்றாயினுஞ்) சிறந்து நிற்கையால் வழா — அவை வழுவென்று நீக்கப்படாவாம். எ—று.

சிறந்து நிற்றல் செவிக்குச் சொல்லின்பந் தோன்றநிற்றல்.

(உ—ம்.)

மீமிசைஞாயிறு; புனிற்றிளங்கன்று; நாகிளங்கமுகு; உயர்ந்தோங்கு பெருவரை; குழிந்தாழ்ந்த கண்.

இவை செவிக்கின்பந் தோன்ற நிற்றல் காண்க. (இவை மிகவும் மேலிடத்திலுள்ள ஞாயிறு, மிகவும் இளமையான கன்று, மிகவும் இளமையான சமுகு, மிகவும் உயர்ந்த வரை, மிகவும் உட்குழிந்த கண் என மிகுதி தோன்ற நின்றன எனக் கொள்வது முண்டு. அவ்வாறு கொள்ளின் ஒருபொருள் குறித்துப் பலமொழிகள் வருதல் காரணம் பற்றியதேயாம் என்பதுணர்க.)

## கா. நமச்சிவாய முதலியார்

ஒரு பொருள் — ஒரு பொருளைக் குறித்து வருகின்ற, பல் **மொழி** — பல சொற்கள், சிறப்பினின் — சிறந்து நிற்கையால், வழா — அவை வழுவென்று நீக்கப்படாவாம்.

சிறந்து நிற்றல்— செவிக்குச் சொல்லின்பம் தோன்ற நிற்றல்.

உதாரணம்

1. மீமிசை ஞாயிறு,
2. புனிற்றிளங் கன்று,
3. நாகிளங் கமுகு.

## மோசகு பொன்னையா

ஒரு பொருளையே குறித்துவரும் பல பெயர்கள் அப்பொருளையே வேறுபாடின்றிச் சுட்டி உணர்த்தி நிற்பின், அவற்றை நீக்காது கொள்வர் பலவர் எ–று.

எனவே, பொருள் வேறுபட வரும் பல் பெயர்களைப் புலவர் நீக்குவர் எனக் கொள்க.

எ–டு.

**வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்**
**தையலாய் நீயின்று நல்கினை நல்காயேற்**
**கூடலார் கோவொடு நீயும் படுதியே**
**நாடறியக் கெளவை யொருங்கு.**

வையைக்கிழவன் என்னும் பெயரும், கூடலார்க்கோ எனச் சுட்டின் பொருளாக வந்த பெயரும் வேறுபாடின்றி ஒரு பொருளையே குறித்து வந்தன.

வரையா என்றும் பாடம்

எழுத்தறிவில்லான் இலக்கண நிறைகடல் வந்தான், என்றவிடத்து, எழுத்தறிவில்லாதவன் இலக்கண நிறைகடலாதல் இல்லையாதலின், பொருள் வேறுபாடின்றிச் சுட்டி உணர்ந்தாமையின், அதனைப் போன்றவற்றைப் புலவர் வரைத்ந்தொதுக்குவர் எனக் கொள்க.

இந்நூற்பாவிற்கு 'ஒரு பொருளின்மேல் பலபெயர் கூறுங்கால், அப்பொருளினின்றும் பிரிதலில்லாதவற்றை நீக்காது கூறுவர் புலவர்' என உரைப்பது பொருந்தாது. அவ்வாறு பொருளுரைப்பது, நூலுக்குக் கூறியது கூறல் என்னும் குற்றத்தை ஆக்குவதாகும். என்னை?

ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி

ஒருவினை கொடுப்ப தனியு மொரோவழி.

என்ற விடத்து அதனைக் கூறி, அது முடியுமாறுங் கூறி விடுத்தார் ஆசிரியர் ஆதலின் என்க.

**398. இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.**

இனைத்து என்று அறி பொருள் உலகின் இலாப் பொருள்
வினைப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டும்.

iṉaiṭṭu eṉūu aūi poruḻ ulakiṉ ilā poruḻ
viṉaippatuṭṭu uraippiṉ ummai vēṇtum

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Um of totality**

The um of totality is required is assertions regarding objects whose totals are well known as well as those that do not exist in the universe.

## ஒப்புமைப் பகுதி

இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்

(தொல்.சொல்.:33)

மன்னாப் பொருளும் அன்ன இயற்றே

(தொல்.சொல்.:34)

.......எண்ணி
இனைத்தென் றறிந்த சினைமுதற்பேர்க் கெல்லாம்
வினைப்படுப்பின் உம்மை மிகும்

(நேமி.:36:2–4)

இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
வினைப்படு தொகுதிக் கண்ணும் பொருண்முத
லவற்றொடு படுத்தற் கண்ணு முறையே
முற்று மெச்சமு மாயீ ரும்மையும்
தெற்றெனப் பெறுதல் செவ்வி தென்ப.

(இ.வி.:315)

வரைப்படும் எண்ணும் வையகத்து இல்லவும்
வினைப்படின் உம்மை வேண்டும்.....

(தொ.வி.:135:1–2)

**இனைத்தென வறிந்த சிலனைக்கு முதற்கும்**
**வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்**

(மு.வீ.:710)

**இல்லாப் பொருளு மன்ன வியற்றே**

(மு.வீ.:711)

## மயிலை நாதர்

எ–ன், மரபுவழுவற்க வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– இத்துணைத்தென்று வரையறுத்து உணர்த்தப்படும் பொருளாதி எப்பொருள்களும் உலகின்கண் இல்லாத பொருள்களும் வினையொடு கூட்டிச் சொல்லுங்காலை உம்மை கொடுத்துச் சொல்லு, எ–று.

வ–று.:–

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், தேவர்முப்பத்து மூவரும் வந்தார், நமர் நால்வரும் வந்தார், உலகமூன்றும் ஒருங்குணர்ந் தான், கால மூன்றும் கண்டான், கண்ணிரண்டும் சிவந்தான், குணமூன்றும் கூறினான், தொழிலாறும் தோற்றினான் எனவும், பவளக்கோட்டு நீலயானை பண்டுமில்லை, முயற் கோடும் ஆமைமயிரும் அம்மிப்பித்தும், துன்னூசிக்குடரும் ஈங்குமில்லை, என்[1]அகங்கைக்கும் மயிரில்லை, க்கழுதைக்கும் கோடில்லை (நேமி. சொல். 11 உரை) எனவும் வரும்.

"கடுவன் முதுமகன் கல்லா [2]மூலற்கு
வதுவை வந்த வன்பறழ்க்குமரி, இருதோடோழர்"
"எருமை நாற்கால் நீர்க்கீ ழவ்வே"
[3]"கண்களியாச் சென்றமர்ப்பக் கைநாஞ்சின் மேலசைஇ
ஒண்குழை யொன்றொல்கி யெருத்தலைப்ப"

என்றற் றொடக்கத்தன செய்யுள் விகாரத்தால் வந்த உம்மை தொக்கனவெனக் கொள்க.

இனி, தமிழ்நாட்டு மூவேந்தர் வந்தார், பவழக்கோட்டு நீலயானை பண்டில்லையெனின், [4]வேறும் அரசருளரெனவும் இன்று இவ்வியானை உண்டெனவும் வரும்.

---

பாட வேறுபாடு:–

1. அங்கைக்கும்
2. மூவற்குவதுவையமைந்த
3. கண்களியாற்
4. வேறரசர்

'வினைப்படுத் துரைப்பி னும்மை, வேண்டும்' எனவே, வினைப்படாதவிடத்து உம்மை வேண்டுவனவும், வேண்டா தனவும் உளவெனக் கொள்க.

இவையிரண்டும் சே, இவை இரண்டும் பசு எனவும், வீடொன்று, அறமிரண்டு, குற்றமூன்று, பொருள்நான்கு, பொறியைந்து எனவும் வரும். பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்
## சிவஞானமுனிவர்

எ—னில், மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்—ற்று.

இ—ள்.:— இத்துணைத்து என்று வரையறை உணரப்படும் பொருளும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும் *ம்அவற்றைம்* வினைப்படுத்துக் கூறுங்கால், முற்றும்மை வேண்டிநிற்கும், எ—று.

'பொருள்' என வேறு விதந்தமையின் உலகு என்றது ஒழிந்த காலம் அனைத்தினையும் இடமனைத்தினையும் என்பதூஉம், இனைத்தென்றறிபொருள் என்றமையானும் உலகு எனக் காலமனைத்தினையும் இடமனைத்தினையும் கூறுதலானும் உம்மை என்றது முற்றும்மையை என்பதூஉம் பெற்றாம்.

வ—று.:—

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், உலகம் மூன்றினையும் ஒருங்கு உணர்ந்தான், நின்கண் வைத்த பொருள் நூற்றினையும்அவ்விருவருக்கும் கொடு, இறைவற்குக் கண்மூன்றும் முச்சுடர், இறைவற்கு உடை போர்வை இரண்டும் தோல் என இனைத்தென்றறிபொருள் வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டி நின்றன. இவற்றுள் முச்சுடர், தோல் என்பன பெயராலோ எனின், ஈண்டு வினை என்றதூஉம் 'சுட்டுப்பெயர் பின்வரும் வினையெனின்' (394) என்றது போலும். பவளக் கோட்டு நீலயானை என்றும் இல்லை, முயற்கோடு ஆகாயப்பூ என்றும் இல்லை, மண்ணிற் படம் என்றும் இல்லை, நூலிற்கடம் என்றும் இல்லை, ஒளிமுன் இருள் என்றும் இல்லை என உலகின் இல்லாதபொருள் வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டி நின்றன. எவ்விடத்தும் இல்லை எனவும் ஒட்டுக.

உம்மை வரும் என்னாது 'உம்மை வேண்டும்' என்றமையான், அஃது இசையெச்சமாய் நிற்க அதனை வேண்டுவனவாய் "வன்பறழ்க் குமரி இருதோள் தோழர்பற்ற" "எருமை நாற்கால் நீர்க்கீழவ்வே" எனவும்; மண்ணிற் படம் இல்லை, நூலிற் கடம் இல்லை, ஒளிமுன் இருள் இல்லை எனவும் வரும்.

இவ் இல்பொருளின்கண் காலப்பெயர் இடப்பெயர்களும் உடனெஞ்சி நின்றன. இவ்வாறு வருதல் கருதாது செய்யுள் விகாரமாக உம்மை தொக்கது என்பாரும் உளர். உலகின் இல்லாப்பொருள் உள்பொருள்போல் காலத்தோடு பட்டதன்று என்பது தோன்ற என்றும் இல்லை என்னாது காலத்தோடு பட்டதுபோல வைத்துப் பவளக்கோட்டு நீலயானை பண்டும் இல்லை என எச்சவும்மை தந்து உதாரணம் காட்டுவார்; அது யானை குடத்தினும் இல்லை குழிசியினும் இல்லை என்றது போலும் என்க.

இரட்டுறமொழிதலான், உலகின்கண் நிலையில் பொருள் வினைப்படுத்துரைப்பின் எச்சவும்மை வேண்டும் எனவும், பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு:– செல்வமும் நில்லாது, செல்வமும் பொய் எனவரும். செல்வம் நில்லாது, செல்வம் பொய் என எச்சவும்மை கொடாது வாளாகூறின், இளமை யாக்கை முதலியன நிலைபெறும் எனவும் மெய்ப்பொருள் எனவும் பொருள்படும் என்க. உம்மை வேண்டும் என்றதனால், செல்வம் நில்லாது செல்வம் பொய் என உம்மை எஞ்சி நிற்றலும் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், மரபு வழுவற்கவெனக் கூறுகின்றது.

இ–ள்.: **இனைத்தென் றறிபொருள்** – இத்துணைத்தென்று வரையறுத்து உணரப்படும் பொருளாதி எப்பொருள்களும், **உலகினிலாப் பொருள்** – உலகின்கண் இல்லாத பொருள்களும், **வினைப்படுத்துரைப்பின்** – வினையொடு கூட்டிச் சொல்லுமிடத்து, **உம்மை வேண்டும்** – உம்மை கொடுத்துச் சொல்லவேண்டும், எ–று.

உ–ம்.:–

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், தேவர் முப்பத்து மூவரும் வந்தார், தேவர் நால்வரும் வந்தார், உலகமூன்று ஒருங்குணர்ந்தோன், கால மூன்றும் கண்டான், கண்ணிரண்டும் சிவந்தான், குணமூன்றும் கூறினான், தொழிலாறும் தோற்றினான். ...................... அறுவகைப் பொருட்பெயர் மேலும் உம்மை வந்தன. இவை உளபொருள். இனி இலபொருட்டு உம்மை வருமாறு. பவளக்கோட்டு நீலயானை யாண்டுமில்லை, முயற்கோடும் ஆமை மயிரும், ஆகாயப் பூவும், மலடி மகனும், காக்கைக் கொம்பும், கருங்கற் சதையும், அம்மிப் பித்தும், துன்னுசிக்குடரும், ஈங்குமில்லை, என் அங்கைக்கும் மயிர் இல்லை. "இருதோ டோழர் பற்ற",

"எருமை நாற்கால் நீர்க்கீழ் நின்றன" எனச் செய்யுள் விகாரத்தான் உம்மை தொக்கன என்க.

இனித் தமிழ் நாட்டு மூவேந்தர் வந்தார் எனின் வேறும் அரசர் உளர் எனவும், பவளக் கோட்டு நீலயானை பண்டில்லை எனில் இன்றுண்டு எனவும் உம்மை கொடாவிடில் இப்பொருள் பட்டு வழுவாமென்க.

"வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்" எனவே வினைகொடாவிடத்து உம்மை வேண்டியும் வேண்டாதும் வரும் என்க.

இவை இரண்டும் சே, இவை இரண்டும் பசு, ஈரீற்று, அறமிரண்டு, குற்றமூன்று, பொருணாலு, பொறியைந்து. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** மரபு வழுவாமற் காத்தலுணர்த்துகின்றது.

**இ–ள்.: இனைத்தென்று** – இவ்வளவினதென்று, **அறிபொருள்** – அளவறியப்படுகிற பொருளும், **உலகினிலப்பொருள்** – எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், **வினைப்படுத்து ரைப்பின்** – வினைப்படுத்துச் சொல்லும்போது, **உம்மை** – முற்றும்மையை, **வேண்டும்** – வேண்டி நிற்கும், எ–று.

**வ–று.:–**

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், இறைவர்க்குக் கண்மூன்று முச்சுடர், இவ்வளவென்றறி பொருள்கள் முற்றும்மை வேண்டி நின்றன. முயற்கோடா காயப்பூவென்றுமில்லை, ஒளிமுன்னிருளெங்குமில்லை, உலகினிலாபொருள்கள் முற்றும்மை வேண்டிநின்றன.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

முற்றும்மைவேண்டும் பொருளு மிடமுங் கூறுஞ் சூத்திரம் யாது?

இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்

வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.

(இனைத்து என்று அறிபொருள் உலகின் இலாப்பொருள் வினை ப்படுத்து உரைப்பின் உம்மை வேண்டும்.)

இ–ள் இவ்வளவினதென்று வரையறையுணரப்படும் பொருளும்

எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாதபொருளும் வினைப்படுத்துச் சொல்லும்போது முற்றும்மையை வேண்டிநிற்கும். எ–று.

இனைத்தென்றறிபொருளாவது யாது?

கேட்போரான் இத்துணையதென்னும் வரையறையுடைபொருள்.

வ–று.:–

(1) தமிழ்நாட்டுமூவேந்தரும் வந்தார்; இறைவற்குக் கண் மூன்று முச்சுடர்; வேதநான்குமுணர்ந்தான் என இனைத் தென்றறிபொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டிநின்றன.

(2)முயற்கோடு ஆகாயாப்பூவென்றுமில்லை; ஒளிமுன் னிருளெங்கு மில்லை என உலகினிலாப்பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன.

இவை உம்மைவேண்டிநிற்பது எப்போது?

வினைப்படுத்துரைக்கும்போதேயாம்.

வினைப்படுத்துவரையாவிடத்து எவ்வாறாம்?

அவை முற்றும்மைவேண்டா.

உ–ம். "பன்னிருதடந்தோள்" "முத்தமிழ்" "ஐந்தலைநாகமுடன்றது."

## முகவை இராமனுச கவிராயர்

இது மரபு வழாமைக் காத்தலுணர்த்திற்று.

இ–ள்.: இனைத் தென்றறி பொருள் – இவ்வளவென்று வரையறை யுணரப்படும் பொருளும், உலகினிலாப் பொருள் – எவ்விடத்தும் எக்காலத்தும் இல்லாத பொருளும், வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும் – வினைப்படுத்துச் சொல்லும் போது முற்றும்மையை வேண்டி நிற்கும், எ–று.

'பொருள்' என வேறு பிரித்ததினாலே, 'உலகு' என்றது, மற்ற இடமனைத்தையுங் காலமனைத்தையும் எனவும், 'இனைத்தென்றறி பொருள்' என்றதினாலும் இடமனைத்தையுங் காலமனைத்தையுங் கூறுதலாலும் 'உம்மை'யென்றது முற்றும்மை யெனவும், 'இனைத்தென்றறி பொருள்' என்றது பொருளாதி யாறையுமெனவுங் கொள்க.

வ–று.:–

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார், வேதநான்கும் உணர்ந்தான் – பொருள். உலகமூன்றும் ஒருங்குணர்ந்தான், 'திசையொரு

நான்கினுஞ் சீர்திகழ் பெம்மான்' இடம். 'காலமூன்றுங் கண்டோன்' – 'சிறுபொழு தாறுஞ் சிறந்ததிம் மருதம்' காலம். கண்ணிரண்டுஞ் சிவந்தன, தோளிரண்டும் பூரித்தன– சினை. சுவையாறு முடைத்திவ் வடிசில், வண்ண மைந்து முடைய திக்கிள்ளை–குணம். தொழில் மூன்று முடையோன் முதல்வன், கதியைந்து முடைத் திக்குதிரை – தொழில். இவை யினைத்தென்றறி பொருள் முற்றும்மை பெற்றவாறு காண்க. இனி இவ்வளவென்னாது இவ்வளவை யுடையதென்னும் பொருள்பட, 'இனைத்தென் றறிபொருள்' என்றதினாலே, பொருட்பெயர் முன்னிற்று இனைத்தென்னுமளவுப்பெயர் உம்மை பெற்று வருதலும், அளவுப்பெயர் முன்னிற்கப் பொருட்பெயரும்மை பெற்று வருதலுங் கொள்க. அவை வருமாறு:– 'நின்கண் வைத்த பொன் நூற்றையுங்கொடு, நின்கண் வைத்த நூறு பொன்னையுங் கொடு, வேதநான்கு முணர்ந்தான், நான்கு வேதமுணர்ந்தான், கண்ணிரண்டுஞ் சிவந்தன. இரண்டு கண்ணுஞ் சிவந்தன என வரும். கண்ணிரண்டுங் குருடு, காதிரண்டுஞ் செவிடு எனப் பெயர் கொண்டவழி யும்மை பெற்றதென்னெனின், பெயராகவாயினும் வினையாகவாயினும் முடித்து நிற்குஞ் சொல்லொடு படுதலே யிங்கே வினப்படுதலாதலின் அவையும் வினைப்படுத்துரைத்தலேயாமென்க. பவளக் கோட்டுநீலயானை யென்றுமில்லை, முயற்கோடு, ஆமை மயிர்க்கம்பல மென்றுமில்லை, ஒளிமுன்னிருளென்றுமில்லை, மண்ணாற் செய்த படமும் நூலாற் செய்த கடமு மென்றுமில்லை – (படம் – வத்திரம், கடம் – பானை,) என உலகின் இல்லாப்பொருள் வினைப்படுத்துரைத்த வழி யும்மை வேண்டி நின்றவாறு காண்க. எவ்விடத்துமில்லை யெனவும் இவற்றோடு ஒட்டிக் கொள்க.

உம்மை வருமென்னாது 'உம்மைவேண்டு'மென்றதினாலே, அந்த உம்மை குறைந்து நிற்க, அதனை வேண்டுவனவாய் நிற்பனவும், அதனோடு காலப்பெயரிடப் பெயர் குறைந்து நிற்பனவுங் கொள்க. வருமாறு:– 'இருதோள் தோழர் பற்ற', 'எருமை நாற்கால் நீர்க்கீழவ்வே' எனவும் மண்ணிற் படமில்லை, நூலிற் கடமில்லை, ஒளிமுன்னிருளில்லை எனவும் வரும். இனி, இரட்டுற மொழிதலென்னும் உத்தியால், உலகினிலாப் பொருளென்பதை, உலகின் நில்லாப்பொருளெனப் பிரித்து, உலகத்தில் நிலையில் பொருள்களை வினைப்படுத்துரைப்பின் எச்சவும்மை வேண்டுமெனவும் பொருளுரைத்துக் கொள்க. அவை

வருமாறு:– யாக்கையும் நில்லா தெனவே இளமையுஞ் செல்வமும் நில்லா தெனவும், யாக்கையும் பொய் யெனவே இளமை செல்வ முதலியவும் பொய்யெனவும் பொருளுணர்த்தி யெச்சவும்மையாய் நின்றவாறு காண்க. இன்னும் அவ்விலேசினாலே இல்பொருள்களும் எச்சவும்மை பெறுதல் கொள்க. குருடுகொண்டல் பகலு மில்லை எனின், இரவு மில்லை எனவும் பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளுமில்லை யெனின் மற்ற இடங் களிலுமில்லை யெனவும் பொருள் தந்து எச்சவும்மை பெற்றவாறு காண்க. பிறவுமன்ன.

**"இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு**
**வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்"** எனவும்

**"மன்னாப் பொருளு மன்ன வியற்றே"**

எனவும், ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. பொருளும் பொருளும் உம்மை வேண்டும் என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **இனைத்து என்று அறிபொருள்** – இவ்வளவென்று அளவறியப்படும் பொருளையும், **உலகின் இலாபொருள்** – (எக்காலத்தும்) எவ்விடத்து மில்லாத பொருளையும், **வினைபடுத்து உரைப்பின்** – முடிக்குஞ் சொல்லோடு கூட்டிச் சொல்லும்போது (அவை), **உம்மை வேண்டும்** – முற்றும் மையை வேண்டிநிற்கும்.

குறிப்பு :– 'பொருள்' எனவே, 'உலகு' என்றது ஒழிந்த காலம் இடமனைத்தையும் என்பதும், 'இனைத்தென் றறிபொருள்' என்றதனாலும், 'உலகு' எனக் காலமிட மனைத்தையும் கூறலாலும் 'உம்மை' என்றது, முற்றும்மை என்பதும் பெறப்பட்டன.

உம் :– கால மூன்று முணர்ந்தோர் – இனைத்தென்றறிபொருள்.
ஒளிமுன் இருள் என்று மில்லை – உலகினிலாப்பொருள்.

இனி, 'இவ்வளவு' என்னாது 'இவ்வளவை யுடையது' என்னும் பொருள்பட 'இனைத்தென்றறிபொருள்' என்றதனால் பொருட்பெயர் முன்னிற்க 'இனைத்து' என்னு மளவுப்பெயர் உம்மைபெற்றுவருதலும், அளவுப் பெயர் முன்னிற்கப் பொருட்பெயர் உம்மைபெற்றுவருதலுங் கொள்க. அவை வருமாறு : நின்கண் வைத்தபொன் நூற்றையும் கொடு, நின்கண்வைத்த நூறு பொன்னையுங் கொடு.

இங்கு 'வினை' என்றது முடிக்குஞ்சொல் மாத்திரையாய் நின்றமையின் 'கண்ணிரண்டுங்குருடு' எனப்பெயர் கொண்டவழியும் உம்மை பெற்று முடியுமென்க. இனி, இரட்டுற மொழிதல் என்னு முத்தியால் உலகில் நிலாப்பொருள் எனப்பிரித்து 'உலகில்' நிலையில்லாப்பொருள்களை வினைப்படுத்துரைப்பின் எச்ச உம்மைவேண்டும்' எனப்பொருள் கூறலுமாம்;

உ-ம் :-

செல்வமும் நில்லாது, செல்வமும் பொய் எனவரும். 'உம்மைவரும்' என்னாது 'வேண்டும்' என்றமையால், அஃது இசையெச்சமாய் நிற்க அதனை வேண்டுவனவாய், ஒளிமுன் இருள்இல்லை, நூலிற்கடமில்லை எனவரும். (கடம்-பானை) இவ்வாறு வருதலில் உம்மை விகாரத்தால் தொக்கதென்பாரு முளர்.

ஐந்தலைநாகம், அறுதொழிலாளர் என்றவிடங்களில் இனைத்து என்றறிந்த பொருளாயினும் முடிவின்றி வந்தமையால் உம்மை வேண்டா வாயின வென்றறிக.

## ஆறுமுக நாவலர்

இ-ள்.: இனைத்து என்று அறிபொருள் - இவ்வளவினதென்று வரையறை யுணரப்படும் பொருளும், உலகின் இலாப்பொருள் - எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், வினைப்படுத்து உரைப்பின் - வினைப்படுத்துச் சொல்லும்போது, உம்மை வேண்டும் - முற்றும்மையை வேண்டி நிற்கும், எ-று.

வ-று.:-

(1) தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்; இறைவற்குக் கண் மூன்று முச்சுடர்; வேதநான்கு முணர்ந்தான் என இனைத்தென்றறி பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன.

(2)முயற்கோடாகாயப்பூ வென்றுமில்லை; ஒளிமுன்னிருளெங்கு மில்லை என உலகினிலாப் பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன.

## வ. குமாரசாமிப்புலவர்

இ-ள். இனைத்து என்று அறிபொருள் - இவ்வளனிதென்று வரையறை யுணரப்படும் பொருளும், - உலகின் இலாப்பொருள் - எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், - வினைப்படுத்து உரைப்பின் - வினைப்படுத்துச் சொல்லும்போது, - உம்மை வேண்டும் - முற்றுமையை வேண்டி நிற்கும். எ-று.

வ–று.:–

(1) தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்; இறைவற்குக் கண்மூன்று முச்சுடர்; வேதநான்கு முணர்ந்தான் என இனைத்தென்றறி பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன.

வ–று.:–

(2) முயற்கோடாகாயப் பூவென்றுமில்லை; ஒளிமுன்னிருளெங்கு மில்லை என உலகினிலாப் பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன.

(சூ) "இனைத் தெனவறிந்த சினைமுதற் கிளவிக்கு, வினைப்படுதொகுதி யினும்மை வேண்டும். எ–ம். மன்னாப் பொருளுமன்னவியற்றே". எ–ம் கூறினார் தொல்காப்பியனார். (சஅ)

## வை.மு.சடகோபராமாநு சாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– இனைத்து என்று அறி பொருள் – இவ்வளவென்று அளவறியப்பட்ட பொருளையும், உலகின் இலா பொருள் – (எக்காலத்தும்) எவ்விடத்தும் இல்லாத பொருளையும், வினை படுத்து உரைப்பின் – முடிக்குஞ் சொல்லோடு கூட்டிச் சொல்லும்போது, (அவை), உம்மை வேண்டும் – முற்றும்மையை வேண்டி நிற்கும்; எ–று.

உ–ம்.:–

(1) 'இருவினையும் சேரா', 'தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்', 'வேதம் நான்கும் அறிந்தான்' – இனைத்தென்று அறி பொருள்கள் முற்றும்மை வேண்டி நின்றன.

(2) 'முயற்கோடு ஆகாயப்பூ என்றும் இல்லை', 'ஒளிமுன் இருள் எங்கும் இல்லை' – உலகில் இலாப்பொருள்கள், முற்றும்மை வேண்டின. இவ்வும்மை சிலவிடத்து, 'இருதோள் தோழர் பற்ற', 'ஒண்குழை ஒன்றொல்கி' எனச் செய்யுள் விகாரத்தால் தொக்கு நிற்பதும் உண்டு.

இனி, உலகில் நில்லாத பொருளென்றும் பிரித்து உரைக்கலாம்.

'வினை' என்றது, முடிக்குஞ்சொல் என்ற மாத்திரமாய் நிற்பதனால், கண் இரண்டும் குருடு, எருது இரண்டும் கிழம் எனப் பெயர்கொண்டு முடியும் போதும் உம்மை பெறுமெனக் கொள்க.

ஐந்தலைநாகம், நான்மறை முதல்வர் என்ற இடங்களில், இனைத்தென்று அறிந்த பொருளாயினும், வினைப்படுத்தி உரையாமல், உம்மை வேண்டாவாயின என அறிக.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– இனைத்து என்று அறிபொருள் – இவ்வளவினதென்று வரையறை யுணரப்படும் பொருளும், உலகின் இலாப்பொருள் – எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், வினைப்படுத்து உரைப் பின் – முடிக்குஞ்சொல்லோடு கூட்டிச் சொல்லும்போது, உம்மை வேண்டும். முற்றும்மையை வேண்டிநிற்கும். எ–று.

உ–ம்.:–

(1) தமிழ்நாடு மூவேந்தரும் வந்தார்; இறைவற்குக் கண்மூன்றும் முச்சுடர்; வேதநான்கும் உணர்ந்தான் – என 'இனைத்தென்றறி பொருள்கள், வினைப்படுமுத்துச் சொல்லும்போது முற்றும்மை வேண்டி நின்றன.

(2) முயற்கோடாகாயப்பூ எனறும் இல்லை; ஒளிமுன்னிருள் எங்கும் இல்லை – என உலகினிலாப் பொருள்கள், வினைப் படுத்துச் சொல்லும்போது முற்றும்மை வேண்டி நின்றன.

'நால்வேதம் ஆறங்கம் ஆனாய் நீயே' 'மூவுலகங் காக்கும் முதல் வாவோ' என இவ்வும்மை சிலவிடங்களில் செய்யுள் விகாரத்தால் தொக்கு நிற்பது உண்டு.

'வினை' என்றது முடிக்குஞ்சொல் என்ற மாத்திரமாய் நிற்பதனால், கண் இரண்டும் குருடு, 'இறைவற்கு மூககண்ணும் முச்சுடர்' எனப் பெயர்கொண்டு முடியும்போது உம்மை பெறுமெனக் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) இனைத்து என்று – இவ்வளவின தென்று, அறி பொருள் – அளவு அறியப்படுகிற பொருளும், உலகின் இலாப் பொருள் – எக் காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், வினைப்படுத்து உரைப்பின் – வினைப்படுத்துச் சொல்லும்போது, உம்மை வேண்டும் – முற்றும்மையை வேண்டி நிற்கும். (எ–று)

(பொ–ரை.)

இத்தனை என்று வரையறை உணரப்படும் பொருளும், எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், அவற்றை வினைமுடித்துக் கூறுங்கால் முற்றும்மையை வேண்டிநிற்கும்.

(உ–ம்.)

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார். பொருள்.

வேத நான்கு முணர்ந்தார்.

உலக மூன்று மொருங்குணர்ந்தான். இடம்.

திசையொரு நான்குஞ் சீர்திகழ் பெம்மான்.

கால மூன்றுங் கண்டோன். காலம்.

சிறு பொழுதாறுஞ் சிறந்ததிம் மருதம்.

கண்ணிரண்டுஞ் சிவந்தன. சினை.

தோளிரண்டும் பூரித்தன.

சுவையாறு முடைத்ததிவ்வடிசில். குணம்.

வண்ணமைந்து முடையதிக்கிள்ளை.

தொழில் மூன்று முடைய முதல்வன். தொழில்.

கதியைந்து முடைய திக்குதிரை.

இனைத்தென் றறிபொருள் முற்றும்மை கொண்டன.

பவளக்கோட்டு நீலயானை யென்றுமில்லை.

முயற்கோடு ஆமைமயிர்க்கம்பல மென்று மில்லை.

ஒளிமுன் னிருளெங்கு மில்லை.

மண்ணாற் செய்த படமும் நூலாற் செய்த கடமு மென்றுமில்லை.

உலகினிலாப்பொருள் முற்றும்மை கொண்டன.

உம்மை வரும் என்னாது வேண்டும் என்றமையால், அவ்வும்மை இசை யெச்சமாய் நிற்க, மண்ணிற் படமில்லை; நூலிற் கடமில்லை, ஒளிமுன் னிருளில்லை எனவும், நிலையில் பொருளெனக் கொண்டு செல்வமும் நில்லாது, செல்வம் பொய் எனவும் கொள்க. (வினை என்றது முடிவினை.)

## கா. நமச்சிவாய முதலியார்

(1) இனைத்து என்று – இவ்வளவினதென்று, அறிபொருள் – அளவறியப்படுகின்ற பொருளும், (2) உலகின் இலாப்பொருள் – எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும், வினைப்படுத்து உரைப்பின் – வினைப்படுத்துச் சொல்லும்போது, உம்மை – முற்றும்மையை, வேண்டும் – வேண்டி நிற்கும்.

உதாரணம்

1. தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார்,
வேதம் நான்கும் உணர்ந்தார் — பொருள்.

உலக மூன்றும் ஒருங்கு உணர்ந்தான்
திசையொரு நான்குஞ் சீர்திகழ் பெம்மான் — இடம்.

காலம் மூன்றுங் கண்டோன்
சிறுபொழுது ஆறும் சிறந்ததிம் மருதம் — காலம்.

கண் இரண்டும் சிவந்தன
தோள் இரண்டும் பூரித்தன — சினை.

சுவை ஆறும் உடைத்து இவ் வடிசில்
வண்ணம் ஐந்தும் உடையது இக்கிள்ளை — குணம்.

தொழில் மூன்றும் உடைய முதல்வன்
கதி ஐந்தும் உடையது இக்குதிரை — தொழில்.

இனைத்தென் றறிபொருள் முற்றும்மை கொண்டன.

2. பவளக்கோட்டு நீலயானை என்றும் இல்லை.
முயற்கோடு, ஆமைமயிர்க்கம்பலம் என்றும் இல்லை.
ஒளி முன் இருள் எங்கும் இல்லை.
மண்ணாற்செய்த படமும் நூலாற்செய்த கடமும் என்றும் இல்லை.

உலகின் இலாப்பொருள் முற்றும்மை கொண்டன.

## மோசசு பொன்னையா

இவ்வளவினது என வரையறை உணரப்படும் பொருளையும், எக்காலத்தும், எவ்விடத்தும் இல்லாத பொருளையும் வினைமுடித்துச் சொல்லுங்கால், முற்றும்மை புணர்த்திக் கூறுக எ—று.

எ—டு.:—

1 இருவினையும் சேரா தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்
கண்ணிரண்டுஞ் சிவந்தன காலம் மூன்றுங் கண்டான்
இனைத்தென வரையறை உணரப்பட்ட பொருட்கள் வினைமுடிவில் முற்றும்மை பெற்றன.

2 பவளக்கோட்டு நீலயானை யாண்டும் இல்லை

முயற்கோடு, ஆகாயப்பூ என்றும் இல்லை உலகின் இல்லாப் பொருள் வினைமுடிவில் முற்றும்மை பெற்றன.

தொல்காப்பியர்,

**இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு**
**வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்,**
**மன்னாப் பொருளும் அன்ன இயற்றே,**

என விதித்தார். 'மன்னாப்பொருள் என்பதற்கு இளம்பூரணரும், சேனாவரையரும் 'இல்லாப்பொருள்' எனவும், நச்சினார்க் கினியரும், தெய்வச்சிலையாரும் 'உலகத்து நிலையில்லாத பொருள்' எனவும் உரை வகுத்துள்ளமையின், உலகினிலாப் பொருள் என்பதை உலகின் நி(ல்)லாப் பொருள் எனப்பிரித்து இரட்டுற மொழிதலால், ஒளியின் முன் இருளும் இல்லை; செல்வமும் நில்லாது என இவ்வாறு எடுத்துக்காட்டுவதும் ஒன்று.

உம்மை வரும் என்னாது, உம்மை வேண்டும் என்றதனால், உம்மை எஞ்சி நிற்க, 'வன்பறழ்க் குமரியிருதோ டோழர் பற்ற'; 'எருமை நாற்கா னீர்க்கீ ழவ்வோ' என இவ்வாறு வருவனவற்றையும் அமைக்க.

வினைப்படுத்துரைத்தல் என்பது சொன்முடித்துரைத்தல் என்னும் பொருளினது ஆதலின், வினையேயன்றி, கண் இரண்டும் குருடு; எருது இரண்டும் கிழம்; வீடிரண்டும் பாழ் என இவ்வாறு பெயர்ச்சொல் முடிக்குஞ் சொல்லாய் அமைவனவற்றையுங் கொள்க.

(48)

**399. செயப்படு பொருளைச் செய்தது போலத்**
**தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.**

**செயப்படு பொருளைச் செய்தது போலத்**
**தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே.**

seyappatuporuḻ ai seyṭaṭu pōla
ṭoḷiūpata kiḻaṭṭal um vaḷakkiṉ uḻ uriṭṭu ē

**இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)**

**Object expressed as subject**

It is also usual to convert the object into the subject by affixing to it the predicate of the latters.

## ஒப்புமைப் பகுதி

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே

(தொல்.சொல்.:246)

...... தன் வினையாற்
செய்யப் படும்பொருளைச் செய்ததெனச் சொல்லுதலும்
எய்தப் படும் வழக்கிற் கீங்கு

(நேமி.:90:2–4)

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே.

(இ.வி.:357)

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்த றொல்லியன் மரபே

(மு.வீ.:640)

எடுத்தமொழி இனம் செப்பலும் உரித்தே

(தொல்.சொல்.:60)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ–ள்.:– தற்செய்கை யின்றிப் பிறராற் செய்யப்படும் பொருளைத் தன்செய்கைத்துப் போலத் தொழிற்படக் கிளத்தலும் வழக்கடிப்பாட்டிற்கு உரித்து, எ–று.

எனவே, இலக்கணமன்றேனும் கருமத்தையும் கருவியையும் கருத்தாவாகச்சொல்லினும் 1அமைக வென்பதாயிற்று.

வ–று.:–

இல்லம் மெழுகிற்று, சோறுஅடாநின்றது, பொன் வரும் எனவும், சுரிகை குத்தும், எழுத்தாணி எழுதாநின்றது, வாள் எறியும் எனவும் காண்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மரபு வழுவமைப்பு உணர்–ற்று.

---

பாட வேறுபாடு:–

1.வழுவமைதியின் அமைக்க.

இ–ள்.: செயப்படுபொருளைக் கருத்தாவைப்போல வைத்து அதன்மேல் வினைமுதல்வினையேற்றிக் கூறுதலும் வழக்கின் கண் உரித்தாம், எ–று.

வ–று.:–

இம்மாடு யான் கொண்டது, இச்சோறு யான் கொடுத்தது, இவ்வெழுத்து யான் எழுதியது என வரும்.

உம்மையால் கருமத்தைக் கருத்தாவாக இவ்வாறு கூறுதலே யன்றிக் கருவி நிலம் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையும் என்பது பெற்றாம். அவை வருமாறு:– இவ்வெழுத்தாணி யான் எழுதியது, இவ்வீடு யான் இருந்தது, இத்தொழில் யான் செய்தது, இந்நாள் யான் பிறந்தது என வரும். இனி இல்லம் மெழுகிற்று, எழுத்தாணி எழுதிற்று என உதாரணம் காட்டுவாரும் உளர். இல்லம் மெழுகிற்று என்பதோர் வழக்கின்மையானும், நடத்த நடந்த தேரினைப்போல ஒருவன் எழுத எழுதியது எழுத்தாணியாதலின் அது தன் தொழிலே யன்றி ஒருவன் தொழிலன்று ஆதலானும் அவை காட்டாகா என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், செயப்படுபொருட்டு ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

இ–ள்.:– செயப்படு பொருளை – தனது செயலின்றிப் பிறராற் செயப்படும் பொருளை, செய்தது போல – தனது செய்கையுடையது போல, தொழிற்படக் கிளத்தலும் – அதனது தொழிற் பகுதியாகச் சொல்லுதலும், வழக்கினு ளுரித்தே – வழக்கடிப்பாட்டுக்கு உரித்து, எ–று.

இவை இலக்கணம் அன்றேனும் கருவியையும் கருமத்தையும் கருத்தாவாகச் சொல்லினும் அமையும் என்பது ஆயிற்று.

உ–ம்.:–

திரிகை சுற்றும், வாள் வெட்டும், எழுத்தாணி எழுதும் எனக் கருவி, முதலாகச் செய்தது போல் நின்றன. சோறு அடாநின்றது, இல்லம் மெழுகிற்று, கரி பாகமாயிற்று, சீலை அழுக்கடைந்தது, சீலை அழுக்கு நீங்கிற்று, செம்பு விளங்கிற்று என இவை செயப்படுபொருள்வினை வினைமுதலாகச் செய்தது போல் நின்றன.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வழுவமைதி யுணர்த்துகின்றது.

இ–ள்.: செயப்படுபொருளை – செயப்படுபொருளை, செய்ததுபோல –

வினைமுதலைப் போல வைத்து, தொழிற்பட—அதன்மேல் அவ் வினைமுதல் வினை யேற்றி, கிளத்தலும் – சொல்லுதலும், வழக்கினுள் – வழக்கினிடத்து, உரித்து – உரித்தாம், எ—று.

வ—று.:—

இம்மாடி யான் கொண்டது, இச்சோறி யான் கொடுத்தது, என வரும். உம்மையால், கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் மையுமென்பது பெற்றாம். அவை வருமாறு:— இவ்வெழுத்தாணி யானெழுதியது – கருவி, இவ்வீடி யானிருந்தது – இடம், இத்தொழில் யான்செய்தது – தொழில். இந்நாள் யான் பிறந்தது – காலம் என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை

செயப்படுபொருள் கருத்தாவா வழங்கப்படுதல் வழுவேயாயினும் அமைக்கவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

செயப்படு பொருளைச் செய்தது போலத்

தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.

(செயப்படுபொருளைச் செய்ததுபோலத் தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே.)

இ—ள்.: செயப்படுபொருளைச் செய்த கருத்தாவைப்போல வைத்து அதன்மேல் அவ்வினைமுதல் வினையேற்றிக் கூறுதலும் வழக்கினிடத்துரித்தாம். எ—று.

வ—று.:—

இம்மாடியான்கொண்டது; இச்சோறியான்கொடுத்தது; இவ்வெழுத்தியானெழுதியது; திண்ணை மெழுகிற்று என வரும்.

கிளத்தலுமென்ற உம்மையாற் கொள்ளக்கிடப்பது யாது?

கிளத்தலும் என்ற உம்மையினாலே, கருமத்தைக் கருத்தாவாகக் கூறுதலேயன்றி, கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவைவருமாறு: – இவ்வெழுத்தாணி யானெழுதியது—கருவி; இவ்வீடியானிருந்தது—நிலம்; இத்தொழில் யான் செய்தது—செயல்; இந்நாள் யான்பிறந்தது—காலம் எனவரும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபுவழுவமைதியுணர்த்திற்று.

இ–ள்.:– செயப்படு பொருளைச் செய்தது போல –செயப்படு பொருளைக் கருத்தாவைப் போல வைத்து, தொழிற்படக் கிளத்தலும் – அதன்மேல் வினை முதல் வினையை யேற்றிக் கூறுதலும், வழக்கினுளுரித்தே – உலகவழக்கின்கண் உரித்தாம், எ–று.

வ–று.:–

இம்மாடு நான்கொண்டது, இச்சோறு நான்கொடுத்தது, – இவ்வெழுத்து நானெழுதினது என வரும். 'கிளத்தலும்' என்ற உம்மையாற் கருமத்தைக் கருத்தாவாகக் கூறுதலுமன்றிக் கருவி நிலஞ் செயல் காலங்களையுங் கருத்தாவாகக் கூறுதலும்; ஏவும் வினைமுதலை இயற்றும் வினைமுதலாகக் கூறுதலுமுள வெனக் கொள்க. அவை வருமாறு:– இவ்வெழுத்தாணி நானெழுதியது – கருவி, இவ்வீடு நானிருந்தது – நிலம், இத்தொழில் யான் செய்தது – செயல், இந்நாள் யான் பிறந்தது – காலம், அரசனெடுத்த ஆலையம் – ஏவும் வினைமுதல், பிறவுமன்ன. கிளத்தலுமுரித்து என முடிக்க. (இச் சூத்திரம், ஆசிரிய வசனம்.)

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– செயப்படுபொருளை –, செய்ததுபோல – கருத்தாவைப் போலவைத்து தொழில்பட கிளத்தலும் – அதன்மேல் அக்கருத்தாவின் வினையை ஏற்கக்கூறுதலும், வழக்கினுள் – வழக்கிலே, உரித்து – உரியது.

உ–ம் :– இம்மாடு யான்கொண்டது
இச்சோறு யான்கொடுத்தது
இவ்வெழுத்து யானெழுதியது — செயப்படு பொருள் செய்தது போல் வந்தது.

குறிப்பு :– செயப்படுபொருளை * * * * * கிளத்தலும்' என்ற உம்மையால் கருவி நிலஞ்செயல் காலங்களையும் கருத்தாவாகக் கூறுதலும், ஏவும்வினைமுதலை இயற்றும் வினைமுதலாகக் கூறுதலும் உளவெனக் கொள்க.

உ–ம்:–

| | |
|---|---|
| இவ்வெழுத்தாணி யானெழுதியது | – கருவி. |
| இவ்வீடு யானிருந்தது | – நிலம். |
| இத்தொழில் யான்செய்தது | – செயல். |
| இந்நாள் யான் பிறந்தது | – காலம். |
| அரசனெடுத்த ஆலயம் | – ஏவும் வினைமுதல். |

கருவி முதலியவை கருத்தாவாக வருதற்கு 'இவ்வெழுத்தாணி எழுதிற்று' என்பது போன்ற உதாரணங்களைக் காட்டுவராயினும், ஒருவன் நடத்த நடந்த தேரினைப் போல,

ஒருவன் எழுத எழுதியது எழுத்தாணி யாதலின் அஃது அதன் தொழிலேயன்றி ஒருவன் றொழிலன்றாதலின் அவை உதாரணமாகாவென்க. இச்சூத்திரம் ஆசிரியவசனமாம்.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:** செயப்படு பொருளைச் செய்தது போல — செயப்படு பொருளைக் கருத்தாவைப் போல வைத்து, தொழிற்படக் கிளத்தலும் — அதன்மேல் அவ்வினை முதல்வினை யேற்றிக் கூறுதலும், வழக்கினுள் உரித்து — வழக்கினிடத்துரித்தாம், எ—று.

வ—று.:—

இம்மாடியான் கொண்டது; இச்சோறியான் கொடுத்தது; இவ்வெழுத்தி யானெழுதியது என வரும்.

**'கிளத்தலும்'** என்ற உம்மையினாலே, கருமத்தைக் கருத்தாவாகக் கூறுதலே யன்றிக், கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவை வருமாறு:— இவ்வெழுத்தாணி யானெழுதியது — கருவி; இவ்வீடியானிருந்தது — நிலம்; இத்தொழில் யான் செய்தது — செயல்; இந்நாள் யான் பிறந்தது — காலம் என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள்.:—** செயப்படு பொருளைச் செய்தது போல — செயப்படு பொருளைக் கருத்தாவைப் போலவைத்து, — தொழிற்படக் கிளத்தலும் — அதன்மேல் அவ்வினை முதல்வினையேற்றிக் கூறுதலும், — வழக்கினுள் உரித்து — வழக்கினிடத்துரித்தாம். எ—று.

வ—று.:—

இம்மாடி யான் கொண்டது; இச்சோறியான் கொடுத்தது; இவ்வெழுத்தியானெழுதியது என வரும்.

கிளத்தலும் என்ற உம்மையினாலே, கருமத்தைக் கருத்தாவாகக் கூறுதலேயன்றிக், கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவை வருமாறு : — இவ்வெழுத்தாணி யானெழுதியது — கருவி; இவ்வீடியானிருந்தது — நிலம்; இத்தொழில் யான் செய்தது — செயல்; இந்நாள் யான் பிறந்தது — காலம் எனவரும்.

இன்னும் பிரயோகவிவேக நூலார் "மருளறு காரணங்காரிஃபம் பேரொடு வந்துறமும், இருளறு மொண்குணப் பேர் குணிப் பேர்வினையோடியையும், பொருள்வினை மற்றோர்

பொருளினுந் தோன்றும் புலத்தொடுமாந், தெருளுறு பண்பு புலனிவை மாறியுஞ் சேர்ந்திடுமே.'' என்று கூறினர். இ–ள். காரணப்பெயர் காரியப் பெயராகியும், காரியப்பெயர் காரணப் பெயராகியும் மாறிவரும்; குணவினை குணிவினையாயும் வரும். ஒரு பொருளின்றொழில் அதனோடியைந்த பிறிதோர் பொருளோடும் வரும், இடத்து நிகழ் பொருளின்றொழில் இடத்தொடும் வரும், பண்பும் புலனும் மாறியும் வரும். எ–று. உ–ம். ''பிறப்பென்னும் பேதைமை'' பிறப்பிற்கேதுவாகிய பேதைமை இது காரியம் காரணமானது; தீவினையென்னுஞ் செருக்கு – தீவினையால்வருஞ் செருக்கு. இது காரணங் காரியமானது; இல்லதெனில்லவண்மாண்பானால்– மாண்புடையளானால் எனக் குணங் குணியானது; சிற்றினமஞ்சும் பெருமை – குணவினை குணிவினையானது. முன்னின்று பின்னோக்காச் சொல் இது ஒரு பொருளின் வினை மற்றோர் பொருளின் வினையானது. இந்தப் பானை நானாழியரிசி பொங்கும் இது இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின் மேல் நின்றது.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– செயப்படுபொருளை – , செய்தது போல – கருத்தாவைப் போல வைத்து, தொழில் பட கிளத்தலும் – அதன்மேல் அக் கருத்தாவின் வினையை ஏற்றிக் கூறுதலும், வழக்கினுள் – வழக்கத்திலே, உரித்து – உரியது, எ–று.

உ–ம்.:–

இம்மாடு யான் கொண்டது, இச்சோறு அவன் கொடுத்தது, இவ்வெழுத்து நீ எழுதியது என வரும்.

'செயப்படு பொருளைச் செய்தது போலத் தொழிற்படக் கிளத்தலும்' என்ற எச்ச உம்மையால் கருவி நிலம் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் சிலவிடத்து உண்டென்று கொள்க. அவை வருமாறு:–இவ்வெழுத்தாணி யான் எழுதியது – கருவி; இவ்வீடு அவன் இருந்தது – நிலம்; இத்தொழில் நீ செய்தது – செயல்; இந்நாள் அவர் பிறந்தது – காலம்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: செயப்படுபொருளைச் செய்ததுபோல – செயப்படு பொருளைக் கருத்தாவைப்போல வைத்து, தொழிற்படக் கிளத்தலும் – அதன்மேல்

அவ்வினைமுதல் வினையை யேற்றிக் கூறுதலும், வழக்கினுள் உரித்து வழக்கினிடத்துரித்தாம். எ—று.

(உ—ம்.)

இம்மாடு யான் கொண்டது; இச்சோறு யான் கொடுத்தது; இவ்வெழுத்து யானெழுதியது.

கிளத்தலும் என்ற உம்மையினாலே, கருமத்தைக் கருத்தாவாகக் கூறுதலேயன்றிக், கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவை வருமாறு:

இவ்வெழுத்தாணி யானெழுதியது – கருவி; இவ்வீடு யானிருந்தது – நிலம்; இத்தொழில் யான் செய்தது – செயல்; இந்நாள் யான் பிறந்தது – காலம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ—ள்.) செயப்படு பொருளை – செயப்படு பொருளை, செய்தது போல – வினைமுதல்போல வைத்து, தொழிற்படக் கிளத்தலும் – அதன்மேல் அவ் வினைமுதல் வினை ஏற்றிச் சொல்லுதலும், வழக்கினுள் உரித்து – வழக்கினிடத்து உரித்தாம். (எ—று)

(பொ—ரை.) செயப்படு பொருளையும், கருவியையும், இடத்தையும், செயலையும், காலத்தையும் கருத்தாவைப் போல வைத்து அதன்மேல் வினைமுதல் வினையேற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரித்தாம்.

(உ—ம்.)

இம் மாடு யான் கொண்டது.

இச் சோறு யான் கொடுத்தது. செயப்படுபொருள்.

இவ்வெழுத்து யான் எழுதியது.

'கிளத்தலும்' என்ற உம்மையால் கருமத்தைக் கருத்தாவாகக் கூறுலே அன்றிக் கருவி, நிலம், செயல், காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையும் என்பது பெற்றாம்.

(உ—ம்.) இவ்வெழுத் தாணி யான் எழுதியது. கருவி.

இவ் வீடு யான் இருந்தது இடம்.

இத் தொழில் யான் செய்தது. செயல் (தொழில்).

இந் நாள் யான் பிறந்தது காலம்.

## கா. நமச்சிவாய முதலியார்

**செயப்படுபொருளை** – செயப்படுபொருளை, **செய்தது போல** – எழுவாய்ப்போல வைத்து, **தொழிற்பட** – பயனிலையை யேற்றி, **கிளத்தலும்** – சொல்லுதலும், **வழக்கினுள்** – வழக்கினிடத்து, **உரித்து** – உரித்தாம்.

உதாரணம்

இம்மாடு யான் கொண்டது,
இச்சோறு யான் கொடுத்தது,
இவ்வெழுத்து நான் எழுதியது.

செயப்படுபொருள் கருத்தாவாகக் கூறப்பட்டது.

'கிளத்தலும்' என்ற உம்மையால், செயப்படுபொருளைக் கருத்தாவாகக் கூறுதலேயன்றி, கருவி, நிலம், செயல், காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையும் என்பது பெற்றாம்.

| | | |
|---|---|---|
| இவ்வெழுத்தாணி யான் எழுதியது | – | கருவி. |
| இவ்வீடு யான் இருந்தது | – | இடம். |
| இத்தொழில் யான் செய்தது | – | தொழில். |
| இந்நாள் யான் பிறந்தது | – | காலம். |

## மோசகு பொன்னையா

செயப்படுபொருளை வினைமுதல் (கருத்தா) போல வைத்து, அதன்மேல் வினைமுதலின் வினையை ஏற்றிக் கூறுதலும் வழக்கின்கண் உரியதாம் எ–று.

எ–டு.

இம்மாடு யான் கொண்டது

இச்சோறு யான் உண்டது

இவ்வெழுத்து யான் எழுதியது

கிளத்தலும் என்ற எச்ச உம்மையால் கருவி, நிலம், செயல், காலங்களைச் செய்தது போலச் சொல்லுதலையும் கொள்க.

எ–டு.

| | | |
|---|---|---|
| இவ்வெழுத்தாணி யான் எழுதியது | – | கருவி |
| இவ் வீடு யான் இருந்தது | – | நிலம் |
| இத்தொழில் யான் செய்தது | – | தொழில் |
| இந்நாள் யான் பிறந்தது | – | காலம் |

இது தொல்காப்பிய நூற்பா.

தமிழ் மொழியில் செயப்படுபொருளுக்குச் சிறப்புத் தரும் நோக்கோடும், கருத்தா தெரியாத நிலையிலும், கருத்தாவை அறிவிக்க வேண்டாத இடத்தும் செயப்பாட்டு வினை அமைப்புக்கள் இடம் பெறுகின்றனவே யன்றி, ஏனை இடங்களிலெல்லாம் செய்வினை வடிவம் செயப்பாட்டு வினைப்பொருளைத் தருதலே பழந்தமிழிற் பெரு வழக்கு என்னும் மரபுநிலை இந்நூற்பாவால் உணர்த்தப்பட்டது. இந்நூற்பாவின் எச்ச உம்மையின் பொருளைத் தெளிவுற உணராக் கூற்றே-'தமிழில் செயப்பாட்டுவினை இல்லை'என்பதாகும். எழுத்தெனப்படுவ,3 உளவெனப்பட்ட

ஒன்பதிற் றெழுத்தே,1 மெய்த்தலைப்பட்ட வழக்கொடு சிவணி,2 சிறிது வயிற்றுக்கு மீயப்படும், அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை முதலியனவற்றை நோக்குவார்க்கு அது புலப்படா நிற்கும்.

தொல்காப்பியர், உடம்பொடு புணர்த்திக் கூறியுள்ளதோடு, மூன்றாம் வேற்றுமை உருபு வினைமுதற்பொருளில் வரும், என்றதனால், செயப்பாட்டு வினையையும் கூறி, அதனாலே கொள்ளவைத்தாரே யல்லாமல், அதனைத் தனியே விதி முறையாற் கூறினாரில்லை. இவ்வாசிரியரும் அவர் வழி நின்றார். வீரசோழியம் செயப்பாட்டு வினையைக் கருமகாரகம் எனக் குறிப்பிட்டு, வினைப்பகுதியோடு அகரஞ்சேர்ந்து நிற்க, அதனைத் தொடர்ந்து படு வர, ஈற்றில் பாலறிகிளவி அமைவது அதன் இலக்கணம் என்கின்றது. இலக்கணக்கொத்து ஆசிரியரே அதன் இலக்கணத்தை விரிவாகக் கூறியுள்ளார்.

(49)

**400. பொருண்முத லாறா மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.**

பொருள் முதல் ஆறு ஆம் அடைசேர் மொழி இனம்
உள்ளவு ம் இல்லவும்ஆம் இரு வழக்கினும்.

porul mutal āūu ām atai sēr moli inam
ulla um illa um ām iru valakkinum

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### Compound words

In both (prose and poetic) usages, the six kinds of Adjuncts, such as objects, &c., are either peculiar or common to the words they qualify.

## ஒப்புமைப் பகுதி

பொருண்முத லாறா மடைசேர் மொழியின
முள்ளதற் குரித்தில் லதற்கு மொரோவழி

(இ.வி.:312)

எடுத்த மொழியினம் இயம்பலு முரிய

(மு.வி.:734)

## மயிலை நாதர்

எ–ன், மரபியலுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– பொருளாதியாறனையும் அடையாக அடுத்து வருமொழிகள் இனத்தைக் காட்டுவனவும் காட்டாதனவுமாம்; வழக்கிடத்தும் செய்யுளிடத்தும், எ–று.

வ–று.:–

[1]நெய்க்குடம், குளநெல், கார்த்திகைவிளக்கு, பூந்தோடு, செந்தாமரை, குறுங்கூலி எனவும், உப்பளம், ஊர்மன்று, கீழ்நோக்கிய கிணறு, மேல்நோக்கிய மரம் (சிலாசாஸனத் தொடர்மொழிகள்), சிறுகாலை, [2]கான்மாடு, செம்போத்து, தோய்தயிர் எனவும் வழக்கிடத்து இனமுள்ளனவும் இல்லனவும் வந்தவாறு.

“பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்” (குறள்.913),

“கானியாற்றடைகரை யூரினிது” (இனியது.5),

“முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது”

---

பாட வேறுபாடு:–

1.நொய்க்குடம்

2.காலிமாடு

"கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா"

(சீவக.1558),

"சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்"

(குறுந்.18),

"ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேல்"

(சீவக.1007)

எனவும்,

"பொற்கோட் டிமயமும் பொதியிலும் போன்றே"

(புறநா.2),

"தென்குமரிவடபெருங்கல்"

(புறநா.17),

"வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன"

(புறநா.321),

"சிறகா வண்டு செவ்வழி பாடமாடத் தூடெலாம். இறைகொள் வானின் மீனென வரம்பை முலையி னிருந்தவே"

(சீவக.74),

"செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்,

வெண்டிங்களுள் வெயில்வேண்டினும்"

(புறநா.38),

"முன்னைத் தஞ்சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப்போக"

(தொல்.செய்.64, உரை)

எனவும் செய்யுளில் இனமுள்ளனவும் இல்லனவும் வந்தவாறு.

"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை

வழக்கா றல்ல செய்யு ளாறே"

(தொல்.கிளவி.18)

என்பதனால் இவை முடியுமாறு அறிந்துகொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மரபு வழுவற்க எனக் காத்தலும், மரபு, வழுவமைப்பும் உணர்–ற்று.

இ–ள்.:- மேற் கூறிய அடை, சினை முதல்களை அடுத்து வருங்கால் ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும் ஒன்றையொன்று விசேடித்து வருதலும், இரண்டு அடை முதலை விசேடித்து வருதலும் வழக்குநடையாம்; இரண்டு அடை, சினையை விசேடித்து வருதலும், இவ்வரம்பிறந்து வருதலும் செய்யுள் நடையாம், எ–று.

'ஈரடை முதலோடு ஆதலும்' என்றமையான், முறை என்றது, ஒன்றையொன்று விசேடித்து வருவது என்பதூஉம், அங்ஙனம் வரவே அடைபல சினைபல வாராது ஒவ்வொன்று வரும் என்பதூஉம் பெற்றாம்.

வ–று.:-

வேற்கை முருகன், நிலப்பூ நெரிஞ்சில், கார்த்திகைப்பூக்கொடி, பழக்குலை வாழை, செங்கால் நாரை, முழங்கு திரைக்கடல் எனவும்; மனைச்சிறு கிணறு, சிருகருங் காக்கை எனவும் வழக்கின்கண் வந்தன. "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த" "கருநெடுங் கண்தரும் காமநோயே" எனவும், "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" எனவும் செய்யுட்கண் வந்தன. பிறவும் அன்ன.

இவற்றுள், அடை சினை முதல் முறையடைதல் ஒன்றும் வழுவற்க எனக் காத்தலும், ஏனைய மூன்றும் அவ்வாறு நில்லாமையின் வழுவமைதியுமாம் என்க.

"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா வாய்வன் காக்கையும் கூகையும் கூடி"

என வருவன கொம்புகூர் மாடு, மடல்விரி தாழை என்றாற் போல வருதலின், 'உயர்திணை தொடர்ந்த பொருண்முதல் ஆறும்' (377) என்னும் சூத்திரத்துள் அஃறிணையோடு சார்த்தின் அஃறிணை முடிபினவாம் என அமைத்ததன் பாற்படும் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், மரபியல்பு கூறுகின்றது.

இ–ள்.: பொருண்முத லாறா மடைசேர்மொழி – பொருளாதி ஆறையும் அடையாக அடுத்து வருமொழிகள், இனம் உள்ளவு மில்லவுமாம் – இனத்தைக் காட்டுவனவும் இனத்தைக் காட்டாதனவும் ஆம்; இரு வழக்கினும் – வழக்கிடத்தும் செய்யுளிடத்தும், எ–று.

உ-ம்.:-

நெய்க்குடம், குளநெல், கார்த்திகைவிளக்கு, பூந்தோடு, பூந்தோழி, செந்தாமரை, குறுங்கூலி எனவும் இனமுள்ள அடையடுத்து வந்தது.

உப்பளம், நாடுமன்று, கீழ்நோக்கிய கிணறு, மேல்நோக்கிய மரம், பக்கநோக்கிய கிணறு, மேல்நோக்கிய தீ, கீழ்நோக்கிய நீர், செம்போத்து, தோய்தயிர், வெண்மதி, செந்தீ என்பன இனமில்லா அடையடுத்து வந்தன.

"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே"

(தொல்.சொல்.18)

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வழுவாமற் காத்தலும் மரபு வழுவமைதியும் உணர்த்துகின்றது.

இ-ள்.:- பொருண்முதல் -பொருளாதி, ஆறாம் - ஆறாகிய, அடைசேர் - அடைகளடுத்து வருகிற, மொழி - மொழிகள், இனமுள்ளவும் - இனமுள்ளவையே யாமன்றி, இல்லவுமாம் - இனமில்லாதவையுமாம், இருவழக்கினும் - உலக வழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும், எ-று.

வ-று.:-

| இனமுள்ளன | இனமில்லன | |
|---|---|---|
| நெய்க்குடம் | உப்பளம் | பொருள் |
| குளநெல் | ஊர்மன்று | இடம் |
| கார்த்திகை விளக்கு | நாளரும்பு | காலம் |
| பூமரம் | இலைமரம் | சினை |
| செந்தாமரை | செம்போத்து | குணம் |
| கொடைக்கூலி | தோய்தயிர் | தொழில் |

என வழக்கிடத்து வந்தன. 'பொருட்பெண்டிர்' 'பொய்ம்மை முயக்கம்' எனச் செய்யுளிடத்து மிப்படியே வரும் (இவற்றுள் முன்னையது வழுவாமற் காத்தலும் பின்னையது வழுவமைதியுமாம்.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அடையடுத்துவருஞ் சொற்கள் இத்தனை வகையவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

பொருண்முத லாறா மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.

(பொருள் முதல் ஆறு ஆம் அடை சேர் மொழி இனம் உள்ளவும் இல்லவும் ஆம் இருவழக்கினும்.)

இ–ள்.:– பொருளாதி ஆறாகிய அடைகளடுத்துவரும் மொரிகள் இனமுள்ளவையேயாமன்றி இனமில்லாதவையுமாம் உலக வழக்கினுள்ளுஞ் செய்யுள்வழக்கினுள்ளும். எ–று.

ஒன்றற்கு அடைகொடுத்துக் கூறுவது யாதுக்கு?

குறித்தபொருள் பொதுவிலக்கணத்தாற் றம்மின்ததோடு மயங்கி நில்லாது தனித்து விளங்குதற்கேயாம்.

இனமில்லாத பொருளுக்கு அடைகொடுத்தல் யாது பற்றி?

இனமில்லாத பொருளுக்கு அடைகொடுத்தல் அணிபற்றியும் அதனியல்புபற்றியுமாம்.

அடையினால் அடுக்கப்பட்டது அடைகொளியெனப்படும். அடையெனினும் விசேடணமெனினும் பொருந்தும். அடைகொளியெனினும் விசேடியமெனினும் பொருந்தும். இனச்சுட்டுள்ளவடை பிறிதினையுநீக்கிய விசேடணமெனவும், இனச்சுட்டில்லாவடை தன்னோடியைபின்னமைநீக்கிய விசேடணமெனவும் பெயர்பெறும்.

(வரலாறு)

| இனமுள்ளன. | இனமில்லன. |
|---|---|
| நெய்க்குடம் | உப்பளம்................பொருள். |
| குளநெல் | ஊர்மன்று................இடம். |
| கார்த்திகைவிளக்கு | நாளரும்பு................காலம். |
| பூமரம் | இலைமரம்..................சினை. |
| செந்தாமரை | செம்போத்து...............குணம். |
| ஆடுபாம்பு | தோய்தயிர்...............தொழில். |

188. இனைத்தென்றறிபொருளாவது யாது?

கேட்போரான் இத்துணையதென்னும் வரையறையுடைய பொருள்.

வ–று. (க) தமிழ்நாட்டுமூவேந்தரும் வந்தார்; இறைவற்குக் கண்மூன்று முச்சுடர்; வேதநான்குமுணர்ந்தான் என இனைத் தென்றறிபொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டிநின்றன.

(2)முயற்கோடு ஆகாயாப்பூவென்றுமில்லை; ஒளிமுன்னிருளெங்குல்லை என உலகினிலாப்பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மைவேண்டிநின்றன.

இவை உம்மைவேண்டிநிற்பது எப்போது?

வினைப்படுத்துரைக்கும்போதேயாம்.

வினைப்படுத்துரையாவிடத்து எவ்வாறாம்?

அவை முற்றும்மைவேண்டா.

**உ-ம்.** "பன்னிருதடந்தோள்" "முத்தமிழ்" "ஐந்தலைநாகமுடன்றது."

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழுவாமற் காத்தலும் அதன் வழுவமைதி யுமுணர்த்திற்று.

**இ-ள்.:- பொருண் முதலாறா மடைசேர் மொழி** - பொருள் இடம் காலம் சினை. குணம் தொழில்களாக்கிய அடைகளடுத்து வருமொழிகள், **இனமுள்ளவு மில்லவுமாம்** - இனமுள்ளனவாகிய பொருள்களுக்கே யன்றி யினமில்லனவாகிப பொருள்களுக்கும் வரும், **இரு வழக்கினும்** - உலகவழக்கினுள்ளும், செய்யுள் வழக்கினுள்ளும், எ-று.

'உள்ளவும்' என்ற உயர்வுசிறப்பு உம்மையும், 'இல்லவும் என்ற இழிவு சிறப்பு உம்மையும் எண்ணும்மைகளாயும் நின்றன. ஆதலால், இனமுள்ளனவற்றை யடை கொடுத்துக் கூறுதல் வழாநிலை யெனக் காத்தலும், இனமில்லனவற்றை யடை கொடுத்துக் கூறுதல் வழுவமைதியு மெனக் காண்க.

வ-று.:-

நெய்க்குடம், பாற்குடம் - பொருளடை; குளநெல், வயல்நெல் - இடத்தடை; கார்த்திகை விளக்கு, ஐப்பசி விளக்கு - காலம்; பூமரம், காய்மரம் - சினை; செந்தாமரை வெண்டாமரை - குணம்; ஊன்றுகோல், தாங்குகோல் - தொழில்; இவையினமுள்ளன. உப்பளம் - பொருள்; ஊர்மன்று - இடம்; நாளரும்பு - காலம்; இலைமரம் - சினை; செங்காவி - குணம்; தோய்தயிர் - தொழில்; இவை இனமில்லன - (மன்று-சபை,) இவை முறையே யடையின்றியும் அப்பொருளாதி யாறையு முணர்த்தும். எவ்வாறெனின், அளம் எனவே, உப்பு என்பதும், மன்று எனவே, ஊர் என்பதும், அரும்பு எனவே நாளென்பதுந் தாமே வந்தியையும். உப்பில்லா அளமும், ஊரில்லாச் சபையும், நாளிலா அரும்பு மில்லை யாதலா லென்க, ஒழிந்த மூன்று மிவ்வாறே காண்க. இனி முற்கூறிய இனமுள்ளனவற்றை அடைகொடாது கூறின், குறித்த பொருள் விளங்காது

பொதுமையினிற்கும் ஆதலால் இவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதலே மரபாயிற்று. இவை யுலகவழக்கு, 'பொருட் பெண்டீர்', 'பொய்ம்மை முயக்கம்' – பொருள், கான்யாற் றடைகரை – இடம், முந்நாட் பிறையின் – காலம், 'கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா' – சினை, 'சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கு' – குணம், 'ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குலாள்' தொழில்; இவையினமுள்ளன. 'பொற் கோட்டிமையமும்' பொருள், 'வடவேங்கடந் தென்குமரி யாயிடை' இடம், 'வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன' – காலம், 'சிறகர் வண்டு செவ்வழி பாட' சினை, 'செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும்' குணம், 'முழங்கு கடலோத மூழ்கிப் போக' தொழில், இவை யினமில்லன, இவை செய்யுள் வழக்கு, பிறவுமன்ன.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார்,

"இனச்சுட் டில்லப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே"

எனக் கூறியதினாலே, இனச்சுட்டில்லாதனவற்றிற்கு அறுவகை யடைகளுஞ் செய்யுளிடத்தாமென்பதும் ஐவகை யடைகள் வழக்கிடத்தாமென்பதும், இனச்சுட்டுள்ளனவற்றிற்கு ஆறுவகை அடைகளும் இரு வகை வழக்கினுமாமென்பதுந் தோன்ற நின்றமையும் இனச் சுட்டில்லாதனவற்றிற்கு வழக்கிடத்துப் பண்படை கொடுத்தலிக்காலத்தும் அரிதாதலுங் காண்க. மொழி ஆம் என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– பொருள் முதல் ஆறு ஆம் – பொருள் முதலிய ஆறாகிய, அடை – அடைமொழிகள், சேர் – அடுத்துவரும், மொழி – சொற்கள், இருவழக்கினும் – (உலகவழக்கு செய்யுள் வழக்கு என்னும்) இரண்டினிடத்தும், இனம் உள்ளவும் – இன முள்ளனவாயும், இல்லவும் – இனமில்லாதனவாயும், ஆம் – ஆகும்.

குறிப்பு :–

அடை – அடுத்துவரும் மொழி; அடை, விசேஷணம் என்பன ஒரு பொருளன. அடைமொழியால் அடுக்கப்படும் மொழி 'அடைகொளி' எனப்படும்; அடைகொளி, விசேஷ்யம் என்பன ஒருபொருளன. குறித்த பொருளுக்கு இனமான பொருளை விலக்கும் அடை 'பிறிதினியைபு நீக்கிய விசேடணம்' எனவும், குறித்த பொருளின் இனத்தை விலக்காத அடை 'இயைபின்மை நீக்கிய விசேடணம்' எனவும் சொல்லப்படும்.

இவற்றை முறையே, 'அந்யயோக வியவச்சேதம்' எனவும், 'அயோகவியவச்சேதம்' எனவுங் கூறுவர் வடநூலார்.

உதாரணம்

| இனமுள்ளன. | இனமில்லன. | | |
|---|---|---|---|
| நெய்க்குடம் | உப்பளம் | – பொருள் | |
| குளநெல் | ஊர்மன்று | – இடம் | இவை வழக்கிட |
| கார்த்திகை விளக்கு | நாளரும்பு | – காலம் | த்து வந்தன. |
| பூமரம் | இலைமரம் | – சினை | |
| செந்தாமரை | செம்போத்து | – குணம். | |
| ஆடுபாம்பு | தோய்தயிர் | – தொழில் | |

அளமெனவே உப்பென்பதும், மன்றெனவே ஊரென்பதும், அரும்பெனவே நாளென்பதும், மரமெனவே இலையென்பதும், போத்தெனவே செம்மை யென்பதும், தயிரெனவே தோய்தலென்பதுந் தாமே வந்து இயைதலால் 'அளம்' முதலியன அடையின்றியும் இப்பொருளாதி ஆறினையு முணர்த்தும்; உப்பிலா அளமும், ஊரிலாமன்றும், நாளிலா அரும்பும், இலையிலா மரமும், செம்மையிலாப் போத்தும், தோய்தலில்லாத் தயிரும் இல்லையாதலின், இவை இனமில்லனவாயின.

இனி, முற்கூறிய 'நெய்க்குடம்' முதலிய இனமுள்ளவற்றை அடை கொடாமற் கூறின் குறித்த பொருள் விளங்காமற் பொதுப்பட நிற்குமாதலின் அவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதலே மரபென்றறிக.

| இனமுள்ளன | உதாரணம் | இனமில்லன. | |
|---|---|---|---|
| "பொருட்பெண்டிர்" | "பொற்கோட்டிமயம்" | – பொருள் | |
| "கான்யாறு" | "வடவேங்கடம்" | – இடம். | |
| "முந்நாட்பிறை" | "வேனிற்கோங்கு" | – காலம். | செய்யுளில் |
| "கலவமாமயில்" | "சிறகர்வண்டு" | – சினை. | வந்தன. |
| "சிறுகோட்டுப்பெரும்பழம் | "செஞ்ஞாயிறு" | – குணம். | |
| "ஆடரவு" | "முழங்குகடல்" | – தொழில். | |

இனமுள்ளனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழாநிலையும், இனமில்லனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழுவமைதியுமாமென்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: பொருள் முதல் ஆறு ஆம் அடைசேர் மொழி** – பொருளாதி ஆறாகிய அடைகளடுத்து வரும் மொழிகள், **இனம் உள்ளவும் இல்லவும் ஆம்**

– இனமுள்ளவையேயாமன்றி இனமில்லாதவையுமாம், இருவழக்கினும் – உலகவழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும், எ–று.

அடையினால் அடுக்கப்பட்டது. அடைகொளி யெனப்படும். அடை யெனினும் விசேடண மெனினும் பொருந்தும். அடைகொளி யெனினும் விசேடிய மெனினும் பொருந்தும். இனச்சுட்டுள்ளவடை பிறிதினியைபு நீக்கிய விசேடண மெனவும் இனச்சுட்டில்லாவடை தன்னோடியையின்மை நீக்கிய விசேடண மெனவும் பெயர் பெறும்.

வ–று.:–

| இனமுள்ளன. | இனமில்லன. |
|---|---|
| நெய்க்குடம் | உப்பளம்.................பொருள். |
| குளநெல் | ஊர்மன்று......................இடம். |
| கார்த்திகை விளக்கு நாளரும்பு......................காலம். | |
| பூமரம் | இலைமரம்.......................சினை. |
| செந்தாமரை | செம்போத்து.................குணம். |
| ஆடுபாம்பு | தோய்தயிர்.....................தொழில். |

என வழக்கிடத்து வந்தன. அளமெனவே உப்பென்பதும், மன்றெனவே ஊரென்பதும், அரும்பெனவே நாளென்பதும், மரமெனவே இலை யென்பதும், போத்தெனவே செம்மை யென்பதும், தயிரெனவே தோய்தலென்பதும் தாமே வந்தியைதலால்,அளமுதலியன அடையின்றியும் இப் பொருளாதியாறையு முணர்த்தும். உப்பிலா அளமும், ஊரில்லா மன்றும், நாளிலா அரும்பும். இலையிலா மரமும், செம்மையில்லாப் போத்தும், தோய்தலில்லாத் தயிரும் இல்லையாதலால், இவை இன மில்லனவாயின. இனி முற்கூறிய நெய்க்குட முதலிய இன முள்ளனவற்றை அடை கொடாது கூறிற் குறித்தபொருள் விளங்காமற் பொதுமையினிற்கு மாதலால், அவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதலே மரபாயிற்று.

இனிச் செய்யுள் வழக்கில் வருமாறு:– "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்" – பொருள். "கான்யாற்றடைகரை"– இடம். "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது"– காலம். "கலவமா மயிலெருத்திற் கடிமல ரவிழ்ந்தன. காயா" – சினை. "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்" – குணம். "ஆடரவாடவாடு மம்பலத் தமிர்தே" – தொழில். இவை

இனமுள்ளன. "பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே" – பொருள். "வடவேங்கடந் தென்குமரி" – இடம். "வேனிற்கோங்கின்பூம்பொகுட்டன்ன"– காலம். "சிறகர் வண்டு செவ்வழி பாட" சினை. "செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்" – குணம். "முழங்குகடலோத மூழ்கிப் போக" – தொழில். இவை இனமில்லன.

இனமுள்ளனவற்றை அடை கொடுத்துக் கூறுதல் வழாநிலையும், இனமில்லனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழுவமைதியுமா மென்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். பொருள் முதல் ஆறு ஆம் அடைசேர் மொழி** – பொருளாதி ஆறாகிய அடைகளடுத்து வரும் மொழிகள், – **இனம் உள்ளவும் இல்லவும் ஆம்** – இனமுள்ளவையேயாமன்றி இனமில்லாதவையுமாம், – **இருவழக்கினும்** – உலக வழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும். எ–று.

அடையினால் அடுக்கப்பட்டது அடைகொளியெனப்படும். அடையெனினும் விசேடணமெனினும் பொருந்தும். அடைகொளியெனினும் விசேடியமெனினும் பொருந்தும். இனச்சுட்டுள்ள வடை பிறிதினியைபு நீக்கிய விசேடணமெனவும், இனச்சுட்டில்லாத அடை தன்னோடியையபின்மை நீக்கிய விசேடணமெனவும் பெயர் பெறும்.

(வரலாறு)

| இனமுள்ளன | இனமில்லன | |
|---|---|---|
| நெய்க்குடம் | உப்பளம் | பொருள் |
| குளநெல் | ஊர்மன்று | இடம் |
| கார்த்திகை விளக்கு | நாளரும்பு | காலம் |
| பூமரம் | இலைமரம் | சினை |
| செந்தாமரை | செம்போத்து | குணம் |
| ஆடுபாம்பு | தோய்தயிர் | தொழில் |

என வழக்கிடத்து வந்தன. அளம் எனவே உப்பென்பதும், மன்று எனவே ஊரென்பதும், அரும்பு எனவே நாளென்பதும், மரம் எனவே இலையென்பதும் போத்து எனவே செம்மை யென்பதும், தயிர் எனவே தோய்தலென்பதும் (தோய்தயிர் – உறையிட்டதயிர்) தாமே வந்தியைதலால் அளமுதலியன அடையின்றியும் இப்பொருளாதியாறையு முணர்த்தும், உப்பிலா அளமும், ஊரிலாமன்றும், நாளிலா அரும்பும், இலையிலா

மரமும், செம்மையில்லாப் போத்தும், தோயாத தயிரும் இல்லையாதலால் இவை இனமில்லனவாயின. இனி முற்கூறிய நெய்க்குட முதலிய இனமுள்ளனவற்றை அடைகொடாது கூறிற் குறித்த பொருள் விளங்காமற் பொதுமையினிற்கு மாதலால், அவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதலே மரபாயிற்று. இனிச் செய்யுள் வழக்கில் வருமாறு: – "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்" பொருள்; "கான்யாற்றடைகரை" இடம்; "முந்நாட்பிறையின் முனியாது வளர்ந்தது" காலம்; "கலவமாமயிலெருத்திற் கடிமலரவிழ்ந்தன காயா" சினை; "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்" குணம்; "ஆடரவாடவாடுமம்பலத்தமிர்தே" தொழில்; இவை இனமுள்ளன.

"பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே" – பொருள்; "வடவேங்கடந் தென்குமரி"–இடம்; "வேனிற் கோங்கின் பூம்பொகுட்டன்ன"– காலம்; "சிறகர் வண்டு செவ்வழிபாட" – சினை; "செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்"– குணம்; "முழங்கு கடலோத மூழ்கிப் போக"– தொழில் இவை இனமில்லன.

இனமுள்ளனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழாநிலையும், இனமில்லனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழுவமைதியுமாமென்க.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார் (சூ) "இனச்சுட்டில்லாப் பண்பு கொள்பெயர்க் கொடை, வழக்காறல்ல செய்யுளாறே" எனக் கூறியதினாலே இனச்சுட்டில்லாதனவற்றிற்குச் செய்யுளிடத்து அறுவகையடைகளும் ஆமென்பதும், பண்பொழிந்த ஐவகையடைகள் வழக்கிடத்தாமென்பதும்; இனச்சுட்டுள்ளனவற்றிற்கு அறுவகையடைகளும் இருவகை வழக்கினுமாமென்பதுந் தோன்றநின்றமையும், இனச்சுட்டில்லாதனவற்றிற்கு வழக்கிடத்துப் பண்படை கொடுத்தல் அக்காலத் தரிதென்பதுமறிக.

"இயற்சொற்றிரிசொல்லியல்பில்" என்னுஞ் சூத்திரத்தில் "இடையுரியடுத்து நான்குமாம்" என்பதற்கு உரியியற் சொல்லென்றென்றில்லையென்று சில உரையாசிரியர் விலக்குதல் நன்னூலாசிரியர் கருத்துக்கு மாறாமென்பது "பொருண்முதலாறாமடைசேர் மொழியின முள்ளவு மில்லவுமாமிரு வழக்கினும்" என்றதில் வசனநடையான உலகவழக்கிலும் பண்படை கொள்ளவைத்துக் கூறியதினாலுமறிக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** பொருள்முதல் ஆறு ஆம் – பொருள் முதலிய ஆறாகிய, அடை – அடைமொழிகளால், சேர்ள–அடுக்கப்பட்ட, மொழி–சொற்கள், இருவழக்கினும் – (உலகவழக்குச் செய்யுள்வழக்கு என்னும்) இரண்டிடத்தும், இனம் உள்ளவும் – இனமுள்ளனவாயும், இல்லவும் – (அன்றி) இனமில்லாதனவாயும், ஆம் – வரும், எ–று.

அடை–அடுத்து வரும் மொழி; அடை யெனினும், விசேஷண மெனினும் ஒக்கும். இவ் வடைமொழியால் அடுக்கப்படும் மொழி–அடைகொளி எனப்படும்; அடைகொளி யெனினும், விசேஷ்யமெனினும் ஒக்கும், சொல்லப்படும்பொருளுக்கு இனமாயுள்ள பொருளை விலக்கும் இனமுள்ள அடை–பிறிதினையைபு நீங்கிய விசேஷணமெனவும், சொல்லப்படும் பொருளின் இனத்தை விலக்குதலில்லாமல் வரும் இனமில்லாத அடை – தன்னோடு இயைபின்மை நீக்கிய விசேஷணமெனவும் பெயர்பெறும்; இவற்றை முறையே வட நூலாார் அந்யயோகவ்யவச்சேதம்; அயோகவ்யவச்சேதம் என்பர்.

உ–ம்.:–

| இனமுள்ளன. | இனமில்லன. |
|---|---|
| நெய்க்குடம், பாற்குடம் | உப்பளம் – பொருள். |
| குளநெல், வயல்நெல் | ஊர்மன்று – இடம். |
| கார்த்திகைவிளக்கு, தைவிளக்கு | நாளரும்பு – காலம். |
| பூமரம், காய்மரம் | இலைமரம் – சினை. |
| செந்தாமரை, வெண்டாமரை | செம்போத்து – குணம். |
| ஊன்றுகோல், ஊதுகோல் | தோய்தயிர் – தொழில். |

என வழக்கிடத்து வந்தன. அளமெனவே உப்பென்பதும், மன்றெனவே ஊரென்பதும், அரும்பெனவே நாளென்பதும், மரமெனவே இலையென்பதும் போத்தெனவே செம்மை யென்பதும், தயிரெனவே தோய்தலென்பதும் தாமே வந்து இயைதலால், அளம் முதலியன அடையில்லாமலும் இப்பொருளாதி யாறையும் உணர்த்தும். உப்பில்லாத அளமும், ஊரிலில்லாத மன்றும், நாளிலில்லாத அரும்பும், இலையில்லாத மரமும், செம்மையில்லாத போத்தும், தோய்தலில்லாத தயிரும் இல்லையாதலால், இவை இனமில்லன வாயின. இவை இயற்கை யடைமொழி யெனவும் படும்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– பொருள் முதல் ஆறு ஆம்–பொருளாதி ஆறாகிய, அடை சேர் மொழி – அடைகளடுத்து வரும் மொழிகள், இருவழக்கினும் – உலக வழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும், இனம் உள்ளவும் இல்லவும் ஆம் – இனமுள்ளவையேயாமன்றி இனமில்லாதவையுமாம். எ–று.

அடையினால் அடுக்கப்பட்டது அடைகொளியெனப்படும். அடை யெனினும்விசேடணமெனினும் பொருந்தும். அடைகொளி யெனினும் விசேடியமெனினும் பொருந்தும். இனச்சுட்டுள்ளவடை பிறிதினியைபு நீக்கிய விசேடண மெனவும் இனச்சுட்டில்லாவடை தன்னோ டியைபின்மை நீக்கிய விசேடணமெனவும் பெயர் பெறும்.

உ–ம். ;–

| (இனமுள்ளன.) | (இனமில்லன.) | |
|---|---|---|
| நெய்க்குடம் | உப்பளம் | பொருள். |
| குளநெல் | ஊர்மன்று | இடம். |
| கார்த்திகைவிளக்கு | நாளரும்பு | காலம். |
| பூமரம் | இவலமரம் | சினை. |
| செந்தாமரை | செம்போத்து | குணம். |
| ஆடுபாம்பு | தோய்தயிர் | தொழில். |

என வழக்கிடத்து வந்தன. அளமெனவே உப்பென்பதும், மன்றெனவே ஊரென்பதும், அரும்பெனவே நாளென்பதும், மரமெனவே இலையென்பதும், போத்தெனவே செம்மையென்பதும், தயிரெனவே தோய்தலென்பதும் தாமே வந்தியைதலால், அளமுதலியன அடையின்றியும் இப்பொருளாதியாறையு முணர்த்தும். உப்பிலா அளமும், ஊரில்லா மன்றும், நாளிலா அரும்பும், இலையிலா மரமும், செம்மையில்லாப் போத்தும், தோய்தவில்லாத் தயிரும் இல்லையாதலால், இவை இனமில்லன வாயின. இனி முற்கூறிய நெய்க்குட் முதலிய இன முள்ளனவற்றை அடை கொடாது கூறிற் குறித்த பொருள் விளங்காமற் பொதுமையி னிற்கு மாதலால், அவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதலே மரபாயிற்று.

இனிச் செய்யுள் வழக்கில் வருமாறு:–

(இனமுள்ளன.)

| | |
|---|---|
| "பொருட்பெண்டிர்" | பொருள். |
| "கான்யாறு" | இடம். |
| "முந்நாட் பிறையின்" | காலம். |
| "கலவமா மயில்" | சினை. |
| "சிறுகோட்டுப் பெரும்பழம்" | குணம். |
| "ஆடரவு" | தொழில். |
| (இனமில்லன.) | |
| "பொற்கோட்டிமயம்" | பொருள். |
| "வடவேங்கடம்" | இடம். |
| "வேனிற்கோங்கு" | காலம். |
| "சிறகர் வண்டு" | சினை. |
| "செஞ்ஞாயிறு" | குணம். |
| "முழங்குகடல்" | தொழில். |

இனமுள்ளனவற்றை அடை கொடுத்துக் கூறுதல் வழாநிலையும், இனமில்லனவற்றை அடை கொடுத்துக் கூறுதல் வழுவமைதியுமா மென்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**பொருள் முதல் ஆறு ஆம்** – பொருளாதி ஆறாகிய, **அடைசேர்** – அடைகள் அடுத்து வரும், **மொழி** – மொழிகள், **இனம் உள்ளவும்** – இனமுள்ளவையும், **இல்லவும்** – இன மில்லாதவையும், **இரு வழக்கினும்** – உலக வழக்கினுள்ளும் செய்யுள் வழக்கினுள்ளும், **ஆம்** – ஆகும்.

உதாரணம்

| இனமுள்ளன | இனமில்லன | | |
|---|---|---|---|
| நெய்க்குடம் | உப்பளம் | – | பொருள் |
| குளநெல் | ஊர்மன்று | – | இடம் |
| கார்த்திகை விளக்கு | நாளரும்பு | – | காலம் |
| பூமரம் | இலைமரம் | – | சினை |
| செந்தாமரை | கருங்குயில் | – | குணம் |
| ஆடு பாம்பு | தோய்தயிர் | – | தொழில். |

என வழக்கிடத்து வந்தன.

அளம் எனவே உப்பு என்பதும், மன்று எனவே ஊர் என்பதும், அரும்பு எனவே நாள் என்பதும், மரம் எனவே இலை என்பதும், குயில் எனவே கருமை என்பதும், தயிர் எனவே தோய்தல் என்பதும் தாமே வந்து இயைதலால், அளம் முதலியன இவ்வடைகளின்றியும் பொருளாதி ஆறையும் உணர்த்தும்.

உப்பிலா அளமும், ஊரில்லா மன்றும், நாளில்லா அரும்பும், இலையில்லா மரமும், கருமையில்லாக் குயிலும், தோய்தலில்லாத் தயிரும் இல்லையாதலால் உப்பளம் முதலியன இனமில்லனவாயின.

இனி, முற்கூறிய, இனமுள்ளவற்றை அடைகொடாது கூறின், குறித்த பொருள் விளங்காது பொதுமையின் நிற்குமாதலால், அவற்றை அடைகொடுத்துக் கூறுவதே மரபாயிற்று.

இனிச் செய்யுளிலும் இவ்வாறே வரும்.

இனமுள்ளன :

| | |
|---|---|
| பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் | – பொருள். |
| கான்யாற்றடைகரை | – இடம். |
| முந்நாட்பிறையின் முனியாது வளர்ந்தது | – காலம். |
| கலவமாமயிலெருத்திற் கடிமலரவிழ்ந்தனகாயா | – சினை. |
| சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு | – குணம். |
| ஆடரவு ஆட ஆடும் அம்பலத்தமிர்தே | – தொழில். |

இன மில்லன :

| | |
|---|---|
| பொற்கோட்டிமயமும் பொதியமும்போன்றே | – பொருள். |
| வடவேங்கடம் தென்குமரி | – இடம். |
| வேனிற்கோங்கின் பூம்பொகுட்டன்ன | – காலம். |
| சிறகர்வண்டு செவ்வழிபாட | – சினை. |
| செஞ்ஞாயிறு நிலவு வேண்டினும் | – குணம். |
| முழங்குகடலோதம் மூழ்கிப் போக | – தொழில். |

இனமுள்ளனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழாநிலையும், இனமில்லனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழுவமைதியுமாம்.

## மோசகு பொன்னையா

பொருள் முதலிய ஆறையும் அடைகளாகப் பெற்றுவரும் சொற்கள் உலக வழக்கினும், செய்யுள் வழக்கினும் இனம் உள்ளனவே யன்றி, இனமில்லாதனவாயும் வரும் எ–று.

இனச்சுட்டுள்ள அடை, இனச்சுட்டில்லா அடை என அடை இருவகைப்படும் என்பது இதனாற் போதரும். இனச்சுட்டுள்ள அடை, பொருளை

இனமான பிற பொருள்களினின்று வேறு பிரித்துக் காட்டிநிற்கும் எனவும், மற்றது அவ்வா றன்றித் தன் இனப்பொருளை வேறாக உணர்த்திக் குறிப்பால் அதன் பண்பை உணர்த்தி நிற்கும் எனவும் கொள்க.

உலகவழக்கு

எ—டு.;—

| இனமுள்ளன | இனமில்லாதன | அறுபொருள் |
|---|---|---|
| நெய்க்குடம் (பாற்குடம்) | உப்பளம் | பொருள் |
| குளநெல் (வயல்நெல்) | ஊர்மன்று | இடம் |
| கார்த்திகைவிளக்கு ள (தைவிளக்கு) | நாண்மலர் | காலம் |
| பூமரம் (காய்மரம்) | இலைமரம் | சினை |
| செந்தாமரை (வெண்டாமரை) | செம்போத்து | குணம் |
| ஊன்றுகோல் (ஊதுகோல்) | தோய்தயிர் | தொழில் |

இவற்றுள் அளமுதலிய ஆறும் அடை மில்லாமலே பொருளாதி ஆறையும் உணர்த்தும் ஆதலின் இனமில்லாதன எனப்பட்டன.

செய்யுள் வழக்கு

எ—டு.;—

இனமுள்ளன அறுபொருள்

| | |
|---|---|
| பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் | பொருள் |
| கானியாற் றடைகரை | இடம் |
| முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது | காலம் |
| கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா | சினை |
| சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கு | குணம் |
| ஆடும்பாம்பெனப் புடையகன்ற | தொழில் |

இனமில்லாதன அறுபொருள்

| | |
|---|---|
| பொற்கோட் டிமயமும் பொதியிலும் போன்றே | பொருள் |
| வடவேங்கடந்தென்குமரி | இடம் |
| வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன | காலம் |
| சிறகர் வண்டு செவ்வழி பாட | சினை |
| செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் | குணம் |
| முழங்கு கடலோத மூழ்கிப் போக | தொழில் |

இந்நூற்பாவால் இனமுள்ளவற்றிற்கு வழுக்காப்பும், இனமில்லனவற்றிற்கு வழுவமைதியுங் கூறினார்.

தொல்காப்பியர்,

இனங்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே,

என்றே கூறினார்.

(50)

## 401. அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.

அடைமொழி இனம் அல்லதும் தரும் ஆண்டு உறின்.

atai moḷi iṉam allatu um tarum āṇtu uṟiṉ

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Opposite meaning**

Wherever possible, Adjuncts may also suggest their contraries

### மயிலைநாதர்

எ–ன், மேலதற்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ–ள்.:– அடையடுத்தமொழி அதற்கு இனமல்லதனையும் காட்டும், அவ்விடத்திற்குப் பொருத்தமுடைத்தாயின், எ–று.

வ–று.:–

சுமந்தான் விழுந்தான், புதுப்புனல் வந்தது, இருள் புலர்ந்தது என்பன சுமக்கப்பட்டது வீழ்ந்தது, மழைபெய்தது, சுடர் தோன்றிற் றென்பனவற்றை முறையே விளக்கினவாறு காண்க. பிறவுமன்ன.

மேலைச்சேரிக்கோழி [1]அலைத்ததென்றாற் கீழைச்சேரிக்கோழி, அலைப்புண்டதென்பதும், "ஆவாழ்க வந்தணர்வாழ்க" என்றாற், பிறர் கெடுகவென்னாமையும் மேலிற் சூத்திரத்தானே முடிதலின், இன்ன இதற்குப் பொருளாகா வென்றற்கு 'ஆண்டுறின்' என்றாரென்க. "விதந்த மொழியினம் வேறுஞ் செப்பும்" என்றார், பரிமாணனார்.

பாட வேறுபாடு:–

1. அழைத்ததென்றாற்
கீழைச்சேரிக்கோழி யழைப்புண்டது.

எ—னின், மரபு வழுவற்க எனக் காத்தலும் மரபு வழுவமைப்பும் உணர்—ற்று.

இ—ள்.:— பொருளாதி ஆறாகிய அடைகள் அடுத்து வரும் மொழிகள் இனமுள்ளனவேயாமன்றி இனம் இல்லனவுமாம்; உலகவழக்கினுள்ளும் செய்யுள்வழக்கினுள்ளும், எ—று.

'உள்ளவும்' என்னும் உயர்வுசிறப்பும்மையும் 'இல்லவும்' என்னும் இழிவுசிறப்பும்மையும் எண்ணி நின்றன.

வ—று.:—

நெய்க்குடம், குளநெல், கார்த்திகை விளக்கு, பூமரம், செந்தாமரை, குறுங்கூலி எனவும்; உப்பளம், ஊர்மன்று, நாளரும்பு, இலைமரம், செம்போத்து, தோய்தயிர் எனவும் வழக்கின்கண் இனம் உள்ளனவும் இல்லனவும் வந்தன. "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்" "கான்யாற் றடைகரை" "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது" "கலவமா மயிலெருத்திற் கடிமலரவிழ்ந்தன காயா" "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங்கிவள்" "ஆடுபாம்பெனப்புடை அகன்ற அல்குன்மேல்" எனவும், "பொற்கோட்டு இமயமும் பொதியிலும்போன்றே" "வடவேங்கடம்தென்குமரி" "வேனிற் கோங்கின் பூம்பொகுட்டன்ன" "சிறகர் வண்டு செவ்வழி பாட" "செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்" "முழங்குகடலோத மூழ்கிப்போக" எனவும் செய்யுட்கண் இனம் உள்ளனவும் இல்லனவும் வந்தன.

இனமுள்ளனவற்றை வாளா கூறின் குறித்த பொருள் தோன்றாமையின் அடை கொடுத்து விதந்து கூறுக எனவும் இனமில்லனவற்றிற்கு அடைகொடுத்துக் கூறுதல் மிகையா மாயினும் அமையும் எனவும் பொருள்போந்தமையின், முன்னையது வழுவற்க எனக் காத்தலும் பின்னையது வழுவமைப்புமாம் என்க.

ஆசிரியர் தொல்காப்பியனார்,

"இனச்சுட் டில்லாப் பன்புகொள் பெயர்க்கொடை வழக்கா றல்ல செய்யு ளாறே"

என்றமையின் பொருள்முதலாறாம் அடை என்றும், இருவழக்கினும் என்றும், இவ்விருமையும் பயின்றுவரும்

என்பது தோன்ற உள்ளவும் இல்லவும் என இனமுள்ளனவற்றோடு ஒருங்கு எண்ணியும் கூறினார் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், மேலதற்கு எய்தாதது எய்துவித்தல் கூறுகின்றது.

இ–ள்.: அடைமொழி – அடையடுத்த மொழி, இனமல் லதுந்தரும் – அதற்கு இனமல்லாததையும் காட்டும், ஆண்டுறின் – அவ்விடத்துக்குப் பொருத்தமுண்டாயின், எ–று.

உ–ம்.:–

சுமந்தான் வீழ்ந்தான், புதுப்புனல் வந்தது, இருள் புலர்ந்தது எனச் சுமக்கப்பட்டதும் வீழ்ந்ததும் மழை பெய்தது, ஒளி தோன்றிற்று என இல்லாததனையும் விளக்கினவாறு காண்க.

மேற்சேரிக்கோழி..............அலைப்புண்டது எனவும்

ஆ வாழ்க அந்தணர் வாழ்க என்றாற் பிறர் கெடுக என்னாமையும் மேலிற் சூத்திரத்தினால் இனமின்றியும் வரூஉம் என்பதும் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வழுவாமற் காத்த லுணர்த்துகின்றது.

இ–ள்.: அடைமொழி – முன்சொல்லப்பட்ட அடைசேர்மொழி, இனமல்லதும் – இனத்தைத் தருவதன்றி இனமல்லாததையும், தரும் – கொடுக்கும், ஆண்டு – அவ்விடத்திற்கு, உறின் – பொருந்துமாயின், எ–று.

வ–று.:–

'மேலைச்சேரிச் சேவலலைத்து' என்றவளவிலே கீழைச்சேரிச் சேவலலைப்புண்டது என வினத்தைத் தருதலே யன்றி அச்சேவலை யுடையார்க்கு வெற்றியாயிற்று என்கிற இனமல்லாததையுந் தந்தது.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஒரு தொடர் ஒருபொருளுணர்த்தியமையாது வேறொருபொருளுங் குறித்துநிற்றல் வழுவாயினும் அமைக்கவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.

(அடைமொழி இனம் அல்லதும் தரும் ஆண்டு உறின்.)

இ—ள்.:— தொடர்மொழியானது தனக்குரியபொருளைத் தருதலே யன்றி இனமல்லாதபொருளையும் குறித்துநிற்கும் அவ்விடத்துக்குப் பொருந்துமாயின். எ—று.

உ—ம்.:—

அறஞ்செய்தான் துறக்கட்புகும் என்பது மறஞ்செய்தான் அறக்கம்புகான் என்னுங் குறிப்பைத் தருதலும் அது குறிகப்படாதவழித் தன்பொண்மாத்திரமே தருதலுங்காண்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழுவாமைக் காத்தலுணர்த்திற்று.

இ—ள்.: ஆண்டுறின் — அவ்விடத்திற்குப் பொருந்துமாயின், அடைமொழி யினமல்லதுந் தரும் — மேற்கூறிய அடைசேர் மொழிகள் இனத்தைத் தருதலே யன்றியும் இனமல்லாததையுந் தரும், எ—று.

வ—று.:—

'அறஞ்செய்தான் சுவர்க்கம் புகுவான்' எனின், 'மறஞ்செய்தான் நரகம்புகுவான்' எனவும் (மறம் – பாவம்,) 'இழிவறிந்துண்பான் இன்பமெய்தும்' எனின், 'கழிபேரிரையான்' துன்பமெய்தும் (கழி—மிகுதி,) எனவும்; வருமிவை இனத்தைத் தந்தன. இவை அருத்தாபத்தி எனவுங் காண்க. 'மேலைச்சேரிச் சேவல் அலைத்ததெனின், கீழைச்சேரிச்சேவல் அலைப்புண்டதென இனத்தைத் தந்ததுமன்றி அச்சேவலுடையார்க்கு வெற்றியாயிற்று என இனமல்லதனையுந் தந்தது. இனி யிரட்டுறமொழிதலென்னும் உத்தியால், 'இனமல்லதுந் தரும்' என்றதற்கு இனத்தைத் தருவதை நீக்கி இனம் அல்லாததைத் தருமெனவும் பொருளுரைத்துக் கொள்க. அவைவருமாறு, காலையெழுந்து கருமத்திற் செல்வான், கோழி கூவிற் றெனின் மற்றப் பறவைகள் கூவுகில என்னுங் கருத்து அவனுக்கில்லை யாதலால், அவ்வினத்தை யொழித்துப் பொழுதுவிடிந்த தென்னும் இனமல்லதனைத் தந்தது. பெய்முகிலனையான் எனின், இனமாகிய பெய்யாமுகிலுவமையை நீக்கிக் கைமாறு கருதாத பெருங்கொடையாளன் என்னும் இனமில்லதனை அந்த அடைமொழி தந்தவாறு காண்க. பிறவுமன்ன. (கைமாறு கருதல் – பிரதியுபகாரத்தை நினைத்தல்)

இனி, ஒன்றின முடித்தலென்பதினால், அடையில்லா மொழிகளும் இனத்தைத் தருதலுந் தாராமையுமுள வெனக் கொள்க. அவை வருமாறு:— உண்டா னுரஞ்செய்வான் எனின்

உண்ணாதானுரஞ் செய்யான் என இனத்தைத் தந்தது எனவும்; ஆவாழ்க அந்தணர்வாழ்க எனின் எருமை ஒட்டக முதலியனவும், அரசர்வணிகர் வேளாளர் முதலியோருஞ் சாகவென்னுங் கருத்தில்லாமையாலிவை போல்வன இனத்தைத் தாராதன வெனவுங் காண்க. இனி, ஆசிரியர் தொல்காப்பினார்.

"எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே"

எனக் கூறுதலுங் காண்க. மொழி தரும் என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– அடைமொழி – (முன்சொல்லப்பட்ட) அடைமொழிகள், **இனம் அல்லதும் தரும்** – (இனத்தைத் தருதலேயன்றி அதனோடு) இனமல்லாததையுந்தரும், **ஆண்டுறின்** – அவ்விடத்துக்கும் பொருந்துமாயின்.

உ–ம் :–

'பாவஞ்செய்தால் நரகம்புகுவன்' என்றால், அது– 'புண்ணியஞ்செய்தால் சுவர்க்கம்புகுவான்' என இனத்தைக் குறித்தல் மாத்திர மேயன்றி 'அவன் இதுசெய்தால் இதுவரும்' என்னும் அறிவில்லாதவன் என இனமல்லாததையுங் குறித்தது. 'மேலைச்சேரிச்சேவல் அலைத்தது' என்றால், அது – 'கீழைச்சேரிச்சேவல் அலைக்கப்பட்டது' என இனத்தைக் குறித்தல் மாத்திரமேயன்றி, 'அச்சேவலையுடையார்க்கு வெற்றியாயிற்று' என்னும் இனமல்லாததையுங்குறித்தது.

'குடங்கொண்டவன் விழுந்தான்' என்றால் – 'குடங் கொள்ளாதவன் விழுந்தானல்லன்' என்னும் பொருளைத் தாராமல், 'குடம்விழுந்தது' என்றும், 'கோழிகூவிற்று' என்றால் – 'மற்றைப் பறவைகள் கூவவில்லை' என்னும் பொருளைக் குறியாமல், 'பொழுதுவிடிந்தது' என்றும் இவ்வாறு இனத்தைக் குறித்தலன்றி இனமில்லாததைக் குறித்தலும் இங்கே அமைத்துக் கொள்ளப்படும். இவற்றையெல்லாம் அருத்தாபத்தியுள் அடக்குவர் வடநூலார்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: அடைமொழி** – முன்சொல்லப்பட்ட அடைசேர் மொழி, **இனம் அல்லதும் தரும்** – இனத்தைத் தருதலே யன்றி அதனோடு இனமல்லாததையும் தரும், **ஆண்டு உறின்** – அவ்விடத்துக்குப் பொருந்துமாயின், எ–று.

வ—று.:—

பாவஞ் செய்தா னரகம் புகுவான் என்ற வளவிலே, புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகுவான் என இனத்தைத் தருதலே யன்றி, அவன் இது செய்யின் இதுவருமென்னும் அறிவிலி என்னும் இனமல்லாததையுந் தந்தது. மேலைச் சேரிச் சேவலலைத்தது என்றவளவிலே, கீழைச்சேரிச் சேவலலைப் புண்டது என இனத்தைத் தருதலே யன்றி, அச்சேவலை யுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லாததையுந் தந்தது.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.:— அடைமொழி — முன்சொல்லப்பட்ட அடைசேர்மொழி, — இனம் அல்லது தரும் — இனத்தைத் தருதலேயன்றி அதனோடு இனமல்லாததையுந் தரும், — ஆண்டு உறின் — அவ்விடத்துக்குப் பொருந்துமாயின்.

வ—று.:—

பாவஞ்செய்தான் நரகம் புகுவான் என்ற அளவிலே, புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகுவான் என இனத்தைத் தருதலேயன்றி அவன் இது செய்யின் இது வருமென்னும் அறிவில்லாதவன் என்னும் இனமல்லாததையுந் தந்தது. மேலைச் சேரிச் சேவலைத்தது என்ற அளவிலே, கீழைச்சேரிச் சேவலலைப்புண்டது என இனத்தைத் தருதலேயன்றி, அச்சேவலையுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லாததையுந் தந்தது.

இனி இரட்டுறமொழிதலென்னு முத்தியால், இனமல்லதுந் தருமென்றதற்கு இனத்தைத் தருவதை நீக்கி இனமல்லாததைத் தருமெனவும் பொருளுரைத்துக் கொள்க.

வ—று.:—

காலையெழுந்து கருமத்திற்செல்வான், கோழிகூவிற்றெனின் மற்றப் பறவைகள் கூவுகில என்னுங் கருத்து அவனுக்கில்லை யாதலால் அவ்வினத்தை யொழித்துப் பொழுது விடிந்தது என்னும் இனமல்லாததனைத் தந்தது. தொல்காப்பியனார் "எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே" எனக் கூறுதலுங் காண்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– அடைமொழி – முன்சொல்லப்பட்ட அடைசேர்மொழி, இனம் அல்லது தரும் – இனத்தைத் தருதலேயன்றி அதனோடு இனமல்லாததையுந் தரும், ஆண்டு உறின் – அவ்விடத்துக்குப் பொருந்துமாயின். எ–று.

(உ–ம்.)

பாவஞ் செய்தான் நரகம் புகுவான் என்றால், புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகுவான் என இனத்தைத் தருதலேயன்றி, அவன் இது செய்யின் இது வருமென்னும் அறிவிலி என்னும் இனமல்லாததையுந் தந்தது. மேலைச்சேரிச்சேவல் அலைத்தது என்றவளவிலே, கீழைச்சேரிச் சேவல் அலைப்புண்டது என இனத்தைத் தருதலே யன்றி, அச்சேவலை யுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லாததையுந் தந்தது.

இனி, 'இரட்டுறமொழிதல்' என்னும் உத்தியால், 'இனமல்லதுந் தரும்' என்றதற்கு இனத்தைத் தருவதை நீக்கி இனமல்லாததைத் தரும் எனவும் பொருளுரைத்துக் கொள்க.

(உ–ம்.) காலையில் எழுந்து செல்வான் 'கோழி கூவிற்று' என்றால், மற்றப் பறவைகள் கூவவில்லை என்னும் பொருளைத் தராமல், பொழுது விடிந்தது, என்னும் பொருளையே தருதலால், இனத்தைத் தருதலில்லாமல் இனமில்லாததைத் தருதலாயிற்று.

இனி 'ஒன்றின் முடித்தல்' என்பதனால், அடையில்லா மொழிகளும் இனத்தைத் தருதலும் தாராமையும் உளவெனக் கொள்க.

(உ–ம்.) 'உண்டான் உரம்பெறுவான்' என்றால் 'உண்ணாதான் உரம் பெறான்' என இனத்தைத் தந்தது.

'ஆவாழ்க' என்றால் எருமை முதலியன சாக என்னும் கருததில்லாமையால், இனத்தைத் தராதாயிற்று.இவற்றை யெல்லாம் வடநூலார் அருத்தாபத்தி என அடக்குவர்.

## கா. நமச்சிவாய முதலியார்

அடைமொழி – அடை சேர்ந்தமொழி, இனம் அல்லதும் – (இனத்தைத் தருவதன்றி) இனமல்லாததையும், தரும் – கொடுக்கும், ஆண்டு – அவ்விடத்திற்கு, உறின் – பொருந்துமாயின்.

உதாரணம்

'மேலைச்சேரிச் சேவல் அலைத்தது' என்றவிடத்து, 'கீழைச்சேரிச் சேவல் அலைப்புண்டது' என இனத்தைத் தருதலே யன்றி, அச் சேவலை உடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லாததையும் தந்தது.

## மோசகு பொன்னையா

முன்னர்ச் சொல்லப்பட்ட அடைசேர்மொழிகள் இனத்தைத் தருதலேயன்றி, அவ்விடத்திற்குப் பொருந்துமாயின், இனமல்லாததையும் தரும் எ—று.

எ—டு.

| | | |
|---|---|---|
| அடைசேர்மொழி | இனம் | இனமல்லாதது |
| மறஞ்செய்தான் நிரயம் | | அறஞ்செய்தான் செய்வதறியா |
| புகுவான் வீடடைவான் | | அறிவிலியின் செயல் இது |
| மேலைச்சேரிச்சேவல் | | கீழச்சேரிச் உயிர்ப்போராட்டம் |
| வென்றது சேவல் தோற்றது | | முடிந்தது |

மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்றி முடித்தலால், கோழி கூவிற்று என்றால் பிற பறவைகள் கூவவில்லை என இனத்தைத் தராமலே, பொழுது புலர்ந்தது என்னும் இனமல்லாததனையே தருதல் போன்ற வழக்கையும் அமைக்க.

தொல்காப்பியர்,

எடுத்த மொழயினஞ் செப்பலு முரித்தே,

எனக் கூறிவைத்தார்.

(51)

402. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.

அடை சினை முதன்முறை அடைதலும் ஈர் அடை
முதலோடு ஆதலும் வழக்கில் ஈர் அடை
சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.

atai sinai mutal muūai ataiṭal um īr atai
muṭal ōtu āṭal um vaḷakku iyal īr atai
sinai otu seūiṭal um mayaṅkal um seyyu_
kuē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Combination of epithets**

In prose, an adjunct, a member and its whole may come together (qualifying one another), or two Adjuncts may qualify a whole; in poetry, there may be two Adjuncts to one member, or even other kinds of combinations.

## ஒப்புமைப் பகுதி

அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழங்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செயுட்கே

(இ.வி.:314)

அடைசினை முதல்முறை அடைதலும் ஈர்அடை
முதலோடு ஆதலும் வழக்கு இயல்ஈர் அடை
சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே

(தொ.வி.:93)

## மயிலை நாதர்

எ–ன், மரபுவழுவற்க வென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– ஒன்றைச் சொல்லுங்கால், அடை சினை முதலெனக் கிடந்த முறையே சொல்லுதலும், இரண்டு அடையை முதலுடனே சேர்த்துச் சொல்லுதலும் வழக்கினுள் இயல்பாம்; இரண்டடையைச் சினையொடு சேர்த்துச் சொல்லுதலும் வேண்டியவாறு மயங்கச் சொல்லுதலும் செய்யுட்கண் இயல்பாம், எ–று.

வ–று.:–

'பெருந்தலைச்சாத்தன்',[1]'செங்கால்நாரை', 'நெட்டிலைத் தெங்கு' எனவும், 'இளம்பெருங்கூத்தன்', 'சிறுகருங்காங்கை' (ஐங்குறு:391) எனவும் வழக்கினுள் வந்தவாறு. "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த", "கருநெடுங் கண்டருங் காம நோயே" எனவும், "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" எனவும் செய்யுளுள் மயங்கிவந்தன. பிறவுமன்ன.

பா–டு.:–

1 செங்கணாரை

எ—னின், மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்—ற்று.

இ—ள்.:— மேற்கூறிய அடைசேர்மொழி இனத்தைத் தருதலேயன்றி அதனோடு இனமல்லதனையும் தரும், அவ்விடத்திற்குப் பொருந்துமாயின், எ—று.

'ஆண்டுறின்' என்றமையான் பொருந்துவன கொள்க என்றார்.

வ—று.:—

'பாவஞ்செய்தான் நரகம் புகும்' என்றதுணையானே, புண்ணியம் செய்தான் சுவர்க்கம் புகும் என இனத்தைத் தருதலேயன்றி, அவன் இதுசெய்யின் இது வரும் என்னும் அறிவிலி என்னும் இனமல்லதனையும் தந்தது. 'மேலைச் சேரிச்சேவல் அலைத்தது' என்ற துணையானே, கீழைச் சேரிச் சேவல் அலைப்புண்டது என இனத்தைத் தருதலேயன்றி அச்சேவலுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இனமல்லதனையும் தந்தது.

இனி இரட்டுறமொழிதலான் இனமல்லதும் தரும் என்பதற்கு இனத்தைத் தருதலை ஒழித்து இனமல்லதனையும் தரும் எனவும் பொருளுரைத்துக்கொள்க. அவை வருமாறு:—

'சுமந்தான் வீழ்ந்தான்' என்றால் சுமவாதான் வீழ்ந்தான் அல்லன் என்னும் கருத்துச் சொல்லுவார்க்கு இன்றாதலின் அவ்வினத்தை ஒழித்துச் சுமையும் வீழ்ந்தது என்னும் இனமல்லதனையும் தந்தது. காலை எழுந்து கருமத்திற் செல்வான் 'கோழி கூவிற்று' என்றால், ஏனைப்புட்கள் கூவுகில என்னும் கருத்து அவற்கு இன்றாதலின் அவ்வினத்தை ஒழித்துப் 'பொழுது புலர்ந்தது' என்னும் இனமல்லதனைத் தந்தது.

'பெய்முகிலனையான்' என்றால், கைம்மாறு கருதாத பெருங்கொடையாளன் என்னும் இனமல்லதனை இனம் இலதாகிய அடைமொழி தந்தது. இவ்அடை கொடாது முகிலனையான் என வாளா கூறினும் இக்கொடைப்பொருள் தருமாலோ எனின்:— அவ்வாறு கூறின் முகில்வண்ணன் எனவும் பொருள்படுமாதலின் அதனை ஒழித்துக் கொடைப் பொருட்கு உரிமைசெய்தது அவ்வடையேயாம் என்க. பிறவும் அன்ன.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், அடைமொழிகள் முதல் சினையிடத்து வருமாறு கூறுகின்றது.

இ–ள்.:– அடைசினை–ஒன்றினால் ஒன்றைச் சிறப்பித்துச் சொல்லுமிடத்து அடையடுத்த சினையுடனே, முதன் முறையடைதலும், ஈரடை முதலோ டாதலும்–இரண்டு அடை முதலுடனே சேர்த்துச் சொல்லுதலும், வழக்கியல்–வழக்கினுள் இயற்கையாம்; ஈரடை சினையொடு செறிதலும் – இரண்டு அடையைச் சினையொடு சேர்த்துச் சொல்லுதலும், மயங்கலுஞ் செய்யுட்கே–ஆண்டை முதலுடனேயும் வேண்டி...மயங்கச் சொல்லுதலும் செய்யுட்கண் இயல்பாம், எ–று.

உ–ம்.:–

பெருந்தலைச் சாத்தன், செங்கானாரை, நெடுமலைத் தோங்கு எனவும் இளம்பெருங் கூத்தன், சிறு கருங்காக்கை எனவும் வழக்கினுள் வந்தன. “சிறுபைந் தூவியாற் செயிரறச் செய்த”, “கருநெடுங் கண்டரு காம நோயே” எனவும் “பெருந்தோட் சிறுமருங்கின் பேரமர்க்கட் பேதை” எனவும் செய்யுளில் வந்தன: பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வழுவாமற் காத்தலும் மரபு வழுவமைதியும் உணர்த்துகின்றது.

இ–ள்.:– அடை–ஓரடையும், சினை–ஒருசினையும், முதல்–ஒரு முதலும், முறையடைதலும்–ஒன்றை யொன்று விசேடித்து வருதலும், ஈரடை–இரண்டடை, முதலோடாதலும்–முதலை விசேடித்து வருதலும், வழக்கியல்–வழக்கு நடையாம், ஈரடை–இரண்டடை, சினையொடு செறிதலும்–சினையை விசேடித்து வருதலும், மயங்கலும்–இவ் வரம்பு கடத்து வருதலும், செய்யுட்கு–செய்யுணடை யாகும், எ–று.

வ–று.:–

வேற்கைமுருகன், செங்கானாரை எனவும்; மனைச்சிறு கிணறு, சிறுகருங்காக்கை எனவும்; வழக்கில் வந்தன. ‘சிறுபைந்தூவியிற் செயிறரச்செய்த கருநெடுங்கண்டருங் காமநோயே’ எனவும், ‘பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட்பேதை’ எனவும், செய்யுளில் வந்தன. (அடைசினைமுதன்முறை யடைதலொன்றும் வழுவாமற் காத்தலும் மற்றை மூன்றும் வழுவமைதியும், ஆம்)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அடையுஞ் சினையுமுதலுந் தம்முட்டொடரும்வழிப்படுவதோர் மரபுகூறுஞ் சூத்திரம் யாது?

அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய வீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.

(அடை சினை முதல் முறை அடைதலும் ஈரடை முதலோடு ஆதலும் வழக்கு இயல்; ஈரடை சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கு.)

இ–ள்.:– ஓரடையும் ஒருசினையும ஒருமுதலும் ஒன்றையொன்று விசேடித்து வருதலும் இரண்டடை முதலை விசேடித்துவருதலும் வழக்குநடையாம்; இரண்டடை சினையை விசேடித்து வருதலும் இவ்வரம்பு கடந்து வருதலும் செய்யுணடையாம்.

(வரலாறு)

வழக்கு:

(1) வேற்கை, முருகன், செங்கால் நாரை, முழங்குதிரைக் கடல் இவை ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலுமாகி ஒன்றையொன்று விசேடித்து வந்தன.

(2) மனைச்சிறு கிணறு, சிறுகருங்காக்கை இவை இரண்டடை முதலைவிசேடித்து வந்தன.

செய்யுள்:

(1) "சிறுபைந் தூவியிற் செயிரறச்செய்த;" "கருநெடுங் கண்டருங் காமநோயே" இவை இரண்டடை சினையை விசேடித்து வந்தன.

(2) "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை;" "சிறுநுதற்பேரமர்க்கட்செய்ய வாயைய நுண்ணிடையாய" இவை இவ்வரம்பு கடந்துவந்தன.

அடைசினைமுதன்முறையடைதலொன்றும் வழுவாமற்காத்தலும், ஒழிந்தமூன்றும் வழுவமைதியுமாமென்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழுவாமற் காத்தலும் அதன் வழுவமைதியு முணர்த்திற்று.

இ–ள்.: அடைசினை முதன்முறை யடைதலும் – (மேற்கூறிய அடை சினை முதல்களை யடுத்து வருங்கால்) ஓரடையு ஓர்சினையும் ஓர்முதலுமாப் ஒன்றை யொன்று விசேடித்து வருதலும், ஈரடை முதலோடாதலும் – இரண்டடை

முதலை விசேடித்து வருதலும், வழக்கியல்–வழக்கு நடையாம், ஈரடை சினையொடு செறிதலும்–இரண்டு அடை சினையை விசேடித்து வருதலும், மயங்கலும் – இந்த வரம்பு கடந்து முறை பிறழ்ந்து வருதலும், செய்யுட்கு–செய்யுட்குரிய நடையாம், எ–று.

'முறை' என்றதனால் ஒன்றையொன்று விசேடித்து வருமென்பதும், அவ்வாறு வரும்போது அடைபல சினைபலவாய் வாராமல் ஒவ்வொன்று வருமென்பதும் பெறப்பட்டன. அடையென்றது பொருளாதியாறுமெனக் காண்க.

வ–று.:–

வேற்கை முருகன் (வேல்–பொருள்); நிலப்பூ நெரிஞ்சில்–(நிலம்–இடம்) கார்த்திகைப் பூக்கொடி (கார்த்திகை–காலம்); பழக்குலை வாழை (பழம்–சினை); செங்கால்நாரை (செம்மை–குணம்); முழங்குதிரைக்கடல் (முழங்கல்–தொழில்), இவை அடையுஞ் சினையும் முதலுமாகி ஒன்றை யொன்று விசேடித்து வந்தன. 'மனைச்சிறு கிணறு', 'சிறுகருங் காக்கை', என்றாற் போல்வன இரண்டு அடை முதல் மேல் வந்தன. (முதல்–அவயவத்தையுடையது,) இவை வழக்குநடை. 'சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த', இதனுள் சிறுமை பசுமை இரண்டும் அடை; தூவி–சினை, (செயிர்–குற்றம்,) கருநெடுங்கண்டருங்காமநோயே–இதில்–கருமை, நெடுமை அடை, கண்–சினை, இவை யிரண்டு அடை சினையொடு வந்தன. 'பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை' எனவும், 'சிறுநுதற் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடையாய்' எனவும் வரும். இவை போல்வன இவ் வரம்பு கடந்தும் இம்முறை பிறழ்ந்தும் வந்தன. இவைசெய்யுள்நடை பிறவுமன்ன. இவற்றுள், அடை சினை முதன் முறையடைதலொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமாமென்க.

**கவிசெந் தாழைக் குவிபுறத் திருந்த**
**செவிசெஞ் சேவலும் பொருவலும் வெருவா**
**வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி**

என்றதில் செவிசெஞ்சேவல், வாய்வன்காக்கை என்பன கொம்பகூர்மாடு, மடல்விரிதாழை என்பனவற்றை யொத்திருத்தலால், 'உயர்திணை தொடர்ந்த பொருண் முதலாறு சூத்திரத்துள் அஃறிணையொடு சார்த்தின் அஃறிணை முடிபினவாமென அமைத்தன்பாற் படுமெனக் காண்க. இனி, ஆசிரியர் தொல்காப்பியனார், அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல் எனப் பண்படை யொன்றுமே கூறி

யொழிந்தனவற்றை யிலேசினாற் றழுவியவாறுங் காண்க. அடைதலும் ஆதலும் வழக்கியலாம்; செறிதலும் மயங்கலும் செய்யுட்குரிய நடையா மென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :-** **அடைசினை முதல்முறை அடைதலும்** – ஓர் அடையும் ஒரு சினையும் ஒரு முதலுமாய் முறையே ஒன்றையொன்று விசேடித்து வருதலும், **ஈர் அடைமுதலோடு ஆதலும்** – இரண்டு அடை ஒருமுதலை விசேடித்துவருதலும், **வழக்கு இயல்** – உலகவழக்கமாம்; **ஈர் அடைசினையொடு செறிதலும்** – இரண்டு அடை ஒருசினையை விசேடித்துவருதலும், **மயங்கலும்** – இவ் வரம்புகடந்து வருதலும், **செய்யுட்கு** – செய்யுளுக்கு (உரிய வழக்கமாம்.)

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| வழக்கு : | 1. | வேற்கை முருகன், செங் கால் நாரை, முழங்கு திரைக்கடல் | ஓர் அடையும் ஒரு சினையும் ஒரு முதலுமாகி ஒன்றை யொன்று விசேடித்து வந்தன. |
| | | (வேல் – கையையும், கை – முருகனையும் விசேடித்தல் காண்க) | |
| | | இவை, கைவேல் முருகன், கால்செந்நாரை, திரை முழங்கு கடல் | எனச்சிறுபான்மை மாறிவருத லும் உண்டு |
| | 2. | மனைச்சிறுகிணறு, சிறு கருங்காக்கை | இரண்டு அடை முதலை விசேடித்து வந்தன. |
| செய்யுள்: | 1. | "சிறுபைந்தூவி", "கரு நெடுங்கண்" | இரண்டு அடை சினையை விசேடித்து வந்தன. |
| | 2. | "பெருந்தோட் சிறுமரு ங்குற் பேரமர்க்கட்பேதை" | இவ்வரம்பு கடந்துவந்தது. |

குறிப்பு :-

இச்சூத்திரத்துக்கூறிய நான்குவிதிகளுள், அடைசினை முதல் முறை அடைதல்மாத்திரம் மரபுவழுவாமற்காத்தலும், மற்றை மூன்றும் மரபு வழுவமைதியுமாம்.

## ஆறுமுகநாவலர்

**இ–ள்.: அடை சினை முதல் முறை அடைதலும்** – ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும் ஒன்றை யொன்று விசேடித்து வருதலும், **ஈரடை முதலோடு ஆதலும்** – இரண்டடை முதலை விசேடித்து வருதலும், **வழக்கு இயல்**

– வழக்கு நடையாம், ஈரடைசினையொடு செறிதலும் – இரண்டடை சினையை விசேடித்து வருதலும், மயங்கலும்–இவ்வரம்பு கடந்து வருதலும், செய்யுட்கு– செய்யுணடையாம். எ–று.

வ–று.:–

வழக்கு:–

(1) வேற்கை முருகன், செங்கானாரை, முழங்கு திரைக்கடல் இவை ஓரடையும் ஒருசினையும் ஒரு முதலுமாகி ஒன்றை யொன்று விசேடித்து வந்தன.

(2) மனைச்சிறு கிணறு, சிறுகருங்காக்கை இவை இரண்டடை முதலை விசேடித்து வந்தன.

செய்யுள்:–

(1) "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த;"
"கரு நெடுங் கண்டருங் காமநோயே" இவை இரண்டடை சினையை விசேடித்து வந்தன.
(2) "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட்பேதை;"
"சிறுநுதற் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடையாய்"
இவை இவ்வரம்பு கடந்து வந்தன.

அடைசினை முதன்முறை யடைதலொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமா மென்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். அடை சினை முதல் முறை அடைதலும் – ஓரடையும் ஒருசினையும் ஒரு முதலும் ஒன்றையொன்று விசேடித்து வருதலும், ஈரடை முதலொடு ஆதலும் – இரண்டடை முதலை விசேடித்துவருதலும் – வழக்கு இயல் – வழக்குநடையாம், – ஈராடை சினையொடு செறிதலும் – இரண்டடை சினையை விசேடித்து வருதலும், – மயங்கலும் – இவ்வரம்புகடந்து வருதலும், – செய்யுட்கு – செய்யுள் நடையாம். எ–று.

(வரலாறு)

வழக்கு

(1)வேற்கை முருகன், செங்கானாரை, முழங்கு திரைக்கடல் இவை ஓரடையும் ஒருசினையும் ஒரு முதலுமாகி ஒன்றையொன்று விசேடித்து வந்தன.

(2) மனைச்சிறு கிணறு, சிறுகருங்காக்கை இவை இரண்டடை முதலை விசேடித்து வந்தன.

செய்யுள்(1)"சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த",
"கருநெடுங் கண்டருங் காமநோயே". இவை
இரண்டடை சினையை விசேடித்து வந்தன.

(2)"பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை", சிறிநுதற் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடை யாய்' இவை இவ்வரம்பு கடந்து வந்தன.

அடைசினைமுதன்முறை அடைதலொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்தமூன்றும் வழுவமைதியுமாமென்க. ஆசிரியர் தொல்காப்பியனார் "அடைசினை முதலெனமுறை மூன்றுமயங்காமை, நடைபெற்றியலும் வண்ணச் சினைச் சொல்" எனப் பண்படையொன்றுமே கூறி ஒழிந்தனவற்றை இலேசினாற் றழுவியவாறுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:- அடைசினை முதல் முறை அடைதலும் – அடைமொழியும் ஒருசினையும் ஒருமுதலுமாய் முறையே ஒன்றை ஒன்று விசேடித்து வருதலும், ஈர் அடை முதலோடு ஆதலும் – இரண்டு அடைமொழி ஒருமுதலை விசேடித்து வருதலும், வழக்கு இயல் –உலக வழக்கமாம்; ஈர் அடை சினையொடு செறிதலும்–இரண்டு அடைமொழி ஒருசினையை விசேடித்து வருதலும், மயங்கலும்–இவ்வரம்பு கடந்து வருதலும், செய்யுட்கு – செய்யுளுக்கு உரிய வழக்கமாம்; எ—று.

வழக்கு:–

(1) வேற்கை முருகன், செங்கால் நாரை, முழங்கு திரைக் கடல் – இவை, ஓர் அடைமொழியும் ஒருசினையும் ஒருமுதலு மாகி ஒன்றைஒன்று விசேடித்து வந்தன; வேல்–கையையும், கை– முருகனையும் விசேடித்தல் காண்க.

(வேல்–அடைமொழி. கை–சினை.முருகன்–முதல்)

இவை–சிறுபான்மை கைவேல்முருகன், கால்செந்நாரை, திரைமுழங்கு கடல் என இம்முறை மாறி வருதலும் உண்டு.

(2) மனைச் சிறுகிணறு, சிறுகருங் காக்கை–இவை, இரண்டு அடைமொழி முதலை விசேடித்து வந்தன.

செய்யுள்:–

(1) "சிறு பைந் தூவி," "கரு நெடுங் கண்"– இவை, இரண்டு அடைமொழி சினையை விசேடித்து வந்தன.

(2) "பெருந் தோட் சிறு மருங்குற் பேரமர்க்கட் பேதை"

"சிறு நுதற் பேரமர்க்கட் செய்யவா யையநுண்ணிடையாய்"

இவை இவ்வரம்பு கடந்து வந்தன.

இச் சூத்திரத்துக் கூறிய நான்கு விதிகளுள், அடை சினை முதல்முறை அடைதல் மாத்திரம் மரபு வழுவாமற் காத்தலும், மற்றை மூன்றும் மரபு வழுவமைதியுமாம்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: அடை சினை முதல் முறை அடைதலும் – ஓரடையும் ஒரு சினையும் ஒருமுதலும் ஒன்றையொன்று விசேடித்து வருதலும், ஈரடை முதலோடு ஆதலும் – இரண்டடை முதலை விசேடித்து வருதலும், வழக்கு இயல் – வழக்கு நடையாம்; ஈரடை சினையொடு செறிதலும் – இரண்டடை சினையை விசேடித்து வருதலும், மயங்கலும் – இவ்வரம்பு கடந்து வருதலும், செய்யுட்கு – செய்யுளுக்கு உரிய நடையாம். எ–று.

(உ–ம்.)

வழக்கு:–

(1) வேற்கை முருகன், செங்கால் நாரை, முழங்கு திரைக்கடல் – இவை ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலுமாகி ஒன்றையொன்று விசேடித்து வந்தன.

(2) மவனச்சிறு கிணறு, சிறுகருங்காக்கை – இவை இரண்டடை முதலை விசேடித்து வந்தன.

செய்யுள்:–

(1) "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த;" "கருநெடுங் கண்" இவை இரண்டடை சினையை விசேடித்து வந்தன.

(2) "பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை;" "சிறுநுதற் பேரமர்க்கட் செய்யவா யையநுண்ணிடையாய்" – இவை இவ்வரம்பு கடந்து வந்தன.

அடைசினைமுதன் முறையடைத லொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமா மென்க.

## கா. நமச்சிவாய முதலியார்

அடை – (ஓர்) அடையும், சினை– (ஒரு) சினையும், முதல் – (ஒரு) முதலும், முறை அடைதலும் – ஒன்றையொன்று விசேடித்து வருதலும், ஈர்அடை –

இரண்டு அடைகள், **முதலோடு ஆதலும்** – முதலை விசேடித்து வருதலும், **வழக்கு இயல்** – வழக்கு நடையாம்; ஈரடை – இரண்டு அடைகள், **சினையொடு செறிதலும்** – சினையை விசேடித்து வருதலும், **மயங்கலும்** – இவ்வரம்பு கடந்து வருதலும், **செய்யுட்கு** – செய்யுள் நடையாகும்.

**உதாரணம்**

வழக்கு :

1. வேற்கை முருகன் ஓர்அடையும் ஒரு சினையும்
செங்கால் நாரை ஒரு முதலும் ஒன்றையொன்று
முழங்குதிரைக்கடல் விசேடித்து வந்தன.

2. மனைச் சிறு கிணறு ஈரடை முதலை விசேடித்து
சிறு கருங் காக்கை வந்தன.

செய்யுள் :

1. 'சிறுபைந் தூவியிற் சிறுமை, பசுமை இரண்டும் அடை;
செயிரறச் செய்த' தூவி – சினை.
'கடுநெடுங்கண்தருங் கருமை, நெடுமை இரண்டும்
காமநோயே' அடை; கண், சினை, ஈரடை
சினையை விசேடித்து வந்தன.

2. 'பெருந்தோட்சிறுமருங்குற்
பேரமர்க்கட்பேதை' வரம்பு கடந்தும் முறைபிற
'சிறுநுதற் பேரமர்க்கட் ழ்ந்தும் வந்தன.
செய்யவா யைபநுண்ணி
டையாய்'

அடை சினை முதல் முறை அடைதல் என்பது வழுவாமற் காத்தலும், மற்றை மூன்றும் வழுவமைதியும் ஆம்.

## மோசகு பொன்னையா

அடைமொழிகள் முதல், சினைகளை அடுத்து வருங்கால், ஓரடையும், ஒரு சினையும், ஒரு முதலும் ஒன்றையொன்று சிறப்பித்து நிற்றலும், முதலை இரண்டடைகள் சிறப்பித்து நிற்றலும் பரவை வழக்காம்; இரண்டடைகள் சினையைச் சிறப்பித்து நிற்றலும், இவ்வரம்பிகந்து அமைதலும் செய்யுள் வழக்காம் எ–று.

எ–டு

**பரவை வழக்கு**

1. வேற்கை முருகன்

செங்கால் நாரை

முழங்கு திரைக்கடல் ஓர் அடைமொழியும், ஒருசினையும், ஒரு முதலுமாக அடுத்து நின்றன

2 மனைச் சிறு கிணறு

சிறு கருங்காக்கை இரண்டு அடைகள் முதலுக்கு அடைகளாயின

செய்யுள் வழக்கு

1. சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த
சினைக்கு ஈரடைகள் வந்தன

2. பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை
செய்யுளில் மயங்கி வந்தன.

தொல்காப்பியர்,

அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்,

என்றே கூறினார். உரையாசிரியர்களில் தெய்வச்சிலையார் இதனை இரு வழக்குங் கொண்டு, செய்யுளில் மாறி வருவதை 'மொழி மாற்றிக் கொள்க' என்றார்; ஏனையோர், இஃது உலக வழக்கிற்கே ஆணை தருவதாகக் கூறிச், செய்யுள் வழக்கில் முறை மாறி வருவதை இலேசாற் கொண்டனர். உரையாசிரியர்கள் கூறியவற்றை ஒருவாறு தழுவி அமைந்துள்ள.

முதலொடு குணமிரண் டடுக்குதல் வழக்கியல்
சினையோ டடுக்குதல் செய்யு ளாறே,

என்ற நேமிநாத உரை மேற்கோள் நூற்பாவிலும் இவ்வாசிரியரின் இந்நூற்பா திட்பமுற அமைந்துள்ளது.

(52)

## 403. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்.

iyaūkai poru̲ḷ al iūūu en̲a kiḷaṭṭal

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Natural qualities**

Let the natural qualities of subjects be expressed simply (by saying)it is such (without specifying reason or change).

## ஒப்புமைப் பகுதி

**இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்**
(தொல்.சொல்.:19)

**இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தலும்**
(இ.வி.:313:1)

**இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்**
(மு.வீ.:698)

**.........இயற்கைப் பொருளினையிற் றெனச் சொல்லும்**
(சுவாமி.: 61:3)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ—ள்.:— உலகத்துப் பொருள்களெல்லாம் இயற்கைப்பொருளும் செயற்கைப்பொருளுமென இருவகையவாம். அவற்றுள், இயல்பாக வாரா நின்றபொருளைச் சொல்லுமிடத்து இத் தன்மையதென்று சொல்லல் வேண்டும், எ—று.

இவ்வாற்றானும் சொல்லும் பொருளும் வரையறுத்தாராப.

வ—று.:—

நிலம்வலிது, நீர்தண்ணிது, தீவெய்யது, வளி உளரும், உயிருணரு மென வரும்.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், மரபு வழுவமைப்பு உணர்—ற்று.

இ—ள்.:— இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என இரு வகைப்படும் பொருள்களுள் இயற்கைப் பொருளை இத் தன்மைத்து என்று கூறுக, எ—று.

இயற்கை என்பது அவிகாரம். செயற்கை என்பது விகாரம்.

வ—று.:—

மெய் உள்ளது, பொய் இல்லது, நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, மயிர் கரியது, பயிர் பசியது என வரும்.

நிலம் நீர் முதலிய பூதங்கள், மாயையின் விகாரம் என்பதை நோக்கின் செயற்கைப் பொருளாயினும், பூதத்தின் விகாரங்களை நோக்கின் இயற்கைப் பொருளாம் என்க.

ïa‰i f¥ bghUis 'இற்று' என்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின் இது வழுவமைதி யாயிற்று. இது கருதாது இவ்வாறு கூறுதல் மரபு என்பாரும் உளர். அது நிற்க.

வளி உளரும் தன்மைத்து, உயிர் உணரும் தன்மைத்து என்னாது, வளி உளரும் உயிர் உணரும் எனவும் உதாரணம் காட்டுவர். வளியின்கண்ணும் உயிரின்கண்ணும் உளர்தலும் உணர்தலுமாகிய செயல் நிகழ்ந்த துணையானே அவற்றிற்கு அவை செயற்கையாமன்றி இயற்கையாகாமையானும், அவ்வாறு கூறுதற்கோர் விதியின்மையானும் அவை பொருந்தா என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், உலகத்துப் பொருள்கள் எல்லாம் இயற்கைப் பொருளும் செயற்கைப் பொருளுமென இரண்டாம். அவற்றினுள் இயற்கைப் பொருளுக்கு ஆவதோர் இயல்பு கூறகின்றது.

**இ–ள்.:–** இயற்கைப் பொருளை–செயற்கைப் பொருள் அல்லாத இயல்பாக வாராநின்ற இயற்கைப் பொருளைச் சொல்லுமிடத்து, **இற்றெனக் கிளத்தல்** – இத்தன்மையையுடைய என்று சொல்ல வேண்டும் என்பார்கள், எ–று.

**உ–ம்.:–**

நிலம் வலிது அல்லது உரத்துத் தரிக்கும்; நீர் தண்ணிது அல்லது குளிரும் பதஞ் செய்விக்கும்; தீ வெய்யிது அல்லது சூடு ஒன்றுவிக்கும்; வளி அசையும் அல்லது எவையும் திரட்டும்; கண் காணும், காது கேட்கும், மூக்கு மணக்கும், நா சுவைக்கும், தோல் பரிசிக்கும், வாக்கு வசனிக்கும் என வரும். பிறவுமன்ன.

## விசாப் பெருமாளையர்

**இது,** மரபு வழுவமைதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.:** இயற்கைப் பொருளை–இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என்கிற இருவகைப் பொருள்களுள் இயற்கைப் பொருளை, **இற்றென**–இத்தன்மைத் தென்று, **கிளத்தல்**–சொல்லுக, எ–று.

வ—று.:—

மெய்யுள்ளது, பொய்யில்லாது, நிலம்வலிது, நீர்தண்ணிது, தீவெய்து, மயிர்கரிது, என வரும். (இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துச் செயற்கைப்பொருள் போலக் கூறுதலின் இது வழுவமைதி யாயிற்று).

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

விகாரமில்லா வியல்பினையுடைய இயற்கைப்பொருளுக்கு இயல் பெடுத்துரைக்குமிடத்து இவ்வாறு கூறுகவென் கூறுஞ் சூத்திரம் யாது?

இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

(இயற்கைப் பொருளை இற்று எனக் கிளத்தல்.)

இ—ள்.: தன்னியல்பிற்றிரியாது நின்றபொருளை, அதனியல்பு கூறுங்கால் இத்தன்மைத்தென்று சொல்லுக. எ—று.

இயற்கைப்பொருளாவது யாது?

இயற்கைப்பொருள் தனக்குப் பின்றோன்றாது தான்றோன்றும்போது உடன்றோன்றிய தன்மையுடைய பொருள்.

(இயற்கை — அவிகாரம்.)

வ—று.:—

நீலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; மயிர் கரிது; பால் வெளிது; பயிர் பசியது; மெய் யுள்ளது; பொய் யில்லது எனவரும்.

இயற்கைப்பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக்கூறுதலின், இது வழுவமைதியாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழுவமைதி யுணர்த்துகின்றது.

இ—ள்.:— (இயற்கை செயற்கை யென்னு மிருவகைப் பொருள்களுள்) இயற்கைப் பொருளை யதன் தன்மை கூறுங்கால் (ஆக்கமுங் காரணமும் கொடாமல்) இத்தன்மையை உடையது என்று கூறுக. எ—று.

இயற்கைப்பொருள் தனக்குப்பின் தோன்றாது தான் தோன்றுங்காலுடனே தோன்றிய தன்மையை யுடைய பொருள் எனவும், தனக்குப்பின் தோன்றிய தன்மையையுடைய

பொருள், செயற்கைப்பொருளெனவும், இயற்கை–அவிகாரம், செயற்கை விகார மெனவும் காண்க.

வ–று.: நிலம் வலிது, நீர் தண்ணிது, தீவெய்து, மயிர்கரிது, பால்வெளிது, பயிர்பசியது, மெய்யுள்ளது, பொய்யில்லது என வரும்.

எல்லாப்பொருள்களும் மாயையின் விகாரமென்பதை நோக்கச் செயற்கைப் பொருளாயினும், அந்தந்தப் பொருள்கள் தோன்றுங்காலுடன் தோன்றிய குணங்களாகிய அவிகாரங்களை நோக்க இயற்கைப் பொருளாமென்க. இந்த இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாற் செயற்படுத்திக் கூறுதலால் வழுவமைதியாயிற்று. இது கருதாது, இவ்வாறு கூறுதல் மரபென்பாரு முண்டு. சேற்று நிலம் மிதித்தவன் வன்னிலமிதித்தபோது, நிலம்வலிதாயிற் றெனின் மெலிதாகியதுவலிதாய் வேறுபட்ட தென ஆக்க வேறுபாடு குறித்து நின்றதினாலே இயற்கைப்பொருள் ஆக்கமோடு வந்ததன்றென்க. இச்சூத்திரம் ஆசிரிய வசனமெனக் காண்க. கிளத்தலென்னும் வியங்கோள் முற்றிற்குப் பயனிலை கூட்டி முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– இயற்கை பொருளை – (இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என இரண்டு வகைப்படும் பொருள்களுள்) இயற்கைப்பொருளை, இற்று என கிளத்தல் – (ஆக்கமுங் காரணமுங் கொடாமல்) இத்தன் மையதென்று சொல்லுக.

குறிப்பு ;–

இயற்கைப் பொருள் – தனக்குப்பின் தோன்றாமல் தான் தோன்றிய காலத்துத் தன்னுடன் தோன்றிய தன்மையையுடைய பொருள். செயற்கைப்பொருள் – தான் தோன்றிய காலத்துத் தன்னுடன் தோன்றாமல் தனக்குப்பின் தோன்றிய தன்மையுடைய பொருள். (இயற்கை – அவிகாரம்; செயற்கை – விகாரம்)

உ–ம் :–

நிலம்வலிது, நீர்தண்ணிது, தீவெய்து, மயிர்கரிது, பால் வெள்ளிது, பயிர்பசியது, மெய் உள்ளது, பொய் இல்லது, உயிர் உணரும்.

நிலம், நீர் முதலிய பூதங்கள் தமக்குக் காரணமான மாயையை நோக்குங்கால் செயற்கைப்பொருளாமாயினும், தம்மிற் றோன்றிய இந்திரியம் முதலிய தத்துவங்களைநோக்குங்கால் இயற்கைப் பொருளேயாமென்க.

நிலந்தோன்றியகாலத்தே அதனுடன் வலிமையும், நீர்தோன்றிய காலத்தே அதனுடன் தண்மையும் தோன்றி யுள்ளமையறிக. இயற்கைபொருளை இத்தன்மைய தென்று வரும் வினையாற்கூறலின் இது வழுவமைதி யாயிற்று. இச்சூத்திரம் தொல்காப்பியத்தினின்று எடுத்துக்கொண்ட மேற்கொள்.

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— இயற்கைப் பொருளை** — இயற்கைப்பொருள் செயற்கைப்பொருளென இருவகைப்படும் பொருள்களுள் இயற்கைப் பொருளை, **இற்று எனக் கிளத்தல்** — இத்தன்மைத் தென்று சொல்லுக. எ—று.

இயற்கைப் பொருள் தனக்குப் பின்றோன்றாது தான்றோன்றும்போது உடன்றோன்றிய தன்மையையுடைய பொருள். செயற்கைப்பொருள் தனக்குப் பின்றோன்றிய தன்மையை யுடைய பொருள். (இயற்கை—அவிகாரம். செயற்கை—விகாரம்.)

**வ—று.:—**

நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; மயிர் கரிது; பால் வெளிது; பயிர் பசியது; மெய் யுள்ளது; பொய்யில்லது என வரும்.

இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின், இது வழுவமைதியாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். இயற்கைப் பொருளை** — இயற்கை செயற்கை என இருவகைப் பொருள்களுள் இயற்கைப் பொருளை — **இற்று எனக் கிளத்தல்** — இத்தன்மைத் தென்று சொல்லுக. எ—று.

இயற்கைப் பொருளாவது தனக்குப் பின்றோன்றாது தான்றோன்றும் போது உடன்றோன்றிய தன்மையுடைய பொருள். (இயற்கை — அவிகாரம். செயற்கை — விகாரம்).

**வ—று.:—**

நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; மயிர்கரிது; பால் வெளிது; பயிர்பசியது; மெய்யுள்ளது; பொய்யில்லது என வரும்.

இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின், இது வழுவகை மதியாயிற்று. இச்சூத்திரம் தொல்காப்பியத்தது ஆதலின் மேற்கோளெனப் படும்.

## வை.மு.சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– இயற்கை பொருளை – (இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் என இருவகைப்படும் பொருள்களுள்) இயற்கைப்பொருளை, இற்று என கிளத்தல் (ஆக்கமும் காரணமும் கொடாமல்) இத்தன்மைய தென்று சொல்லுக; எ–று.

இயற்கைப்பொருள்–தனக்குப்பின் தோன்றாமல் தான் தோன்றியபோது உடன் தோன்றிய தன்மையையுடைய பொருள். செயற்கைப்பொருள் தனக்குப் பின் தோன்றிய தன்மையையுடைய பொருள். இயற்கை–அவிகாரம். செயற்கை– விகாரம்.

உ–ம்.:–

நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, மயிர் கரிது, பால் வெள்ளிது, பயிர் பசியது, மெய் உள்ளது, பொய் இல்லது; உயிர் உணரும்.

இயற்கைப்பொருளை இத்தன்மையதென்று வரும் வினையாற் கூறுதலின், இது வழுவமைதி யாயிற்று. நிலம் முதலியவற்றுடனே வலிமை முதலியனவும் இயல்பில் தோன்றியிருத்தல் காண்க.

இச் சூத்திரம் ஆசிரிய வசனமென்று அறிக. (தொல்காப்பியம்)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– இயற்கைப் பொருளை – (இயற்கைப்பொருள் செயற்கைப் பொருளென இருவகைப்படும் (பொருள்களுள்) இயற்கைப்பொருளை, இற்று எனக் கிளத்தல் – இத்தன்மைத்தென்று சொல்லுக. எ–று.

இயற்கைப்பொருள் தனக்குப் பின்றோன்றாது தான்றோன்றும் போது உடன்றோன்றிய தன்மையையுடைய பொருள். செயற்கைப் பொருள் தனக்குப் பின்றோன்றிய தன்மையைபுடைய பொருள். இயற்கை – அவிகாரம். செயற்கை – விகாரம்.

(உ-ம்.) நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; மயிர் கரிது; பால் வெளிது; பயிர் பசியது; மெய்யுள்ளது; பொய் யில்லது.

இது தொல்காப்பியச் சூத்திரம். (சொல்லதிகாரம் - கிளவியாக்கம், 19).

இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின், இது வழுவமைதியாயிற்று.

நிலம் முதலியவற்றுடனே வன்மை முதலியனவும் இயல்வில் தோன்றியுள்ளமை காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

இயற்கைப் பொருளை - இயற்கையாயுள்ள பொருளை, இற்று என - இத்தன்மைத்து என்று, கிளத்தல் - சொல்லுக.

உதாரணம்

நிலம் வலிது
நீர் தண்ணிது
தீ வெய்து
காற்று வீசும்

இயற்கைப்பொருளை இற்று என்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துச் செயற்கைப்பொருள்போலக் கூறுதலின், இது வழுவமைதியாயிற்று.

## மோசசு பொன்னையா

இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள் என்னும் இருவகைப் பொருட்களுள், இயற்கைப்பொருளை இத்தன்மைத்து என்றே கூறுக. எ-று.

இது தொல்காப்பிய நூற்பா.

எ-டு.

நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து.

(53)

**404.** காரண முதலா வாக்கம் பெற்றும்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.

காரண முதலா ஆக்கம் பெற்றும்
காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்
ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும்
இருமையும் இன்றியும் இயலும் செயும் பொருள்.

kāraṇam muṭal ā ākkam peūūu um
kāraṇam inūi ākkam peūūu um
ākkam inūi kāraṇam atuṭṭu um
irumai um inūi um iyalum seyum poru!

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### Accidental qualities

Accidental qualities should be preceded by words of cause and followed by words of becoming or only one of these may be expressed; in some cases, however, even both may be omitted.

## ஒப்புமைப் பகுதி

செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்

(தொல்.சொல்.:20)

ஆக்கம் தானே காரண முதற்றே

(தொல். சொல்.:21)

ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே

(தொல்.சொல்.:22)

செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறலு
மாக்கங் காரண முதற்றே யாகலு
மாக்கங் காரண மின்றியும் வழக்கிடைப்

போக்கின் றாதலும் போற்றினர் கொளலே

(இ.வி.:313:2–5)

செயற்கைப் பொருளை யாக்கமொடு செப்பல்

(மு.வீ.:699)

ஆக்கந் தானே காரண முதற்றே

(மு.வீ.:700)

வழக்கினு ளாக்கங் காரண மின்றியும்
வருமா ராயுங் காலத் தானே

(மு.வீ.:701)

.................... செயற்கைப்
பொருள்நிலை யாக்கத்து இசைப்பின் ஆக்கம்முன் காரண
முன் ஊன்றல்செயுட் காகும் காரணம்இன்றி யாக்கத்துடன்
சொல்லும்வழி வழக்கிடத்துள் உளதுமரபடைவே

(சுவாமி.: 61:3–4)

## மயிலைநாதர்

இதுவுமது.

இ–ள்.:– காரணச் சொல்லை முன் கொண்டு ஆக்கச் சொல்லொடு வருவனவும், காரணச்சொல்இன்றி ஆக்கச் சொல்லொடு வருவனவும் ஆக்கச்சொல் இன்றிக் காரணச் சொல்லொடு வருவனவும் ஆக்கமும் காரணமுமின்றி வருவனவுமென்னும் இந்நான்மையின் நடக்கும், செயற்கையை யுடைய பொருள்கள், எ–று.

வ–று.:–

'கடுவும் கைபிழியெண்ணெயும் பெற்றமையால் மயிர் நல்லவாயின', 'எருப்பெய்து இளங்களைகட்டு நீர் காலியாத்தமையாற் பைங்கூழ் நல்லவாயின' எனவும், 'மயிர் நல்லவாயின', 'பைங்கூழ் நல்லவாயின' எனவும், 'கடுவும் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல' 'எருப் பெய்து இளங்களைகட்டு நீர்காலியாத்தமையாற் பைங்கூழ் நல்ல' எனவும், 'மயிர் நல்ல', 'பைங்கூழ் நல்ல' எனவும் முறையே நான்மையும் வந்தவாறு காண்க.

"பல்லார்தோ டோய்ந்து வருதலாற் [1]பாய்புன

பாடவேறுபாடு.:–

1.பூம்பொய்கை

னல்வய லூரநின் றார்புலால்–புல்லெருக்க
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்றாய் நாறு மெமக்கு"

(தொல்.கிளவி.56 ந)

என்றற் றொடக்கத்தனவும் அதன்பாற்படுத்தறிக இது, பரத்தையிற் பிரிந்துவந்த கிழவனோடு புலந்துரைக் கின்றாளாதலின், 'தார் புலால்நாறுதற்குக் காரணம் பரத்தையரொடு கூடலென்பதூஉம், எருக்கங்கண்ணி நறிதாதற்குக் காரணம் தலைவன்செய்த தீங்கு தன் புதல்வன் இனிய முகத்தால் தணிக்குமன்பென்பதூஉம் பெறப்படு கின்றன. தார் என்ற சொல் ஆக்கமின்றிக் காரண மடுத்தது.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மரபு வழுவற்க எனக் காத்தலும், மரபு வழுவமைப்பும் உணர்–ற்று.

இ–ள்.:– முதல் துணைநிமித்தங்களால் செய்யும்பொருளாகிய செயற்கைப் பொருளைக் கூறுங்கால், காரணச்சொல் முன்வர ஆக்கச்சொல் பின் வரப்பெற்றும், காரணச்சொல் தொக்கு நிற்ப ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கச்சொல் தொக்கு நிற்பக் காரணச்சொல் வரப்பெற்றும், இவ்விருவகைச் சொல்லும் தொக்கு நிற்கவும் நடக்கும், எ–று.

காரணச்சொல்லும் ஆக்கச்சொல்லும் யாண்டு வரினும். அந்நிலைக்களத்துத் தந்து பொருளுரைக்கப்படுதலின், 'காரண முதலா' என்றார்.

வ–று.:–

கடுவும் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல ஆயின, எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால் யாத்தமையான் பயிர் நல்ல ஆயின எனவும்; மயிர் நல்ல ஆயின, பயிர் நல்ல ஆயின எனவும்; கடுவும் கைபிழியெண்ணெயும் பெற்றமை யான் மயிர் நல்ல, எருப்பெய்து இளங்களை கட்டு நீர்கால் யாத்தமையான் பயிர் நல்ல எனவும்; மயிர் நல்ல, பயிர் நல்ல எனவும் வரும்.

---

பாடவேறுபாடு.:–

1.குவளைபுலால்

"பல்லார்தோள் தோய்ந்து வருதலால் பாய்புனல்
நல்வய லூரநின் தார்புலால்—புல்லெருக்க
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையால்
காதற்றாய் நாறும் எமக்கு"

எனப் பரத்தையிற் பிரிந்த தலைவனைப் புலந்தும், அவன்செய்த தீங்கினைத் தன் இனிய முகத்தான் தணிக்கும் புதல்வனை உவந்தும் ஒன்றொன்றாகாதனவற்றை ஆயின போற் கூறும்வழி ஆக்கச்சொல் தொக வருதலும் அதன்பாற் படுத்துக. பிறவும் அன்ன.

காரணமுதலா ஆக்கம் பெறுதல் ஒன்றும் வழுவற்க எனக் காத்தலும், ஏனைய மூன்றும் வழுவமைதியுமாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், செயற்கைப் பொருட்கு வரும் இயல்பு கூறுகின்றது.

**இ—ள்.:— காரண முதலா வாக்கம் பெற்றும்**— காரணச் சொல்லை முன்கொண்டு ஆக்கச் சொல்லொடு வருவனவும், **காரணமின்றி யாக்கம் பெற்றும்**—காரணச் சொல்லின்றி ஆக்கச் சொல்லோடு வருவனவும், **ஆக்கமின்றிக் காரணமடுத்தும்** —ஆக்கச் சொல்லின்றிக் காரணச் சொல்லொடு வருவனவும், **இருமையு மின்றியும்**—ஆக்கமும் காரணமும் இன்றி வருவனவும், **இயலுஞ் செயும்பொருள்**—இந்நான்மையும் பற்றி நடக்கும் செயற்கையுடைய பொருள்கள், எ—று.

உ—ம்.:—

கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையால் மயிர் நல்லவாயின எனவும், எருப்பெய்து இளங்களை கட்டி நீர்க்காலின் யாத்தமையாற் பைங்கூழ் நல்லவாயின எனவும், மயிர் நல்லவாயின, பைங்கூழ் நல்லவாயின எனவும், கடுவும் கைபிழி எண்ணெயும் பெற்றமையால் மயிர் நல்ல, எருப்பெய்து இளங்களை கட்டி நீர்க் காலின் யாத்தமையால் பைங்கூழ் நல்ல எனவும், மயிர் நல்ல, பைங்கூழ் நல்ல எனவும் முறையே நான்மையும் வந்தன.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வுழுவாமற் காத்தலும் வழுவமைதியும் உணர்த்துகின்றது.

**இ—ள்.:** செயும்பொருள்—செயற்கைப் பொருள், **காரணம்**—காரணச்சொல், முதலா—முதல்வர, **ஆக்கம்**—ஆக்கச்சொல், **பெற்றும்**—பின்வரப்பெற்றும், **காரணம்**—காரணச்சொல், **இன்றி**—தொக்குநிற்க, **ஆக்கம்**—ஆக்கச்சொல், **பெற்றும்**—வரப்பெற்றும், **ஆக்கம்**—ஆக்கச்சொல், **இன்றி**—

தொக்குநிற்க, காரணம்–காரணச்சொல், அடுத்தும்–வரப்பெற்றும், இருமையும்–அவ்விரண்டும், இன்றியும்–தொக்கு நிற்கவும், இயலும்–நடக்கும். எ–று.

வ–று.:–

'கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின' எனவும், 'எருப்பெய்திளங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர்நல்ல வாயின' எனவும், முன்காரணமும் பின்னாக்கமும் பெற்றன. 'மயிர் நல்லவாயின' எனவும், 'பயிர்நல்லவாயின' எனவும், காரணமின்றி ஆக்கம் பெற்றன. கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர்நல்ல எனவும், எருப்பெய்திளங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர் நல்ல எனவும், ஆக்கமின்றிக் காரணம் வந்தன. மயிர்நல்ல எனவும், அவ்விரண்டுமின்றியும் வந்தன. (காரண முதலாக்கம் பெறுதலொன்றும் வழுவாமற் காத்தல் மற்றை மூன்றும் வழுவமைதிகள்.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

காரணத்தாலே தன்மைதிரிந்தபொருளை அதன்திரிபுகூறுமிடத்து இவ்வாறு கூறுகவெனக்கூறுஞ் சூத்திரம் யாது?

காரண முதலா வாக்கம் பெற்றுங்
காரண மின்றி யாக்கம் பெற்றும்
ஆக்க மின்றிக் காரண மடுத்தும்
இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.

(காரணம் முதல் ஆ ஆக்கம் பெற்றும் காரணம் இன்றி ஆக்கம் பெற்றும் ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும் இருமையும் இன்றியும் இயலும் செயும்பொருள்.)

இ–ள்.: காரணச்சொன் முன்வர ஆக்கச்சொற் பின்வரப்பெறறும், காரணச்சொற் றொக்குநிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கச்சொற் றொக்குநிற்கக் காரணச்சொல் வரப்பெற்றும் இவ;விருவகைச் சொல்லுந் தொக்குநிற்கவும் நடக்கும் செயற்கைப்பொருள். எ–று.

செயற்கைப்பொருளாவது யாது?

காரணத்தாற் றன்னியல்பு திரிந்தபொருள்.

செயற்கைப்பொருள் எத்தனைவகையாலியலும்?

1. "காரணமுதலாவாக்கம் பெற்றும்"

2. "காரணமின்றியாக்கம் பெற்றும்"

3. "ஆக்கமின்றிக் சாரணமடுத்தும்"

4.. "இருமையுமின்றியும்"

ஆக நான்குவகையாலும் "இயலுஞ் செயும்பொருள்."

வ—று.;—

(1) எண்ணெய் பெற்றமையான் மயிர் நல்லவாயின; எருப்பெய் திளங்களைகட்டு நீர் கால்யாத்தமையாற் பயிர் நல்லவாயின. இவை முன் காரணச் சொல்லும் பின் ஆக்கச் சொல்லும் வரப்பெற்றன.

(2)மயிர்நல்லவாயின; பயிர்நல்லவாயின. இவை காரணச் சொற்றொக்குநிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றன.

(3)எண்ணெய்பெற்றமையான் மயிர்நல்ல; எருப்பெய் திளங்களை கட்டுநீர் கால்யாத்தமையாற் பயிர்நல்ல. இவை ஆக்கச்சொற்றொக்குநிற்கக் காரணச்சொல் வரப்பெற்றன.

(4) மயிர்நல்ல; பயிர்நல்ல. இவை காரணச்சொல் ஆக்கச்சொல் இரண்டுந் தொக்குநிற்கப் பெற்றன.

காரணமுதலா வாக்கம் பெறுதலொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்தமூன்றும் வழுவமைதியுமாமென்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபுவழுவாமற் காத்தலும் அதன் வழுவமைதியு முணர்த்திற்று.

இ—ள்.:— (முதற்காரணந் துணைக்காரண நிமித்த காரணங்களாற் செய்யப்படுபொருளாகிய செயற்கைப் பொருளைக் கூறுங்கால்) **காரண முதலாவாக்கம் பெற்றும்** — காரணச்சொல் முன்வர ஆக்கச்சொல் பின்வரப் பெற்றும், **காரணமின்றி ஆக்கம் பெற்றும்** — காரணச்சொல் தொக்குநிற்க ஆக்கச் சொல் பின் வரப்பெற்றும், **ஆக்கமின்றிக் காரண மடுத்தும்** — ஆக்கச்சொல் தொக்கு நிற்கக் காரணச்சொல் முன்வரப் பெற்றும், **இருமையுமின்றியுமியலுஞ் செயும் பொருள்** — ஆக்கங்காரணமிரண்டுந் தொக்குநிற்கவுஞ் செயற்கைப்பொருள் நடக்கும், எ—று.

இந்த ஆக்கச்சொல்லும் காரணச்சொல்லும் எவ்விடத்து வரினும் அவை நிற்க வேண்டுமிடத்து வைத்துப் பொருளுரைக்க வேண்டுமாதலால் காரண முதலாவாக்கம் பெற்றும் என்றார்.

வ—று.:—

கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின, எருப்பெய்து இளங்களைகட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர் நல்லவாயின – இவை காரணமுதலா ஆக்கம் பெற்றன. (களைகட்டல்–களைபறித்தல், யாத்தல்– கட்டுதல்,) மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின இவை காரணச்சொல் தொக்கு ஆக்கம் பெற்றன. கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர்நல்ல, எருப்பெய் திளங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர்நல்ல, இவை யாக்கச்சொல் தொக்கு வந்தன. மயிர்நல்ல பயிர்நல்ல–இவை யிரண்டுந் தொக்கு வந்தன. இவற்றுள், காரண முதலாவாக்கம் பெறுதலொன்றும் வழுவாமற் காத்தலும் ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமாமென்க, பிறவுமன்ன.

இனி இச்சூத்திரத்திற்குக் காரணத்தால் தன்குணம் வேறுபட்ட பொருளைக் கூறுங்கால் காரணமும் ஆக்கமுங் கொடுத்தே கூறவேண்டுமெனவும் அவை தொங்கு வருதல் செய்யுள் விகாரமெனவும் வழக்கின்கண் அவை தொக்கு வரினுங் குற்றமின்றெனவும் பொருளுரைத்துக் கொள்க. அவை வருமாறு.

"வருமழைய வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்ணகைக்
கருமுருகன் சூடியகண்ணி – திருநுதா
லின்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தன்
சாயல வாயின தோள்"

என இது காரணமும் ஆக்கமும் பெற்று வந்தது.

"தெரிகணை யெஃகத் திறந்தவா யெல்லாங்
குருதி படிந்துண்ட காக–முருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மா
றப்பியா ரட்ட களம்"

இதனுள், குருதி படிந்துண்டதனால் எனக் காரணம் வெளிப்பட்டுச் சிரல்வாய ஆயின என்னும் ஆக்கச்சொல் விகாரத்தால் தொக்கு நின்றது. (குரல்–பெண்மயிர், எஃகம்– ஆயுதப் பொதுப்பெயர், கணை – சிறப்புப்பெயர், குக்கில்– செம்போத்து, சிரல்–செவ்வாய்ச் சிச்சிலிக் குருவி, 'சிரல்கவு தம்பொன் வாய்ப்புட் டித்திரி சிச்சிலிப்பேர்' என்பது நிகண்டு, செங்கண் மாறப்பியார் செங்கண்மால் தப்பியார்,)

'அரியகானஞ் சென்றோர்க்
கெளிய வாகிய தடமென் றோளே'

இதனுள், கற்புக்காலத்து என நிற்றலால் அக்காலமென்னுங் காரணம் வெளிப்பட்டு நின்றது.

'நல்லவை யெல்லாந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வம் செயற்கு'

இதனுள்ளும் ஊழலென்பது அதிகாரத்தால் வெளிப்பட்டு நின்றது. இனி வழக்கின்கண் – மயிர் நல்ல, பயிர்நல்ல என வாக்கங் காரணமிரண்டு மின்றி வந்தன. இவற்றிற்கு நன்மை செயற்கையாயின், முன்தீயனவாய்ப் பின்பு நல்லனவாகியபோது அந்தத் தீமையைக் காணாதவன் மயிர் நல்ல, பயிர் நல்ல வென்றானாதலால் ஆக்கமுங் காரணமு முளவெனவே துணிந்து கொள்க. இவ்வாறு கூறுதல் ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தென்பதை.

"செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்"

எனவும்

"ஆங்கந் தானே காரண முதற்றே"

எனவும்,

ஆக்கக் கிளவி காரண மின்றியும்–போக்கின்

றென்ப வழக்கி னுள்ளே

எனவும் கூறிய சூத்திரங்களாலு முரையாலு முய்த்துணர்ந்து கொள்க. செயும் பொருளியலு மென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** செயும் பொருள் – செயற்கைப்பொருள், காரணம் முதல் ஆ ஆக்கம் பெற்றும் – காரணச்சொல் முன் வரவும் ஆக்கச்சொல் பின் வரவும் பெற்றும், காரணம் இன்றி ஆக்கம் பெற்றும் – காரணச்சொல்தொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கம் இன்றி காரணம் அடுத்தும் – ஆக்கச்சொல் தொக்குநிற்கக் காரணச்சொல் வரப்பெற்றும், இருமையும் இன்றியும் – இவ்விருவகைச் சொல்லும் தொக்குநிற்கவும், இயலும் – நடக்கும்.

**உதாரணம்**

1.கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையால், மயிர் நல்ல வாயின; எருப்பெய்து இளங்களைகட்டு நீர் கால்யாய்த்தமை யால், பயிர் நல லவாயின – இவை முன் காரணச் சொல்லும் பின் ஆக்கச்சொல்லும் பெற்றன.

2. மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின – இவை காரணச் சொல்லின்றி ஆக்கச்சொல் பெற்றன.

3. கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையால், மயிர் நல்ல; எருப்பெய்து இளங்களைகட்டு நீர் கால்யாத்தமையால், பயிர் நல்ல–– இவை ஆக்கச்சொல் இன்றிக் காரணச்சொல் பெற்றன.

4. பிறப்பு நல்ல, இறப்பு நல்ல –– இவை காரணச்சொல் ஆக்கச்சொல் இரண்டுந் தொக்குநிற்கப் பெற்றன.

குறிப்பு :– இந்நான்கு விதிகளுள், காரணமுதலா ஆக்கம்பெறுதல் மாத்திரம் மரபு வழுவாமற் காத்தலும், மற்றை மூன்றும் மரபு வழுவமைதியுமா மென்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: செயும்பொருள்–செயற்கைப் பொருள், காரணம் முதலா ஆக்கம் பெற்றும் – காரணச்சொன் முன்வர ஆக்கச்சொற் பின்வரப் பெற்றும், காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்–காரணச் சொற்றொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப் பெற்றும், ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும் – ஆக்கச்சொற் றொக்கு நிற்கக் காரணச்சொல் வரப் பெற்றும், இருமையும் இன்றியும் இயலும் – இவ்விருவகைச் சொல்லுந் தொக்கு நிற்கவும் நடக்கும், எ–று.

வ–று.:–

(1) கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின; எருப்பெய் திளங்களைகட்டு நீர் கால் யாத்தமையாற் பயிர் நல்லவாயின. இவை முன் காரணச் சொல்லும் பின் ஆக்கச்சொல்லும் வரப் பெற்றன.

(2) மயிர் நல்லவாயின; பயிர் நல்லவாயின. இவை காரணச் சொற்றொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றன.

(3) கடுவுங் கைபிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல, எருப்பெய் திளங்களைகட்டு நீர் கால் யாத்தமையாற் பயிர் நல்ல. இவை ஆக்கச்சொற் றொக்கு நிற்கக் காரணச்சொல் வரப்பெற்றன.

(4) மயிர்நல்ல; பயிர்நல்ல. இவை காரணச்சொல் ஆக்கச்சொல் இரண்டுந் தொக்கு நிற்கப் பெற்றன.

காரணமுதலா வாக்கம் பெறுதலொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியமாமென்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். செயும்பொருள் – செயற்கைபொருள், – காரணம் முதலா

ஆக்கம் பெற்றும் – காரணச் சொன்முன் வர ஆக்கச் சொற்பின் வரப்பெற்றும், – காரணம் இன்றி ஆக்கம் பெற்றும் – காரணச் சொற்றொக்கு நிற்க ஆக்கச் சொல் வரப்பெற்றும், ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும் – ஆக்கச் சொற்றொக்குநிற்கக் காரணச் சொல்வரப் பெற்றும், இருமையும் இன்றியும் இயலும் – இவ்விருவகைச் சொல்லுந் தொக்குநிற்கவும் நடக்கும். எ–று.

வ–று.:–

(1)கடுவுங் கைபிழியெண்ணையும் பெற்றமையான் மயிர் நல்லவாயின; எருப்பெய்தினங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர் நல்லவாயின; தீச்சார்தலால் நீர் வெய்தாயிற்று; நீர்கலத்தலால் நிலம் மெலிதாயிற்று. இவை காரணச் சொல் முன்னும் ஆக்கச் சொல் பின்னும் வரப்பெற்றன.

(2)மயிர் நல்லவாயின; பயில் நல்லவாயின. இவை காரணச்சொற்றொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றன.

(3)கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர்நல்ல; எருப்பெய் திளங்களைகட்டு நீர்கால் யாத்தமையாற் பயிர்நல்ல. இவை ஆக்கச்சொற்றொக்கு நிற்கக் காரணச்சொல்வரப் பெற்றன.

(4)மயிர்நல்ல; பயிர்நல்ல. இவை காரணச்சொல் ஆக்கச்சொல் இரண்டுந்தொக்குநிற்கப்பெற்ற செயற்கைப் பொருள். அந்நன்மை பொருட்குப்பின் றோன்றாது உடன்றோன்றிற்றேல் இயற்கையேயாம்; அவ்வாறன்றி முன்றீயவாய்ப் பின்நல்ல வாயினவேனும், தீயநிலைமை காணாதான் பயிர்நல்ல மயிர்நல்ல என்றால் வருங்குற்றமென்னெனின், அது செயற்கை யாவதுணர்ந்தான் ஆக்கங்கொடாது சொல்லி னன்றே வழுவாவதென்க. இயற்கைப் பொருள் ஆக்கமுங் காரணமும்பெறாது வருதலும், செயற்கைப் பொருள் அவ்விரண்டுந் தொக்குநிற்க வருதலும் சொல் வடிவிலொன்றாயிருப்பினும் முன்பின்றொடர்பை உற்று நோக்குவோர் இயற்கை செயற்கைகளுள் யாதென்பது துணிகுவர். (சூ) "செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்" எனவும்.

"ஆக்கந்தானேகாரணமுதற்றே" எனவும். "ஆக்கக்கிளவி காரணமின்றியும், போக்கின்றென்ப வழக்கினுள்ளே" எனவும் ஆசிரியர் தொல்காப்பியர்கூறிய சூத்திரவுரைகளை நோக்கியு முணர்க. (போக்கு – குற்றம்)

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– செயும் பொருள்–செயற்கைப்பொருள், காரணம் முதல் ஆக்கம் பெற்றும்–காரணச்சொல் முன் வரவும் ஆக்கச்சொல் பின் வரவும் பெற்றும், காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்– காரணச்சொல் தொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப் பெற்றும், ஆக்கம் இன்றி காரணம் அடுத்தும் – ஆக்கச்சொல் தொக்கு நிற்கக் காரணச்சொல் வரப் பெற்றும், இருமையும் இன்றியும் – இவ்விருவகைச் சொல்லும் தொக்கு நிற்கவும், இயலும்–நடக்கும்; எ–று.

உ–ம்.:–

(1) கைபிழி யெண்ணெய் பெற்றமையால், மயிர் நல்லவாயின; எருப்பெய்து களைபறித்து நீர் பாய்ச்சியதனால், பயிர்நல்ல வாயின–இவை, முன் காரணச்சொல்லும், பின் ஆக்கச் சொல்லும் பெற்றன.

(2) மயிர் நல்ல வாயின, பயிர் நல்ல வாயின–இவை, காரணச்சொல்லின்றி ஆக்கச் சொல் பெற்றன.

(3) கைபிழியெண்ணெய் பெற்றமையால், மயிர்நல்ல; எருப்பெய்துகளை பறித்து நீர் பாய்ச்சியதனால், பயிர் நல்ல– இவை, ஆக்கச்சொல்லின்றிக் காரணச்சொல் பெற்றன.

(4) பிறப்பு நல்ல, இறப்பு நல்ல–இவை, காரணச்சொல் ஆக்கச்சொல் ஆகிய இரண்டும் தொக்கு நிற்கப்பெற்றன.

இந்நான்கு விதிகளுள், காரணமுதலா ஆக்கம் பெறுதல் மாத்திரம் மரபு வழுவாமற் காத்தலும், மற்றை மூன்றும் மரபு வழுவமைதியுமாம்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– செயும்பொருள் – செயற்கைப்பொருள், காரணம் முதலா ஆக்கம் பெற்றும் – காரணச் சொன் முன்வர ஆக்கச்சொற் பின்வரப் பெற்றும், காணரணம் இன்றி ஆக்கம் பெற்றும் – காரணச்சொல் தொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும் – ஆக்கச் சொல் தொக்கு நிற்கக் காரணச்சொல் வரப்பெற்றும், இருமையும் இன்றியும் – இவ்விருவகைச் சொல்லுந் தொக்கு நிற்கவும், இயலும் – நடக்கும். எ–று.

உ–ம்.:–

(1) கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின; எருப்பெய்து இளங்களைகட்டு நீர் கால்

யாத்தமையாற் பயிர் நல்லவாயின – இவை முன்காரணச் சொல்லும் பின் ஆக்கச் சொல்லும் வரப்பெற்றன.

(2) மயிர் நல்லவாயின; பயிர் நல்லவாயின – இவை காரணச்செல் தொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றன.

(3) கடுவுங் கைபிழியெண்ணையும் பெற்றமையான், மயிர் நல்ல; எருப்பெய்து இளங்களைகட்டு நீர் கால் யாத்தமையாற் பயிற் நல்ல – இவை ஆக்கச்சொல் தொக்கு நிற்கக் காரணச்சொல் வரப்பெற்றன.

(4) மயிர் நல்ல; பயிர் நல்ல – இவை காரணச்சொல் ஆக்கச்சொல் இரண்டுந் தொக்கு நிற்கப்பெற்றன.

காரணமுதலா வாக்கம்பெறுத லொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமா மென்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**செயும் பொருள்** – செயற்கைப் பொருள், **காரணம்** – காரணச்சொல், **முதல்** – முதல் வர, **ஆக்கம்** – ஆக்கச் சொல், **பெற்றும்** – (பின்பரப்) பெற்றும், **காரணம்** – காரணச்சொல், **இன்றி** – தொக்கு நிற்க, **ஆக்கம்** – ஆக்கச்சொல், **பெற்றும்** – (வரப்) பெற்றும், **ஆக்கம்** – ஆக்கச்சொல், **இன்றி** – தொக்கு நிற்க, **காரணம்** – காரணச்சொல், **அடுத்தும்** – வரப்பெற்றும், **இருமையும்** – அவ்விரண்டும், **இன்றியும்** – தொக்கு நிற்கவும், **இயலும்** – நடக்கும்.

**உதாரணம்**

| | |
|---|---|
| கடுவும் கைபிழி என்ணெயும் பெற்றமை<br>யான் மயிர் நல்லவாயின<br>எருப்பெய்து இளங்களை கட்டு நீர் கால்<br>யாத்தமையாற் பயிர் நல்லவாயின | முன்னே காரணச்<br>சொல்லும் பின் ஆக்கச்<br>சொல்லும் பெற்றன. |
| மயிர் நல்லவாயின<br>பயிர் நல்லவாயின | காரணச்சொல்<br>தொக்கு ஆக்கம் பெற்றன |
| கடுவுங் கைபிழி எண்ணெயும் பெற்றமை<br>யான் மயிர்நல்ல<br>எருப்பெய்து இளங்களை கட்டு நீர் கால்<br>யாத்தமையாற் பயிர் நல்ல | ஆக்கச்சொல் தொக்கு<br>நிற்க, காரணச்<br>சொல் வந்தன. |
| மயிர்நல்ல<br>பயிர்நல்ல | காரணச்சொல் ஆக்கச்<br>சொல் இரண்டும்<br>தொக்கு நிற்கப் பெற்றன. |

காரணம் முதலா ஆக்கம் பெறுதல் ஒன்றே வழுவாமற் காத்தல், மற்றை மூன்றும் வழுவமைதிகள்.

## மோசசு பொன்னையா

செயற்கைப்பொருள் காரணச்சொல் முன்வர ஆக்கச்சொல் பின்வர அவற்றைப் பெற்றும், காரணச்சொல் தொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப்பெற்றும், ஆக்கச்சொல் தொக்கு நிற்கக் காரணச்சொல் வரப்பெற்றும், காரணச்சொல் ஆக்கச் சொல்லாகியவை இரண்டும் தொக்கு நிற்கவும் நடக்கும் எ–று.

எ–டு.:–

1. எருப்பெய்து களைகட்டு நீர்ப்பாய்சினமையின் பயிர் நல்லவாயின

–முன்னர் காரணச்சொல் வர, பின்னர் ஆக்கச்சொல் வந்தது.

2. பயிர் நல்லவாயின–காரணச்சொல் தொக்கு நிற்க, ஆக்கச்சொல் வந்தது.

3. எருப்பெய்து களைகட்டு நநீர்ப்பாய்ச்சினமையின், பயிர் நல்ல

–ஆக்கச்சொல் தொக்கு நிற்க, காரணச்சொல் வந்தது.

4. பயிர் நல்ல–அவை இரண்டுந்தொக்கு நின்றன.

இந்நூற்பா,

செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்,
ஆக்கந் தானே காரண முதற்றே,
ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே,

என்னும் தொல்காப்பிய நூற்பாக்களைத் தழுவி இயன்றதாகும். காலத்தால் வழக்கு செய்யுள் என்னும் வேறுபாடுகள் ஒழிந்தமையை ஏற்று இவ்வாசிரியர் இவ்வாறு நூற்பா செய்தார் என்க.

(54)

**405. தம்பா லில்ல தில்லெனி [1]னினனா**
**யுள்ளது கூறி மாற்றியு முள்ளது**
**சுட்டியு முரைப்பர் சொற்சுருங்கு தற்கே.**

---

பாட வேறுபாடு:–

1.இனனாவுள்ளது

தம் பால் இல்லது இல் எனின் இனனாய்
உள்ளது கூறி மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொல் சுருங்குதற்கே.

ṭam pāl illaṭu il enin inan āy
ul̲l̲aṭu kūūi māūūi um ul̲l̲aṭu
sutti um uraippar sol suruṅkuṭal ku ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Negation and affirmation**

When (what is asked) is not with them, the learned express negation by declaring the existence of something allied to it; or (if it is with them), they also answer by defining (its quantity). This they do for the sake of brevity.

## ஒப்புமைப் பகுதி

எப்பொரு ளாயினும் அல்லது இல்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்

(தொல்.சொல்.:35)

அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்

(தொல்.சொல்.:36)

பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்றா கும்மே

(தொல்.சொல்.:37)

இல்ல தல்ல தில்லதனா னில்லெனி
னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறியு
மப்பொருள் கூறி யகற்றினப் பொருளினைச்
சுட்டியு மாற்றுவர் சொற்சுருங் குதற்கே

(இ.வி.:310)

யாதெனு மொருபொரு ளல்லதில் லென்பான்
அஃதல பிறபொரு ளறைவது வழக்கே

(மு.வீ.:712)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ-ள்.:- ஒருவன் ஒன்றை வினாவினால் அது தம்பக்கலில்லை யென்று உரைக்க வேண்டின், அவன் வினாயதற்கு இனமாய்த் தன் பக்கலுள்ள தனைச்சொல்லி வினாயதனை இல்லை யென்றும், உளதாயின் அதனை இத்துணை யுண்டென்று சுட்டியும் சொல்லுவர் தொல்லோர், [2]உரை பல்காமற்கு, எ-று.

வ-று.:-

பயறுளவோ வணிகீரே யென்றாற்கு உழுந்தல்ல தில்லை; இத்துணைப்பயறுள வென்க. நூறு விற்கும் பட்டாடையுளவோ என்றாற்கு ஐம்பது விற்கும் கோசிக மல்லதில்லை; இத்துணைப் பட்டாடையுள வென்க. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

எ-னின், மரபு வழுவற்க எனக் காத்தல் உணர்-ற்று.

இ-ள்.:- ஒருவன் வினவியது தம்பக்கல் இல்லையாயின் அதனை இல்லை என்னலுறின் அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கல் உள்ளதனைக் கூறி அக்கூற்றானே அதனை இல்லை என்றும், உள்ளதாயின் இத்துணை உண்டு என்றும் கூறுவர் புலவர், வினவுதலும் செப்புத்லுமாகிய சொற்கள் சுருங்குதற் பொருட்டு, எ-று.

குன்றக்கூறல் முதலிய குற்றங்கள் நீக்கிச் சுருங்கச் சொல்லல் முதலிய அழகொடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டும் என்பார் சொற்சுருங்குதற்கே என்றார்.

வ-று.:-

'பயறு உண்டோ வணிகீரே' என்றார்க்கு அஃது இன்று என்பார், 'உழுந்து உண்டு', 'உழுந்தும் துவரையும் உண்டு' என்க. இவ் வினமொழிகள் பயறு இல்லை என்னும் இறைபயந்து நிற்றலின் 'இனனாயுள்ளது கூறி மாற்றியும்' என்றார். அஃது உண்டு என்பார், 'இத்துணை உண்டு' என்க. 'நூறுவிற்கும் பட்டாடை உண்டோ' என்றார்க்கு அஃது இன்று என்பார் 'ஐம்பது விற்கும் கோசிகம் உண்டு' என்க. அஃது

பாட வேறுபாடு:-

1.பல்காமைக்கு

உண்டு என்பார், 'எண்பது விற்பது உண்டு' என்க. பிறவும் அன்ன.

இவ்வாறன்றி, 'உழுந்தல்லது இல்லை', 'இத்துணைப்பயறு உள' என உதாரணம் காட்டுவாரும் உளர். அவை சொற்சுருங்குதற்கே என்பதனோடு மாறுபட்டு மிகைபடக்கூறல் என்னும் குற்றமாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், வினா நிகழுமிடத்து விடை கூறுவதற்கு ஓர் இயல்பு கூறியது.

**இ—ள்.:— தம்பாவில்லது** — ஒருவன் ஒன்றை வினாவினால் அது தன் பக்கத்தில் இல்லதை, **இல்லெனின்**—தான் இல்லையென்று சொல்லத் தொடங்கினான், **இனனாயுள்ளது கூறியும்**—அவன் வினாயதற்கு இனமாய்த் தன் பக்கம் உள்ளதைச் சொல்லியும், **மாற்றியும்** — ஒருவன் வினாயதற்கு இனமாய் உள்ளது சொல்லி மறுத்தும், **உள்ளது சுட்டியு முரைப்பர்** —அவன் வினாயது தன்னிடத்து உளதாயின் அதனை இத்துணை உண்டென்று சுட்டியும் சொல்லுவர், **தொல்லோர் சொற் சுருங்குதற்கே** — உரை பல்காமற்கு, **எ—று.**

**உ—ம்.:—**

'பயறுளவோ வணிகரே' என்றால், 'உழுந்துண்டு' எனவும், 'உழுந்தல்லது இல்லை' எனவும், 'இத்துணைப் பயறு உள'வென்னும் விடை வருமென்க.

'நூறு விற்கும் பட்டாடை உளவோ' என்றால், 'ஐந்து விற்கும் கோசியம் உண்டு' எனவும், 'ஐம்பது விற்கும் கோசிகமல்லது இல்லை' எனவும், 'இத்துணைப் பட்டாடை உள' எனவும் விடை வரும் என்க. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** மரபு வழுவாமற் காத்த லுணர்த்துகின்றது.

**இ—ள்.:—** தம்பால்—தம்மிடத்து, **இல்லது**—இல்லாத பொருளை, **இல்லெனின்—**இல்லை யெனின், இனனாய்—வினாவப்பட்டதற்கு இனமாய், **உள்ளது**—இருக்கின்ற பொருளை, **கூறி**—சொல்லி, **மாற்றியும்**—அச்சொல்லைக் கொண்டு அதனை யில்லை யென்றும், **உள்ளது**—இருக்கிறபொருளாயின், **சுட்டியும்**—இவ்வளவுண்டென்றும், **உரைப்பர்**—சொல்லுவர், **சொற்சுருங்குதற்கு**—வினாவும் விடையுமாகிய சொற்கள் சுருங்குதற் பொருட்டு, எ—**று.**

**வ—று.:—**

'பயறுண்டோ **வணி**கீரே' என்றவருக்கு அதுவில்லையென்பார், 'உழுந்துண்டு', 'உழுந்துந் துவரையு முண்டு' என

அதனினத்தைச் செல்லக் கடவர். அதுவுண்டென்பார் இருகலமுண்டு, இருதூணியுண்டு, என அதனளவைச் சொல்லக் கடவர். மற்றவையு மிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

தம்பாலில்லாதபொருளை இல்லையெனப் புகுமிடத்துச் சொற்சுருங்க விடைகூறுமாறு கூறுஞ் சூத்திரம் யாது?

தம்பா லில்ல தில்லெனி னினனாய்
உள்ளது கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே.

(தம்பால் இல்லது இல் எனின் இனன் ஆய் உள்ளது கூறி மாற்றியும் உள்ளது சுட்டியும் உரைப்பர் சொல் சுருங்குதற்கே.)

இ–ள்.:– தம்மிடத்து இல்லாதபொருளை இல்லையெனப் புகின் வினாவப்பட்டதற்கு இனமாய்த் தம்மிடத்துள்ள பொருளைச் சொல்லி அச்சொல்லைக்கொண்டு அதனையில்லையென்றும், உள்ளபொருளைச்சுட்டி இதுவல்ல தில்லையென்றும் சொல்லுவர் வினாவும் விடையுமாகிய சொற்கள் சுருங்குதற்பொருட்டு. எ–று.

உள்ளபொருளைச்சுட்டி இதுவல்லதில்லையென்பது யாது பற்றி?

தம்மிடத்துள்ள பொருளைச்சுட்டி இதுவல்லதில்லையென்பது, வினவினான் வினவிய பொருளின் நன்மையுந் தீமையு முணர்ந்து அப்பொருளைக் கொள்ளுதற்குந் தவிர்தற்குமாம்.

தம்மிடத்து இல்லாதபொருளை இல்லையெனப் புகுமிடத்துச்சொற் சுருங்குதற்கு எத்தனை வகையாற் சொல்லுவர்?

இனனாயுள்ளது கூறிமாற்றியும், உள்ளது சுட்டியும் இருவகையாற் கூறுவர்.

குன்றக்கூறன் முதலிய குற்றங்களை நீக்கிச் சுருங்கச்சொல்லன் முதலிய அழகோடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார், சொற்சுருங்குதற்கே யென்றார்.

வ–று.:–

(1) பயறுண்டோ வணிகீரே என்றவருக்கு, அஃதில்லை யென்பார், உழுந்துண்டு, உழுந்துந் துவரையு முண்டு என அதனினத்தைச் சொல்லக்கடவர். இவ்வின மொழிகள் பயறில்லையென்னும் விடைப்பொருளைத் தந்து நிற்றலே யன்றி, மேலே உழுந்துண்டோ துவரையுண்டோ என்னும் வினாக்களும் அவற்றிற்கு விடைகளும் பல்காமற் காத்து நிற்றலுமுடையனவாதல் காண்க.

(2) பயறுண்டோ வணிகீரே என்றவருக்கு இப்பயறல்ல தில்லையென வுள்ளதைச் சுட்டிக்கூறக்கடவர். இதனால் இதனிலுஞ்சிறந்த பயறில்லையோவென மேல்லினாவும் விடையும் பல்காமற் காத்தல் காண்க. ''உள்ளதுசுட்டியும்'' என்பதற்கு ''உள்ளபொருளாயின் இவ்வளவுண்டென்றும்'' என்றுரைத்து அதற்குப் ''பயறுண்டோ வணிகீரே என்றவர்க்கு அஃதுண்டென்பார், இருகல்முண்டு இருநாழியுண்டு என அதனளவைச் சொல்லக்கடவர்'' என வுதாரணங் கூறுவாருமுளர். அது, தம்பாலில்லதை இல்லையென்று கூறப்புகுவாராயின் எனவெடுத்துக்கொண்ட சூத்திர அதிகாரத்துக்குப் பொருந்துவதன்றாம்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மரபு வழுவாமற் காத்தலுணர்த்திற்று.

**இ-ள்.:- தம்பாலில்ல தில்லெனின்** - (ஒருவன் வினவியது) தம்பக்கலில்லை யாயின் அதனை யில்லை யெனப் புகின், இனனாயுள்ளது கூறி **மாற்றியும்** - அவன் வினவியதற்கு இனமாய்த் தம்பக்கலுள்ளதனைச் சொல்லி யச்சொல்லினாலே அதனை இல்லை யென்று மாற்றியும், **உள்ளது**-உள்ளதாயின். **சுட்டியு முரைப்பர் சொற் சுருங்குதற்கே** - இவ்வளவுண்டென்றுஞ் சொல்லுவர் வினாவுதலுஞ் செப்புதலுமாகிய சொற்கள் சுருங்குதற் பொருட்டு, எ-று.

'குன்றக்கூறல்' முதலிய குற்றங்களை நீக்கிச் சுருங்கச் சொல்லுதல் முதலிய அழகொடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்று சொல்ல வந்தவர், 'சொற்சுருங்குதற்கே' என்றார்.

வ-று.:-

'பயறுளதோ வணிகீரே' யென்றார்க்கு, அதில்லையென்பார் 'உழுந்துண்டு' 'உழுந்துந் துவரையு முண்டென்க'. இந்த இனமொழிகள் பயறில்லை யென்னும் விடைப்பொருளைத் தந்து நிற்றலால், 'இனனாயுள்ளது கூறியுமாற்றியும்' என்றார், அது உண்டென்பார் இவ்வளவுண்டென்க, நூறுவிற்கும் பட்டாடையுண்டோ என்றார்க்கு அது இல்லையென்பார், 'ஐம்பதுவிற்குங் கோசிகமுண்டென்க, அது உண்டென்பார்' எண்பது விற்பதுண்டென்க. (கோசிகம்-பட்டு.) பிறவுமன்ன.

இனி யாசிரியர் தொல்காப்பியனார்,

**''எப்பொரு ளாயினு மல்ல தில்லெனி**
**னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்''**

எனவும்,

**''அப்பொருள்கூறிற்சுட்டிக்கூறல்''**

எனவும் கூறினார். இவற்றின் பொருள் எப்பொருளாயினும் – யாதொரு பொருளாயினும் அல்லதில்லெனின்–தம்பக்கலுள்ள தல்லாததனை யில்லை யென்றுசொல்லப் புகின், அப்பொருளில்லாப் பிறிது பொருள் கூறல்–வினாவிய பொருளைக் கூறாது அதற்கினமாகிய பிறிது பொருளைக் கூறுக. அப்பொருள் கூறின் – அவன் வினவிய பொருளையே கூறுவானாயின். இவ்வளவெனச் சுட்டிக் கூறுக வென்பதாம். இதுவே இந்நூலுடையார் கருத்தாவதும். இதற்கு இவ்வாறன்றி, 'அல்லதில் லெனின்' என்பதற்கு, 'அல்லதில்லை யென்று சொல்லப் புகின்' எனப் பொருள்கூறி உழுந்தல்ல தில்லைக் கொள்ளல்ல தில்லையெனவும் இப்பயறல்லதில்லை இவையல்ல தில்லையெனவும் உதாரணங் காட்டுவாருமுண்டு. அவைசொற் சுருங்காது மிகை படக் கூறலென்னுங் குற்றமாமென்க. இதனுள் புலவரென்னும் பயனிலை குறைந்து நின்றது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :– தம்பால் இல்லது– தம்மிடத்து இல்லாத பொருளை, **இல்லெனின்** – இல்லை என்று சொல்லப்புகுந்தால், **இனனாய் உள்ளது கூறி** – (வினாவப்பட்டதற்கு) இனமாய்த் தம்மிடத்துள்ள பொருளைச் சொல்லி, **மாற்றியும்** – (அச்சொல்லைக்கொண்டு அதனை) இல்லை என்று சொல்லியும் **உள்ளது சுட்டியும்** – உள்ள பொருளாயின் இவ்வளவு உண்டென்றும், **உரைப்பர்** – சொல்லுவர், **சொல் சுருங்குதற்கு** – (வினாவும் விடையுமாகிய சொற்கள் சுருங்குதற்பொருட்டு.

குறிப்பு :– 'குன்றக்கூறல்' முதலிய குற்றங்களை நீக்கிச் 'சுருங்கச் சொல்லல்' முதலிய அழகோடு கூறல் வழக்கிற்கும் வேண்டு மென்பார் 'சொற்சுருங்குதற்கு' என்றார்.

உ–ம் ;–

1. 'பயறுளதோவணிகரே'' என்றவருக்கு, 'அஃது இல்லை' என்பவர் 'உழுந்துந்துவரையுமுண்டு' என அதன் இனத்தைச் சொல்லக் கடவர். இந்த இனமொழிகள் 'பயறில்லை' என்னும் விடைப்பொருளைத் தருதலேயன்றி, மேலே 'உழுந்துளதோ?', 'துவரையுளதோ?' என்னும் வினாக்களும் அவற்றின் விடைகளும், பெருகாமற் காத்தல் காண்க.

2. 'பயறு உளதோவணிகரே?' என்றவருக்கு அஃது உண்டென்பவர் 'இருகலம் உண்டு', 'இருதூணி உண்டு' என அதன் அளவைச் சொல்லக் கடவர். இந்த அளவைமொழிகள்

'பயறுண்டு' என்னும் விடைப்பொருளைத் தருதலேயன்றி, மேலே 'எவ்வளவு உண்டு?' என்னும் வினாவும், அதன் விடையும் பெருகாமற் காத்தல் காண்க.

## ஆறுமுக நாவலர்

இ—ள்.:— தம்பால் இல்லது இல் எனின்—தம்மிடத்து இல்லாத பொருளை இல்லையெனப் புகின், இனன் ஆய் உள்ளது கூறி மாற்றியும்— வினாவப்பட்டதற்கு இனமாய்த் தம்மிடத்துள்ள பொருளைச்சொல்லி அச்சொல்லைக் கொண்டு அதனையில்லை யென்றும், உள்ளது சுட்டியும் — உள்ளபொருளாயின் இவ்வளவுண்டென்றும், உரைப்பர் சொற் சுருங்குதற்கு — சொல்லுவர், வினாவும் விடையுமாகிய சொற்கள் சுருங்குதற் பொருட்டு, எ—று.

குன்றக்கூறன் முதலிய குற்றங்களை நீக்கிச் சுருங்கச் சொல்லன் முதலிய அழகோடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார், சொற்சுருங்குதற்கே யென்றார்.

வ—று.:—

(1) பயறுண்டோ வணிகீரே என்றவருக்கு, அஃதில்லை யென்பார், உழுந்துண்டு, உழுந்துந் துவரையுமுண்டு என அதனினத்தைச் சொல்லக்கடவர். இவ்வினமொழிகள் பயறில்லை யென்னும் விடைப்பொருளைத் தந்து நிற்றலே யன்றி, மேலே உழுந்துண்டோ துவரையுண்டோ என்னும் வினாக்களும் அவற்றிற்கு விடைகளும் பல்காமற் காத்து நிற்றலுமுடையனவாதல் காண்க.

(2) பயறுண்டோ வணிகீரே என்றவருக்கு அஃதுண்டென்பார், இரு கலமுண்டு, இரு தூணியுண்டு என அதனளவைச் சொல்லக் கடவர். இவ்வளவைமொழிகள் பயறுண்டென்னும் விடைப்பொருளைத் தந்துநிற்றலே யன்றி, மேலே எவ்வளவுண்டு என்னும் வினாவும் அதற்கு விடையும் பல்காமற் காத்துநிற்றலு முடையனவாதல் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.:— தம்பால் இல்லது இல் எனின் — தம்மிடத்து இல்லாத பதார்த்தத்தை இல்லையெனப்புகின், — இனனாய் உள்ளது கூறி மாற்றியும் — வினாவப்பட்டபொருட்கு இனமாய்த் தம்மிடத்துள்ள பதார்த்தத்தைச் சொல்லி அச்சொல்லைக் கொண்டு அதனை இல்லையென்று கருதுவித்தும், — உள்ளது சுட்டியும் — தம்மிடத்துள்ளதை இவ்வளவுண்டென்றும் — உரைப்பர் சொற்சுருங்குதற்கு — சொல்லுவர் (வணிகர்) வினாவும் விடையுமாகிய சொற்கள் பல்காது சுருங்குதற்பொருட்டு. எ—று.

ஆவணத்துப் பண்டம் விற்கும் வணிகர் தம்மிடத்துக் கொள்வோர் வேறுவேறாய் வந்து பலமுறை வினாவும் வினாக்களுக்கெல்லாம் நேர்விடை கொடுத்துக் கொண்டிருக்கின் மிகுபிரயாச முண்டாமென்று கருதிச் சொற்கள் விரியாமைப் பொருட்டு அவ்வாறு சுருக்கிக் கூறுவாரென்றவாறாம். இச்சூத்திரத்தில் உரைப்பரென்னும் பயனிலைக்குத் தோன்றாத எழுவாய் புலவரெனறெடுத் துரைத்தாருமுளர். பண்டம் விற்போர்க்கே அவ்வளவுஞ் சுருக்கிச் சொல்லுதல் அவசியமாதலானும், பண்டம் விற்போர் வணிகராதலாலும் அப்பயனிலைக்கு எழுவாய் வணிக ரென்பதே பொருத்தமாமன்றிப் புலவரென்பது பொருத்த மின்றாமென்றறிக. இங்ஙனம் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தில் வணிகர் வீதிவருணிப்பின் அவதாரிகையாகப் பாடிய "புல்லியோர் பண்டங்கொள்வார் வினவினப்பொருடம்பக்கல், இல்லெனினமாயுள்ள பொரு ளுரைத்தெதிர் மறுத்தும், அல்லதப் பொருளுண் டென்னின் விலை சுட்டியறுத்து நேர்ந்துஞ், சொல்லினு மிலாபங் கொள்வார் தொன்மரபிருக்கை சொல்வாம்" என்னுங் கவிப்பொருளானுமுணர்க.

வ–று.:–

(1) பயறுண்டோவணிகீரே என்றவருக்கு, அஃதில்லை யென்பார், உழுந்துண்டு, உழுந்துந்துவரையுமுண் டென்று அதனினத்தைச் சொல்லக்கடவர்.

இவ்வினமொழிகள் பயறில்லையென்னும் விடைப் பொருளைத் தந்து நிற்றலுமன்றி, மேலே உழுந்துண்டோ துவரையுண்டோ என்னும் வினாக்களும், அவற்றிற்கு விடைகளும் பல்காமற் காத்து நிற்றலுமுடையன வாதல் காண்க.

(2) பயறுண்டோவணிகீரே என்றவருக்கு அஃதுண்டென்பார், இருகலமுண்டு, இருதூணியுண்டு என அதனளவைச் சொல்லக் கடவர்.

இவ்வளவைமொழிகள் பயறுண்டென்னும் விடைப் பொருளைத் தந்து நிற்றலுமன்றி, எவ்வளவுண்டு என மேல்வரும் வினாவும் அதற்கு விடையும் பல்காமற் காத்துநிற்றலு முடையனவாதல் காண்க.

ஆசிரியர் தொல்காப்பியனார் (சூ) "எப்பொருளாயினு மல்லதில்லெனின், அப்பொருளல்லாப்பிறிது பொருள்கூறல்" எனவும். "அப்பொருள்கூறிற்சுட்டிக்கூறல்" எனவும் கூறினார்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** தம்பால் இல்லது–தம்மிடத்து இல்லாதபொருளை, இல் எனின்– இல்லை யென்று சொல்லப் புகுந்தால், இனன் ஆய் உள்ளது கூறி – (வினாவப்பட்டதற்கு) இனமாய்த் தம்மிடத்து உள்ள பொருளைச் சொல்லி, மாற்றியும் (அச்சொல்லைக் கொண்டு அதனை) இல்லை யென்று சொல்லியும், உள்ளது சுட்டியும்–உள்ளபொருளாயின் இவ்வளவு உண்டென்றும், உரைப்பர்– சொல்லுவர், சொல் சுருங்குதற்கு– (வினாவும் விடையுமாகிய) சொற்கள் சுருங்குதற் பொருட்டு; எ–று.

குன்றக்கூறல் முதலிய குற்றங்களை நீக்கிச் சுருங்கச்சொல்லல் முதலிய அழகோடு கூறல் வழக்கிற்கும் வேண்டுமென்பார், 'சொற்சுருங்குதற்கு' என்றார்.

உ–ம்.:–

(1) 'பயறு உள்ளதோ வணிகரே?' என்றவர்க்கு, அது இல்லை யென்பவர், 'உழுந்து உண்டு,' உழுந்தும் துவரையுமுண்டு' என அதன் இனத்தைச் சொல்லக் கடவர். இந்த இன மொழிகள் பயறில்லை யென்னும் விடைப்பொருளைத் தருதலை யன்றி, மேலே 'உழுந்து உள்ளதோ? துவரை உள்ளதோ?' என்னும் வினாக்களும் அவற்றின் விடைகளும் பெருகாமற் காத்தல் காண்க.

(2) 'பயறு உள்ளதோ வணிகரே? என்றவர்க்கு, அது உண்டு என்பவர் 'இருகலம் உண்டு' 'இரு தூணி உண்டு' என அதன் அளவைச் சொல்லக் கடவர். இந்த அளவைமொழிகள் பயறுண்டென்னும் விடைப்பொருளைத் தருதலே யன்றி, மேலே 'எவ்வளவு உண்டு' என்னும் வினாவும், அதன் விடையும் பெருகாமற் காத்தல் காண்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– தம்பால் இல்லது – தம்மிடத்து இல்லாத பொருளை, இல் எனின் – இல்லையெனச் சொல்லப் புகின், இனன் ஆய் உள்ளது கூறி – வினாவப்பட்டதற்கு இனமாய்த் தம்மிடத்துள்ள பொருளைச் சொல்லி, மாற்டிறயும் – (அச்சொல்லைக்கொண்டு அதனை) இல்லையென்றும், உள்ளது சுட்டியும் – (உள்ளபொருளாயின்) இவ்வளவுண்டென்றும், உரைப்பர் – சொல்லுவர், சொற் சுருங்குதற்கு – (வினாவும் விடையுமாகிய சொற்கள்) சுருங்குதற்பொருட்டு. எ–று.

குன்றக்கூறன் முதலிய குற்றங்களை நீக்கிச் சுருங்கச்சொல்லன் முதலிய அழகோடு கூறுதல் வழக்கிற்கும் வேண்டுமென்பார், சொற்சுருங்குற்கே யென்றார்.

உ–ம்.:–

(1) பயறுண்டோ வணிகீரோ? என்றவருக்கு, அஃதில்லையென்பார், உழுந்துண்டு, உழுந்துந் துவரையு முண்டு என அதனினத்தைச் சொல்லக்கடவர். இவ்வின மொழிகள் பயறில்லை யென்னும் விடைப் பொருளைத் தந்துநிற்றலே யன்றி, மேலே உழுந்துண்டோ துவரையுண்டோ என்னும் வினாக்களும் அவற்றிற்கு விடைகளும் பல்காமற் காத்து நிற்றலு முடையனவாதல் காண்க.

(2) பயறுண்டோ வணிகீரே? என்றவருக்கு அஃதுண் டென்பார், இருகல முண்டு, இருதூணி யுண்டு என அதனளவைச் சொல்லக் கடவர். இவ்வளவைமொழிகள் பயறுண்டென்னும் விடைப்பொருளைத் தந்துநிற்றலே யன்றி, மேலே எவ்வளவுண்டு என்னும் வினாவும் அதற்கு விடையும் பல்காமற் காத்துநிற்றலு முடையனவாதல் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**தம்பால்** – தம்மிடத்து, **இல்லது** – இல்லாதபொருளை, **இல்லெனின்** – இல்லையெனின், **இனனாய்** – (வினாவப்பட்ட பொருட்கு) இனமாய், **உள்ளது** – உள்ள பொருளை, **கூறி** – சொல்லி, **மாற்றியும்** – (அச் சொல்லைக் கொண்டு அதனை) இல்லையென்றும், **உள்ளது** – உள்ள பொருளாயின், **சுட்டியும்** – இவ்வளவு உண்டென்றும், **உரைப்பர்** – சொல்லுவர், **சொல் சுருங்குதற்கு** – (வினாவும் விடையுமாகிய) சொற்கள் சுருங்குதற் பொருட்டு.

உதாரணம்

பயறுண்டோ வணிகீர்? என்றவருக்கு, அஃது இல்லை யென்பார், உழுந்துண்டு, உழுந்தும் துவரையும் உண்டு என அதன் இனத்தைச் சொல்லக்கடவர். இங்கு, இன மொழிகள் பயிறில்லை என்னும் விடைப்பொருளைத் தருதலே யன்றி,

மேலே, உழுந்து உண்டோ? துவரையுண்டோ? என்னும் வினாக்களும், அவைகளின் விடைகளும் பெருகாமற் காத்தலுங் காண்க.

பயறுண்டோ வணிகீர்? என்றவருக்கு அஃது உண்டென்பார், இருகலம் உண்டு. இருதூணி யுண்டு என அதன் அளவைச் சொல்லக்கடவர்.

இங்கு, அளவைமொழிகள் பயறு உண்டு என்னும் விடைப்பொருளைத் தருதலே யன்றி, எவ்வளவு உண்டு என்னும் வினாவும் அதற்கு விடையும் பெருகாமற் காத்தலுங் காண்க.

## மோசசு பொன்னையா

ஒருவன் வேண்டும் பொருள் தம்மிடம் இல்லையாயின், வினவப்பட்டதற்கு இனமாய்த் தம்மிடம் உள்ள பொருளைச் சொல்லியும், தம்பால் உள்ளபொருள் அவருக்கு வேண்டுமோ என

மாற்றி வினவியும், வேண்டப்பட்ட பொருள் தன்னிடம் உண்டெனின், அதன் விலை, அளவு முதலியவற்றைச் சுட்டியும் சொற்செட்டு கருதி உரைப்பர் எ—று.

எ—டு.:—

பயறுஉண்டோ என வினவப்பட்ட விடத்து

1. உழுந்து உண்டு;

துவரை வேண்டுமோ? இல்லாதவிடத்து உள்ள பொருளைக் கூறியும், மாற்றி வினவியும், வினவப்பட்ட பொருள் இல்லை என்று சொற்செட்டாக உணர்த்தப்பட்டது.

2. மூடை உருபா அறுபது;

இருபது மூடை உண்டு உள்ளவிடத்து, விலையும் அளவும் சுட்டியுரைத்துச் சொற்செட்டாக உணர்த்தப்பட்டது பரஞ்சோதியாரின்,

புல்லியோர் பண்டங் கொள்வார் வினவினப் பொருடம் பக்கல்

இல்லெனி னினமா யுள்ள பொருளுரைத் தெதிர்ம றுத்தும்

அல்லதப் பொருளுண் டென்னின் விலைசுட்டியறுத்து நேர்ந்தும்

சொல்வினு மிலாபங் கொள்வார் தொன்மர பிருக்கை செல்வாம்,

எனப் பாடியுள்ளது இதற்கு ஏற்ற இலக்கியமாகத் திகழ்கின்றமை காண்க.

தொல்காப்பியர்,

எப்பொரு ளாயினு மல்ல தில்லெனின்

அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்,

எனவும்,

அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்,

எனவும் பொதுவாகக் கூறிவைத்தார்.

**406. ஈதா கொடுவெனு மூன்று முறையே**
**இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.**

ஈ தா கொடு எனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்பு உரை.

ī ṭā kotu eṉum mūṉūu um muūai ē
iḷinṭōṉ oppōṉ mikkōṉ irappu urai

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Usage of three synonymes**

The three (synonyms) i, tä, and kotu are the imploring words respectively of an inferior, equal and superior.

## ஒப்புமைப் பகுதி

ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி யாகிட னுடைய

(தொல்.சொல்.:444)

அவற்றுள்
ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே

(தொல்.சொல்.:445)

தாவென் கிளவி ஒப்போன் கூற்றே

(தொல்.சொல்.:446)

கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே

(தொல்.சொல்.:447)

கொடுவென் கிளவி படர்க்கை யாயினும்
தன்னைப் பிறன்போல் கூறுங் குறிப்பில்
தன்னிடத் தியலும் என்மனார் புலவர்

(தொல்.சொல்.:448)

ஈதாகொடு எனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை

(தொல்.வி.:115)

ஈதா கொடுவிரப் புரையா கும்மே

(மு.வீ.:752)

அவற்றுள்
ஈயென் கிளவி யிரிந்தோ னிரப்புரை

(மு.வீ.: 753)

தாவென் கிளவி சமானன் மேற்றே

(மு.வீ.:754)

கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே

(மு.வீ.:755)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ-ள்.:- ஈ யென்னுஞ் சொல் ஈவானின் இழிந்த இரப்போன் சொல்லுவதாம்; தா வென்னுஞ் சொல் ஈவானொடு ஒக்கும் இரப்போன் சொல்லுவதாம்; கொடு வென்னுஞ் சொல் ஈவானின் மிக்க இரப்போன் சொல்லுவதாம், எ-று.

## சங்கர நமச்சிவாயர்

எ-னின், இதுவும் அது.

இ-ள்.:- ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோன்மாட்டு இரக்கும் சொல்லாம்; தா என்பது ஒப்போன் ஒப்போன்மாட்டு இரக்கும் சொல்லாம்; கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோன்மாட்டு இரக்கும் சொல்லாம், எ-று.

வ-று.:-

தந்தை ஈ, தோழ தா, மைந்த கொடு என வரும். பிறவழி வரும் ஒப்பு உயர்வு தாழ்வினும் இவ்வாறே ஒட்டுக.

வழங்கு, வீசு, நல்கு என்றற்றொடக்கத்து இரப்புரைகள் போலாது ஈவோர்க்கும் ஏற்போற்கும் ஒப்பு உயர்வு தாழ்வுகளை ஈ தா கொடு என்ற துணையானே உணர்த்தி நிற்றலின் இவற்றை இனைத்தென்றறி பொருளாகக் கூறினார். அருள், அளி என்னும் இரப்புரைகள் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்கு இழிவும் உணர்த்தினவாலோ எனின்:- அவை கருணைக்கு உரிய சொற்குறிப்பினான் இரத்தற்பொருளை உணர்த்தி நின்றன வன்றி இரப்புரை யல்ல என்க.

இம் மரபு மயங்கி வருவன உளவேல், 'புதியன புகுதலும் வழுவல' (462) என்றதன்பாற்படுத்துக.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், ஏற்பதற்கு வருவதோர் கேள்விச்சொல் இயல்பு கூறுகின்றது.

இ–ள்.: ஈதாகொடுவெனு மூன்றும் – ஈ, தா, கொடு என்னும் மூன்று சொல்லும், முறையே–கூறிய முறையே அச்சொற்களில், இழிந்தோன் – ஈயென்னும் சொல் ஈவானின் இழிந்த இரப்பான் சொல்லுவதாம்; ஒப்போன் – தாவென்னும் சொல் ஈவானோடு ஒக்கும் இரப்பான் சொல்லுவதாம்; மிக்கோ னிரப்புரை–கொடுவென்னும் சொல் ஈவானின் மிக்கோன் இரப்புரையாம், எ–று.

''இரப்புரை'' கடைநிலைத் தீபம் என்ப.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

இ–ள்.: ஈதாகொடு வெனும்–ஈ தா கொடு என்கிற, மூன்றும்–மூன்று சொற்களும், முறையே–முறையாக, இழிந்தோன்–இழிந்தவனும், ஒப்போன்–ஒப்பவனும், மிக்கோன்–உயர்ந்தவனும், இரப்புரை–இரத்தற்கு வருகிற சொற்களாகும், எ–று.

வ–று.:–

தந்தாயீ – இழிந்தோனிரப்பு. தோழா தா – ஒப்போனிரப்பு.
மைந்தா கொடு – உயர்ந்தோனிரப்பு என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

இரப்புச்சொல் இவையென்றும் இன்னார்க்கு இன்னசொல்லுரிதென்றும் கூறுஞ் சூத்திரம் யாது?

ஈதா கொடுவெனு மூன்று முறையே

இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.

(ஈ தா கொடு எனும் மூன்றும் முறையே இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை.)

இ–ள்.:– ஈ தா கொடு என்னு மூன்று சொற்களும் முறையே இழிந்தவனும் ஒப்பலனும் உயர்ந்தவனும் இரத்தற்கு வருஞ் சொற்களாகும். எ–று.

எனவே, ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும் இரப்புரையும், தா என்பது ஒப்போன் ஒப்போனிடத்து இரக்கும் இரப்புரையும், கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடத்து இரக்கும் இரப்புரையுமாமெனக் கொள்க.

வ–று.:–

தந்தாயீ; இழிந்தோனிரப்பு. தோழாதா; ஒப்போனிரப்பு. மைந்தாகொடு; உயர்ந்தோனிரப்பு எனவரும். பிறவழிவரும் ஒப்புயர்வுதாழ்வுகளிலும் இப்படியேயொட்டுக.

கொடுவென்னுஞ்சொல் முதனிலைவகையாற் படர்க்கைச்சொல்லன்றோ?

படர்க்கையாயினும் தன்னைப் பிறனொருவன்போலக் கூறங் கருத்துவகையால் தன்னிடத்துச் செல்லும். அதுபற்றியே இடவழுவமைத்தவாறாம்.

இதுவுமது.

**இ—ள்.:— ஈதா கொடுவெனு மூன்ற முறையே** — ஈதாகொடு என்கிற இம் மூன்று சொற்களும் நிரனிறையாகவே, இழிந்தோன் ஒப்பேன் மிக்கோனிரப்புரை தாழ்ந்தவனும்—சமானமானவனும்—உயர்ந்தோனுமாகிய இம்மூவரும் இரக்கும் இரப்பு வார்த்தைகளாம், எ—று.

எனவே, ஈ—என்பது தாழ்ந்தவன் உயர்ந்தவன் இடத்தி ல்இரக்கு மிரப்புரையும், தாவென்பது சமானமானவன் சமானமான்வனிடத்தி லிரக்கும் இரப்புரையும், கொடுவென்பது—உயர்ந்தோன் தாழ்ந்தவனிடத்தி ல்இரக்கும் இரப்புரையும், ஆமெனக் கொள்க. இரப்புரை—யாசக வார்த்தை.

வ—று.:—

தந்தையீ, எம்பெருமா எனக்கொருபிடி சோறுதா எனவும், தோழாதா, எனக்குக் சோறுதா எனவும், மைத்தா கொடு இவனுக்கு ஊண் கொடு எனவும் வரும். வேறே மார்க்கங்களிலே வருகிற ஒப்பு உயர்வு தாழ்வுகளிலு மிவ்வாறே யொட்டுக.

இவை வழங்கு நல்கு வீசு என்னுந் தொடக்கத்து இரப்புரைகள் போலாகாமல், ஈதா கொடு என்ற மாத்திரமே ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் உயர்வு தாழ்வுகளை யுணர்த்தி நிற்பதினாலே யிவற்றை யித்தன்மைத் தென்றறி பொருளாகக் கூறினார். இனி, 'அருள்—அளி' என்னும் இரப்புரைகளும் ஈவோர்க்கு உயர்வும் ஏற்போர்க்குத் தாழ்வும் உணர்த்தின வன்றோ எனின், அவை கருணைக்குரிய சொற்கள். குறிப்பினாலே இரத்தற்பொருளை யுணர்த்தி நின்றன அன்றி, இரப்புரை யல்ல வென்க. இனி யிம்மூன்று சொற்களு மிங்கே சொல்லியமுறை பிறழ்ந்து வருமாயின் அவற்றைப் 'புதியன புகுதலும் வழுவல'வென்றதனால் அமைத்துக் கொள்க. தரல்வர ல்என்னுஞ் சூத்திரத்தால் கொடு என்பது தன்மையிடத்து வந்த வழுவமைதி யென்றாயினுந் தன்னைப் பிறன்போற் கூறும் வகையால் வந்த வழுவமைதி யென்றாயினுங் கொள்க.

ஈதா கொடுவெனக் கிளக்கு மூன்று

மிரவின் கிளகி யாகிட னுடைய

எனவும், அவற்றுள்,

ஈயென் கிளவி யிழிந்தோன் கூற்றே

எனவும்,

தாவென் கிளவி யொப்போன் கூற்றே

எனவும்,

கொடுவென் கிளவி யுயர்ந்தோன் கூற்றே

எனவும்,

கொடுவென் கிளவி படர்க்கை யாயினுந்

தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்

றன்னிடத் தியலு மென்மனார் புலவர்

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. மூன்று மிரப்புரை யென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** ஈ தா கொடு எனும் மூன்றும் – இம்மூன்று சொற்களும், முறையே –, இழிந்தோன் – இழிந்தவனும், ஒப்போன் – ஒப்பவனும், மிக்கோன் – உயர்ந்தவனும், இரப்பு உரை – இரத்தற்குவரும் சொற்களாம்.

குறிப்பு :– எனவே, 'ஈ' என்பது இழிந்தவன் தன்னின் உயர்ந்தவனிடத்து இரக்கும்போதும், 'தா' என்பது ஒப்போன் தனக்கு ஒப்பவனிடத்து இரக்கும்போதும், 'கொடு' என்பது உயர்ந்தவன் தன்னின் உயர்ந்தவனிடத்து இரக்கும்போதும் வருமெனக்கொள்க.

| | | | |
|---|---|---|---|
| உ–ம் :– | தந்தையே! ஈ | – | இழிந்தோன் இரப்பு |
| | தோழா! தா | – | ஒப்போன் இரப்பு. |
| | மைந்தா! கொடு | – | மிக்கோன் இரப்பு |

முன் "கொடைசெலல்சாரும் படர்க்கை" என்றுகூறி யிருத்தலால், இங்குக் 'கொடு' என்பது தன்மைக்குவருதல் வழுவமைதி எனக்கொள்க.

இம்மூன்று சொற்களும், 'வழங்கு' 'நல்கு' 'வீசு' என்பன முதலிய இரப்புரைகள் போலாது, 'ஈ தா கொடு' என்ற மாத்திரையான் ஈவோர்க்கும் ஏற்போர்க்கும் உயர்வு தாழ்வுகளை

யுணர்த்தி நின்றமையின், இவற்றை இத்தன்மைத்தென்று அறிபொருளாகக்கூறினார் என்க. இனி, 'அருள்' 'அளி' என்னுமிரப்புரைகளும் ஈவோற்குயர்வும், ஏற்போற்கிழிவும் உணர்த்தினவன்றோ? எனின், அவை கருணைக்குரிய சொற்களாய்க் குறிப்பினால் இரத்தற் பொருளை யுணர்த்தினவன்றி இரப்புரையாகா வென்க. 'ஈ' முதலிய சொற்கள் முன்னிலை ஏவலில்மாத்திரமே இவ்வேறு பாடுணர்த்து மென்பர் ஆசிரியர் சேனாவரையர். இனி, இம்மூன்று சொற்களும் இம்முறை தவறிவருமாயின் அவற்றை "புதியனபுகுதலும் வழுவல" என்ற புறனடையாற் கொள்க.

## ஆறுமுக நாவலர்

இ—ள்.:— ஈ தா கொடு எனும் மூன்றும்—ஈ தா கொடு என்னு மூன்று சொற்களும், முறையே இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை—முறையே இழிந்தவனும் ஒப்பவனும் உயர்ந்தவனும் இரத்தற்கு வருஞ் சொற்களாகும், எ—று.

எனவே, ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும் இரப்புரையும், தா என்பது ஒப்போன் ஒப்போனிடத்து இரக்கும் இரப்புரையும், கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடத்து இரக்கும் இரப்புரையுமாமெனக் கொள்க.

வ—று.:—

தந்தாயீ — இழிந்தோ னிரப்பு. தோழா தா — ஒப்போனிரப்பு. மைந்தா கொடு — உயர்ந்தோனிரப்பு என வரும். பிறவழி வரும் ஒப்புயர்வு தாழ்வுகளிலும் இப்படியே யொட்டுக.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.:— ஈதாகொடு எனும் மூன்றும் — ஈ தா கொடு என்னுமூன்று சொற்களும், — முறையே இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்பு உரை — நிரனிறையே இழிந்தவனும் ஒத்தோனும் உயர்ந்தவனும் இரத்தற்கண்வருஞ் சொற்களாம். எ—று.

எனவே, ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும் இரப்புரையும், தா என்பது ஒத்தோன் ஒத்தோனிடத்து இரக்கும் இரப்புரையும், கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடத்து இரக்கும் இரப்புரையுமாமெனக் கொள்க.

வ—று.:—

தந்தாயீ இழிந்தோனிரப்பு. தோழாதா ஒத்தோனிரப்பு. மைந்தாகொடு உயர்ந்தோனிரப்பு. பிறவழிவரும் உயர்வுதாழ்வொப்புக்களிலு மிவ்வாறொட்டுக.

சூத்திரம். "ஈ தா கொடுவெனக் கிளக்குமூன்று, இரவின் கிளவியாகிடனுடைய" எனவும். அவற்றுள், "ஈயென்கிளவி யிழிந்தோன் கூற்றே" எனவும். "தாவென்கிளவியொப்போன் கூற்றே" எனவும். "கொடுவென்கிளவி யுயர்ந்தோன்கூற்றே" எனவும். "கொடுவென்கிளவி படர்க்கையாயினுந், தன்னைப் பிறன்போற் கூறுங்குறிப்பிற், றன்னிடத்தியலு மென்மனார் புலவர்" எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: ஈ தாகொடு என்னும் மூன்றும்–இம்மூன்று சொற்களும் முறையே, இழிந்தோன்–இழிந்தவனும், ஒப்போன்–ஒப்பவனும், மிக்கோன் – உயர்ந்தவனும், இரப்புஉரை – இரத்தற்கு வரும் சொற்களாம்; எ–று.

எனவே, ஈ என்பது–இழிந்தவன் தன்னின் உயர்ந்தவனிடத்து ஒன்றை இரக்கும்போதும், தா என்பது ஒப்போன் தனக்கு ஒப்பவனிடத்து ஒன்றை வேண்டும் போதும், கொடு என்பது உயர்ந்தவன் தன்னின் இழிந்தவனிடத்து ஒன்றைப் பெற விரும்பும்போதும் வருமெனக் கொள்க. இது முறைநிரனிறைப் பொருள்கோள்.

உ–ம்.:–

தந்தையே ஈ–இழிந்தோ னிரப்பு; தோழா தா–ஒப்போனிரப்பு, மைந்தா கொடு–உயர்ந்தோ னிரப்பு.

முன் "கொடை செலல் சாரும் படர்க்கை" என்று கூறியிருத்தலால் இங்குக் கொடு என்பது தன்மைக்கு வருதல் வழுவமைதி யெனக் கொள்க.

இச்சொற்கள் ஏவலில் மாத்திரமே இவ்வேறுபாடு உணர்த்து மென்பர், சேனாவரையர்.

இனி, இம்மூன்று சொற்களும் இம்முறை தவறி வருமாயின் அவற்றை "புதியன புகுதலும் வழுவல" எனவரும் புறனடையால் அமைத்துக் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: ஈ தா கொடு என்னும் மூன்றும் – ஈ தா கொடு என்னும் மூன்று சொற்களும், முறையே இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் முறையே இழிந்தவனும் ஒப்பவனும் உயர்ந்தவனும், இரப்புரை – இரத்தற்கு வருஞ் சொற்களாகும். எ–று.

எனவே, ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும்

இரப்புரையும், தா என்பது ஒப்போன் ஒப்போனிடத்து இரக்கும் இரப்புரையும், கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடத்து இரக்கும் இரப்புரையுமா மெனக்கொள்க.

(உ–ம்.)

தந்தாய் ஈ– இழிந்தோ னிரப்பு. தோழா தா – ஒப்போ னிரப்பு. மைந்தா கொடு – உயர்ந்தோ னிரப்பு. பிறவழிவரும் ஒப்புயர்வு தாழ்வுகளிலும் இப்படியே யொட்டுக.

இனி, இம் மூன்று சொற்களும் இங்கே சொல்லிய முறை பிறழ்ந்து வருமாயினும் அவற்றைப் 'புதியன புகுதலும் வழுவல' என்றதனால் அமைத்துக் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–) ஈதா கொடு எனும் – ஈ தா கொடு என்கிற, மூன்றும்–மூன்று சொற்களும், முறையே – முறையாக, இழிந்தோன்–இழிந்தவனும், ஒப்போன் – ஒப்பவனும், மிக்கோன்–உயர்ந்தவனும், இரப்பு உரை–இரைத்தற்கு வருகிற சொற்களாம். (எ–று)

(பொ–ரை.) 'ஈ' என்பது இழிந்தோன் உயர்ந்தோன் மாட்டு இரக்கும் சொல்லாம்; 'தா' என்பது ஒப்போன் ஒப்போன் மாட்டு இரக்கும் சொல்லாம்; 'பொடு' என்பது உயர்ந்தோன் இழிந்தோன் மாட்டு இரக்கும் சொல்லலாம்.

(உ–ம்,) தந்தாய் ஈ–இழிந்தோனிரப்பு.

தோழா தா–ஒப்போனிரப்பு.

மைந்தா கொடு–உயர்ந்தோனிரப்பு.

## கா. நமச்சிவாய முதலியார்

ஈ தா கொடு என்னும் – ஈ தா கொடு என்கின்ற, மூன்றும்– மூன்று சொற்களும், முறையே – முறையாக, இழிந்தோன் – இழிந்தவனும், ஒப்போன் – ஒப்பவனும், மிக்கோன் – உயர்ந்தவனும், இரப்புரை – இரத்தற்கு வரும் சொற்களாகும்.

எனவே, ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும்போதும், தா என்பது ஒப்போன் ஒப்போனிடத்து இரக்கும் போதும், கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடத்து இரக்கும்போதும் வருமெனக் கொள்க.

உதாரணம்

| | | |
|---|---|---|
| தந்தாய் ஈ | - | இழிந்தோன் இரப்பு. |
| தோழா தா | - | ஒப்போன் இரப்பு. |
| மைந்தா கொடு | - | உயர்ந்தோன் இரப்பு. |

## மோசசு பொன்னையா

ஈ, தா, கொடு என்னும் மூன்று சொற்களும் முறையே, இழிந்தோன் உயர்ந்தோனிடத்தும், ஒப்போன் ஒப்போனிடத்தும், மிக்கோன் இழிந்தோனிடத்தும் இரக்கும் சொல்லாம் எ-று.

அம்மூன்று சொற்களுக்கும் குறிப்பிடப்பட்டுள்ள தன்மை, அவ்வச்சொற்களின் ஆட்சியால் அமைந்து கிடக்கும் குறிப்பொழிபுப் பொருளாம் என்க.1

எ-டு.

தந்தாய் ஈ; தோழா தா; மைந்தா கொடு.

ஈந்தருள்க முதலான வழக்குப் புதியதாகப் புகுந்து இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும் முறைமையாக இக்காலத்தில் பெருவழக்காயிற்று.

(56)

## 407. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.

முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே.

munnattin uṇarum kiḻavi um uḻa ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Words suggesting ideas**

There are also words that suggest idea. (only) indirectly.

## ஒப்புமைப் பகுதி

முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன வென்னுஞ் சொன்முறை யான.

(தொல்.சொல்.:459)

**முன்னத்தி லுணருங் கிளவியும் உளவே**
**இன்ன வென்னுஞ் சொன்முறை யான.**

(இ.வி.:354)

**முன்னத்தி னுணருங் கிளவியு முளவே**

(மு.வீ.:766)

## மயிலை நாதர்

**இதுவுமது.**

இ–ள்.: சொற்கிடந்தவாறன்றிச் சொல்லுவான் குறிப்பினானே வேறுபொருள்பட வருஞ்சொற்களும் சிலவுளவாம், எ–று.

வ–று.:–

''செஞ்செவியர் வெள்ளொக்கலர்'' என்றவழி, செவ்வென்று உதிரஞ் சொரியுஞ் செவியர், வெள்ளிய சுற்றத்தாரென்பதன்று; செவியெல்லாம் சாலச் செம்பொனணிந்தார், முட்டில் செல்வத்துக் கிளையினை யுடையா ரென்றவாறு; 'வெள்ளொக்கலர்' என்பது மாசற்ற சுற்றத்தினை யுடையா ரென்றுமாம். ''குழை கொண்டு கோழியெறியும் வாழ்க்கை யவர்'' என்றவழி, கோழியெறிவா ரென்றுணரற் பாலதன்று; ஒன்றானும் முட்டில் செல்வத்தாரென்றவாறு. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின், மரபுவழுவமைப்பு உணர்–ற்று.**

**இ–ள்.:–** வெளிப்படையான் அன்றிக் குறிப்பால் பொருள் உணரப்படும் சொற்களும் சில உளவாம், எ–று.

அவையாவன 'ஒன்றொழி பொதுச்சொல்' முதல் சொல்லுவான் குறிப்பு ஈறாக விதந்தன முதலியனவாம்.

செவியெல்லாம் சாலச் செம்பொன் அணியும் செல்வத்தினர் என்பார் செஞ்செவியர் என்றும், குற்றமற்ற மரபினர் என்பார் வெள்ளொக்கலர் என்றும், பெருவாழ்க்கையினர் என்பார் குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்றும் கூறும் சொல்லுவான் குறிப்பு ஒன்றுமே உதாரணம் காட்டுவாரும் உளர். அங்ஙனமாயின் ஏனைய குறிப்பின் பொருள் தரும் மொழியல்லவாம் என்க.

கேட்போர் இடர்ப்படாது வெளிப்படையில் கூறுதல் மரபு ஆதலின் இது வழுவமைதியாயிற்று.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், தொடர்மொழிச் சொல் கிடந்த முறையே யன்றி வேறு பொருளும்படும் என்கின்றது.

இ–ள்.:– முன்–தொடர்மொழியின் முன்னம் சொற்பொருள் கிடந்த வாறின்றி, அத்தின்–அத்தொடர் மொழியிடத்துச் சொல்லுவான் குறிப்பான், உணரும் கிளவியும்–வேறு பொருள்பட வரும் சொற்களும், உளவே – சில உளவாம், எ–று.

உ–ம்.:–

செஞ்செவியர், வெள்ளொக்கலர் என்றவழி செவ்வென்று உதிரஞ் சொரியும் செவியர், வெள்ளிய சுற்றத்தார் என்பது பொருளன்று. செவியெல்லாம் சாலச் செம்பொன் அணிந்தவர், முட்டில் செல்வத்துச் சுற்றத்தார் என்பதும் பொருளாம். "குழை கொண்டு கோழியெறியும் வாழ்க்கையவர்" என்றவழி கோழி எறிவாரென்று உணரற்பாலதன்று; ஒன்றானும் முட்டில் செல்வத்தார் என்பதாம்.

## விசாகப் பெருமாளையர்

இது, மரபு வழுவமைதி யுணர்த்துகின்றது.

இ–ள்.: முன்னத்தின்–குறிப்பினால், உணரும் – பொருளறியப்படுகிற, கிளவியும் –சொற்களும், உள–சிலவுளவாம், எ–று.

(அவையாவன, ஒன்றொழிபொதுச் சொன்முதல் சொல்லுவான் குறிப்பீறாக பெயரியவிலே [12]ஆம் சூத்திரத்திலே சொல்லப்பட்டனவாம்)

வ–று.:–

'குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்' என்றால், பெருஞ் செல்வ வாழ்க்கையர் என்பது குறிப்பினாலுணரப்பட்ட பொருளாம். மற்றவைகளுமிப்படியே (கேட்பவர்களுக்குப் பொருள்விளங்கச் சொல்லல் மரபாதலால் இது வழுவமைதியாயிற்று)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

சொல்லானன்றிச் சொல்லுவான் குறிப்பினாலும் பொருளுணரப் படுஞ் சொற்களுமுளவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.

(முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே)

**இ—ள்.:—** சொல்லானன்றிச் சொல்லுவான் குறிப்பினாற் பொருளறியப்படுஞ் சொற்களுஞ் சிலவுளவாம். எ—று. (முன்னம்—குறிப்பு.)

**வ—று.:—**

மோதிரங்கொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்ற வழிப், பெருஞ் செல்வவாழ்க்கையர் என்பது குறிப்பினாலுணரப்பட்ட பொருளாம். பிறவுமன்ன.

கேட்பவர்கள் வருத்தப்படாமல் அவர்களுக்குப் பொருள்விளங்கச் சொல்லல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மரபுவழுவமைதி யுணர்த்திற்று.

**இ—ள்.:—** (வெளிப்படையாலன்றிக்) குறிப்பாற் பொருளுணர வருஞ் சொற்களுஞ் சில உளவாம், எ—று.

(முன்னம்—குறிப்பு,) அவையாவன; 'ஒன்றொழி பொதுச் சொல்' என்னுஞ் சூத்திரத்தாற் சொல்லப்பட்ட ஒன்றொழி பொதுச்சொல் முதலியவாம். அவற்றுள், இறுதியிலே வைத்த குறிப்பென்பது பலவகை யாதலால் அவற்றுள்ளே சொல்லுவான் குறிப்பொன்றுமே இச்சூத்திரங் குறித்ததென்க.

**வ—று.:—**

செவியெல்லாஞ் செம்பொனணிந்த செலவத்தினர் என்று சொல்ல வந்தவர், 'செஞ்செவியரெனவும்'; குற்றமற்ற சுற்றத்தினரென்று சொல்ல வந்தவர், 'வெள்ளொக்கலர்' என்றும், பெருவாழ்க்கை யினரென்று சொல்லவந்தவர், 'குழைகொண்டு கோழி யெறியுமவர் வாழ்க்கை' என்றும், கூறுவது முதலியவாம். கேட்போர் வருத்தப்படாமல் வெளிப்படையாகக் கூறுவது மரபாதலால் இது வழுவமைதி யாயிற்று. இனி இச்சூத்திரத்திற்கு வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுச்சொற்களுள்ளே செய்தெனெச்சத் தெரிநிலைப் பொருளுணர்த்துவனவும் உளவெனப் பொருள்கூறிக், 'கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன் குழலன் கோட்டன்' என்றாற் போல்வன உதாரணங்காட்டிக், கச்சைக்கட்டிக் கழலையணிந்து கண்ணியைச் சூடிக் குழலை யூதிக் கோட்டைக்குறித்து எனத் தெரிநிலைவினை யெச்ச வாசகமாக விரித்துக்காட்டு வாருமுண்டு. அவ்வேறுபாடுமுணர்க; இதன்முடிபு விளங்கிற்று. இச்சூத்திரம் மேற்கோளென்னும் ஆசிரியவசனம்.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** முன்னத்தின் – (வெளிப்படையா லன்றிக்) குறிப்பால், **உணரும்** – பொருளறியப்படுகின்ற, **கிளவியும்–** சொற்களும், **உள** – சில உண்டு.

உ–ம்.:– அவை – 'ஒன்றொழி பொதுச்சொல்' என்னுஞ் சூத்திரத்தில் 'இன்னபிறவும்' என்றதனாற் கொள்ளப்பட்டவை.

"குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்" என்றவிடத்து, 'பெருஞ்செல்வவாழ்க்கையர்' என்பது குறிப்பினால் உணரப்படுதல் காண்க.

குறிப்பு :–

கேட்பவர்க்கு இடர்ப்பாடின்றிப் பொருள்விளங்க உரைத்தல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று.

இனி இச்சூத்திரத்திற்கு – வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுச் சொற்களுள்ளே செய்தெனெச்சத் தெரிநிலைக்குப் பொருளுணர்த்து வனவும் உளவெனப் பொருள் கூறி, 'கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன் குழலன் கோட்டன்' என்றாற்போல்வன உதாரணங் காட்டி, கச்சைக் கட்டிக் கழலையணிந்து கண்ணியைச்சூடிக் குழலையூதிக் கோட்டைக் குறித்து எனத் தெரிநிலை வினையெச்சமாக விரித்துக் காட்டுவாருமுளர்.

இச்சூத்திரம் இவ்வாசிரியர் தொல்காப்பியத்தினின் றெடுத்துக் கொண்ட மேற்கோள்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–முன்னத்தின் உணருங் கிளவியும் உள** –வெளிப்படை யானன்றிக் குறிப்பினாற் பொருளறியப்படுஞ் சொற்களுஞ் சிலவுளவாம், எ–று. (முன்னம்–குறிப்பு.)

அவையாவன:– ஒன்றொழி பொதுச்சொன் முதற் சொல்லுவான் குறிப்பீறாகப் பெயரியலிலே பன்னிரண்டாஞ் சூத்திரத்துச் சொல்லப்பட்டனவாம்.

வ–று.:–

'குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்' என்றவழிப், பெருஞ் செல்வ வாழ்க்கையர் என்பது குறிப்பினாலுணரப்பட்ட பொருளாம். பிறவுமன்ன.

கேட்பவர்கள் வருத்தப்படாமல் அவர்களுக்குப் பொருள் விளங்கச் சொல்லல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள். முன்னத்தின் உணரும் கிளவியும் உள — வெளிப்படையானன்றிக் குறிப்பினாற் பொருளறியப்படுஞ் சொற்களுஞ் சிலவுளவாம். (முன்னம் — குறிப்பு.)

அவையாவன: ஒன்றொழிபொதுச்சொன்முதற் சொல்லுவான் குறிப்பீறாகப் பெயரியலிலே பன்னிரண்டாஞ் சூத்திரத்துச் சொல்லப்பட்டனவாம்.

வ—று.:—

குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்றவழிப், பெருஞ்செல்வ வாழ்க்கையரென்பது குறிப்பினாலுணரப் பட்ட பொருளாம். செஞ்செவி என்புழி மணியும் பொன்னுமணிந்த செவியென்றும்; வெள்ளொக்கலர் என்புழி வெளியதுடுத்தசுற்றம் என்னும் குறிப்பாற் பொருளுணரப் பட்டவாறு காண்க. (வெள்ளொக்கலர் என்பதற்குக் குற்றமற்ற சுற்றத்தினர் என்று பொருள் கூறினாருமுளர்).

கேட்பவர்கள் வருத்தப்படாமல் அவர்களுக்குப் பொருள் விளங்கச் சொல்லல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று. இச்சூத்திரம் ஆசிரியவசனபாகம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— முன்னத்தின் — (வெளிப்படையாலன்றி) குறிப்பினால், உணரும் — பொருளறியப்படுகிற, கிளவியும்—சொற்களும், உள—(சில) உண்டு.

அவையாவன—"ஒன்றொழி பொதுச்சொல்" என்னுஞ் சூத்திரத்தில் 'இன்னபிறவும்' என்றதனாற் கொள்ளப்பட்டவை.

"குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்" என்றவிடத்து, (கோழியெறிவ ரென்பது தலைமைப் பொருளாகாமல்) பெருஞ்செல்வ வாழ்க்கையர் என்பது குறிப்பினால் உணரப்படுதல் காண்க.

கேட்பவர்களுக்கு வருத்தப்படாமற் பொருள் விளங்கச் சொல்லுதல் மரபாதலால், இது வழுவமைதி யாயிற்று.

இச்சூத்திரம், ஆசிரியவசன மென்று உணர்க; (தொல்காப்பியம்)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– முன்னத்தின் – (வெளிப்படையானன்றிக்) குறிப்பினால், உணரும் கிளவியும் – பொருளறியப்படுஞ் சொற்களும், உள – சிலவுளவாம். எ–று. (முன்னம் – குறிப்பு.)

அவையாவன ஒன்றொழி பொதுச்சொன்முதற் சொல்லுவான் குறிப்பீறாகப் பெயரியலிலே பன்னிரண்டாஞ் சூத்திரத்துச் சொல்லப்பட்டனவாம்.

(உ–ம்.)

'குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்' என்றவழிப், பெருஞ் செல்வ வாழ்க்கையர் என்பது குறிப்பினா லுணரப்பட்ட பொருளாம். பிறவுமன்ன.

கேட்பவர்கள் வருத்தப்படாமல் அவர்களுக்குப் பொருள் விளங்கச் சொல்லல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று.

## கா. நமச்சிவாய முதலியார்

முன்னத்தின் – குறிப்பினால், உணரும் – (பொருள்) அறியப்படுகின்ற, கிளவியும் – சொற்களும், உள – (சில) உளவாம்.

அவையாவன : ஒன்றொழி பொதுச் சொல் முதல், சொல்லுவான் குறிப்பீறாகப் பெயரியலிலே 12–ஆம் சூத்திரத்தில் சொல்லப்பட்டன.

உதாரணம்

'குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர்' என்றால், பெருஞ்செல்வ வாழ்க்கையர் என்பது குறிப்பினால் உணரப்பட்ட பொருளாம். மற்றவைகளும் இப்படியே.

கேட்பவர்களுக்குப் பொருள்விளங்கச் சொல்லல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று.

## மோசகு பொன்னையா

வெளிப்படையால் அன்றிக் குறிப்பால் முன்னர் உரைத்த மூவகை இரப்பையும் உணர்த்தும் சொற்களும் உளவாம் எ–று.

எ–டு.:–

1.தீபாவளி என்று வந்தேன் (வெகுமதி ஈக)

வெள்ளிக்கிழமை என்று வந்தேன் (பிச்சை ஈக)

–இழிந்தோன் உயர்ந்தோனிடம்.

2. நாளை உன் பிறந்த நாள் (விருந்து தருக)

–ஒப்போன் ஒப்போனிடம்

3. உண்டியல் வருகிறது (உண்டியல் கொடுக்க)

காணிக்கைத்தட்டு வருகிறது (காணிக்கை கொடுக்க)

–உயர்ந்தோன் இழிந்தோனிடம்.

இக்கூற்றுக்கள் முன்னத்தாற் பொருளுணர்த்துவதோடு, முன்னை நூற்பாவிற் சுட்டப்பட்ட குறிப்புஒழிபுப் பொருளுக்கு உபகாரப்பட்டும் வருவதால் இவ்விடத்தில் இவ்வாசிரியரால் அமைக்கப்பட்டது.

தொல்காப்பியர்,

முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே

இன்ன என்னும் சொன்முறை யான,

என ஓதிய நூற்பா, பொதுவாகச் சொற்களின் தொனிப்பொருளைக் குறிப்பிட்டு நிற்பதை இடம் நோக்கி அறிந்து கொள்க.

(57)

**408. கேட்குந போலவுங் கிளக்குந போலவும்**
**இயங்குந போலவு மிஇயற்றுந போலவும்**
**அஃறிணை மருங்கினு மறையப் படுமே.**

கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவு ம்இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு ம்அறையப் படுமே.

kētkuna pōla um ki̱lakkuna pōla um
iyaṅkuna pōla um iyaūūuna pōla um
ak̲h̲ūiṇai maruṅki̱n um aūaiyappatum ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

Even impersonals may be represented as listening, speaking, walking and doing.

## ஒப்புமைப் பகுதி

வாரா மரபின வரக்கூறு தலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன என்னுங் குறிப்புரை ஆகும்

(தொல்.சொல்.:422)

வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன என்னுங் குறிப்புரை ஆகும்.

(தொல்.சொல்.: 347)

வாரா மரபின வரஇயம் புதலும்
என்னா மரபின எனஇயம் புதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும்

(மு.வீ.:748)

கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயற்றுந போலவும் இயங்குந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே

(மு.வீ.:757)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ–ள்.: இத்தொழில்களில்லனவும் உள்ளன போல அஃறிணையிடத்தும் சொல்லப்பெறும், எ–று.

வ–று.:

"நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு,
மென்னீரள் யாம் வீழ்பவள்" (குறள்.: 1111)

"கரவலமென் றோரைக் கண்ட திலையோ, இரவெலா
நின்றாயா லிர்ங்கதிர்த் திங்காள்"

("அரவளைமென்றோள்"– தொல். கள.42, ந)

எனவும்,

"பகையு முவகையுங் கண்ணுரைக்கும்"

(பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்; குறள்.709),

"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும், தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்"
(சீவக.2932),

நிலம் வல்லென்றது, நீர் தண்ணென்றது எனவும், இந்நெறி இன்னவூர்க்குச் செல்லும், இம்மலை இன்னுழிவந்து கிடக்கும் எனவும்,

கடல் இத்துணை ஆழ்ந்து கிடக்கும், நிலம் இத்துணை அகன்று கிடக்கும் எனவும்,

"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்" (குறள்.293),

"வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன மடமை கூரத்,
தண்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக்,
கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்,
பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே"

(சீவக.1623),

"கருவிரற் செம்முகவெண்பற்சூன் மந்தி
பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூஉய்ப்-பெருவரை மேற்
[1]றேன்றேவர்க் கோக்கு மலைநாட வாரலோ
வான்றேவர் கொட்கும் வழி" (திணைமா.: 10)

எனவும் முறையே காண்க. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

எ-னின், இதுவும் அது.

இ-ள்:-கேளாதனவற்றைக் கேட்குவன போலவும், சொல்லாதனவற்றைச் சொல்லுவன போலவும், நடவாதனவற்றை நடப்பன போலவும், இத் தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வன போலவும் அஃறிணை யிடத்தும் சொல்லப்படும், எ-று.

---

பாட வேறுபாடு:-

1.றேன்றேவர்க் கீயும

முன்னையபோல விதவாது இறுதிக்கண் இயற்றுந எனப் பொதுப்படக் கூறினமையின், 'இத்தொழில்களல்லன பிற' என்னும் சொல் எஞ்சி நின்றன.

வ–று.:–

"நன்னீரை வாழி அனிச்சமே"

"இரவெலாம் நின்றாயால் ஈர்ங்கதிர்த் திங்காள்"

எனவும்,

"பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும்"

"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும் தேய்தலும் உடைமையைத் திங்கள் செப்புமால்"

எனவும், 'இவ்வழி அவ்வூர்க்குப் போம்', 'இவ்வரசன் ஆணை எங்கும் செல்லும்' எனவும்,

"தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்"

"வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையனம் மடமைகூரத் தண்கய நீருள் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக் கண்டனம் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப் பண்டைய மல்லம் வேண்டா படுக்கஎன் றூடிற் றன்றே"

"கருவிரல் செம்முக வெண்பற்சூல் மந்தி
பருவிரலால் பைஞ்சுனைநீர் தூவிப்–பெருவரைமேல்
தேன்தேவர்க் கீயும் மலைநாட வாரலோ
வான்தேவர் கொட்கும் வழி"

எனவும் முறையே காண்க.

'அஃறிணை மருங்கினும்' என்ற உம்மையான் உயர்திணை மருங்கினும் இவ்வாறு சொல்லப்படுதல் புலப்பல் முதலியவற்றுள் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், தொழில் இல்லாத அஃறிணைப் பொருட்கண்ணும் வினா விடை நிகழ்ந்ததுபோல் கூறலாமென்று கூறுகின்றது.

இ–ள்.:– **கேட்குந போலவும்**–ஒருவர் சொல்லிய சொற்களைக் கேட்பன போலவும், **கிளக்குந போலவும்** – தாம் வேண்டிய சொற்களைச் சொல்லுவன

போலவும், இயங்குந போலவும்—தாம் தாமே நடக்கின்றன போலவும், இயற்றுந போலவும்—தாம் தாமே செய்தன போலவும், அஃறிணை மருங்கினும்—இந்நால் வகைத் தொழிலும் இல்லாத அஃறிணையிடத்து, அறையப் பெறுமே—உள்ளதாகச் சொல்லப் பெறும், எ—று.

உ—ம்.:—

"நன்னீரை வாழி யனிச்சம்" (குறள். 1111),

"கரவலமென்றோரைக் கண்ட திலையோ, இரவெலா
நின்றாயா லீர்ங்கதிர்த் திங்களாய்"

("அரவளை மென்றோள்" என்று தொடங்கும் பாடல்)

எனவும்,

"மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
உடைமையைத் திங்கள் செப்புமால்" (சீவக. 2932)

எனவும்,

"இவ்வழி அவ்வூர்க்குப் போம், இம்மலை இவ்வழி வந்து கிடக்கும், நிலம் இத்துணை அகன்று கிடக்கும்" எனவும்,

"தன்னெஞ்சே தன்னைச் சுடும்" (குறள்.293),

"மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னென்னார்க்
கடிமை புகுத்தி விடும்" (குறள். 608) எனவும் வரும்.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது,

இ—ள்.: கேட்குந போலவும்—கேளாதவைகளைக் கேட்பவைகள் போலவும், கிளக்குந போலவும்—சொல்லாதவைகளைச் சொல்பவைகள் போலவும், இயங்குந போலவும்—நடவாதவைகளை நடப்பவைகள் போலவும், இயற்றுந போலவும்—செய்யாதவைகளைச் செய்பவைகள் போலவும். அஃறிணை மருங்கினும்—அஃறிணை யிடத்தும், அறையப்படும்—சொல்லப்படும், எ—று.

வ—று.:—

'நன்னீரைவாழியனிச்சமே' எனவும், 'பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்' எனவும், 'இவ்வழி யவ்வூர்க்குப் போகும்' எனவும், 'தன்னெஞ்சே தன்னைச்சுடும்' எனவும் வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

உயர்திணைக்குரிய கேட்டல் பேசல் முதலிய செய்தியை அஃறிணை மேலுமேற்றிக் கூறதல் வழுவாயினும் அமைக்கவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

கேட்குந போலவுங் கிளக்குந போலவும்
இயங்குந போலவு மியற்றுந போலவும்
அஃறிணை மருங்கினு மறையப் படுமே.

(கேட்குந போலவும் கிளக்குந போலவும் இயங்குந போலவும் இயற்றுந போலவும் அஃறிணை மருங்கினும் அறையப்படுமே.)

இ–ள்.:– கேளாதனவற்றை கேட்பனபோலவும் பேசாதனவற்றைப் பேசுவனபோலவும் நடவாதனவற்றை நடப்பனபோலவும் இத்தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வன போலவும் அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும். எ–று.

இவை. குறிப்புமொழிகளாம்.

வ–று.:–

(1) "நன்னீரை வாரியனிச்சமே" என்புழிக், கேளாதது கேட்பது போலச் சொல்லப்பட்டது.

(2) "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்" என்புழிப், பேசாதது பேசுவதுபோலச் சொல்லப்பட்டது.

(3) "இவ்வழி யவ்வூர்க்குப்போகும்" என்புழி, நடவாதது நடப்பதுபோலச் சொல்லப்பட்டது.

(4) "தன்னெஞ்சே தன்னைச்சுடும்" என்புழி, செய்யாதது செய்ததுபோலச் சொல்லப்பட்டது.

## முகவை இராமானுச கவிராயர்

**இதுவுமது.**

இ–ள்.:– கேளாதனவற்றைக் கேட்பன போலவும், பேசாதனவற்றைப் பேசுவன போலவும், நடவாதனவற்றை நடப்பன போலவும் (இவையன்றி வேறு) செய்யாதனவற்றைச் செய்வன போலவும், அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும், எ–று.

முன்னையவை போல வகைப்படச் சொல்லாது இறுதியிலே தொகுத்துப் பொதுப்பட 'இயற்றுந' எனச் சொன்னதினாலே, இவை யன்றி வேறு என்பன குறைந்துநின்றன.

வ–று.:–

'நன்னீரை வாழி யனிச்சமே' எனவும், 'இரவெல்லா நின்றாயா லிர்ங்கதிர்த் திங்காள்' எனவும் இவை கேட்பன போலவுரைக்கப் பட்டன, 'பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்' எனவும், 'மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந் தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்' எனவும், இவை பேசுவன போலவுரைக்கப்பட்டன, இவ்வழி யவ்வூர்க்குப் போம். இவ்வரசனாணை யெங்குஞ்செல்லும் எனவும், இவை நடப்பனபோலச் சொல்லப்பட்டன. தன்னெஞ்சே தன்னைச் சுடும் எனவும்,

**வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன மடமைகூர்ந்து**
**தண்கய நீருட் கண்ட தன் னிழன் பிறிதென் றெண்ணிக்**
**கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்**
**பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றெ**

எனவும்,

**கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி-பருவிரலாற்**
**பைஞ்சுனைநீர் தூவிப்-பெருவரைமேற்-றேன்றேவர்க்**
**கீயு மலை நாடவாரலோ-வான்றேவர் கொட்கும் வழி**

எனவும், இவை செய்வன போற் சொல்லப்பட்டன, பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :-** **கேட்குந போலவும்** – (கேளாதனவற்றைக்) கேட்பவை போலவும், **கிளக்குந போலவும்** – (பேசாதனவற்றைப்) பேசுவனபோலவும், **இயங்குந போலவும்** – (நடவாதனவற்றை) நடப்பனபோலவும், **இயற்றுந போலவும்** – (இத்தொழில்களல்லன வேறு தொழில்களைச் செய்யாதனவற் றைச்) செய்வனபோலவும், **அஃறிணை மருங்கினும்** – அஃறிணையிடத்தும், **அறையப்படும்** – சொல்லப்படும்.

**உதாரணம்**

1. "நன்னீரைவாழி அனிச்சமே" – கேட்பதுபோலச் சொல்லப்பட்டது.
2. "முகனுரைக்கு முண்ணின்றவேட்கை" – பேசுவதுபோல ,,
3. "இவ்வழிஅவ்வூர்க்குப்போகும்" – நடப்பதுபோல ,,
4. "தன்னெஞ்சேதன்னைச்சுடும்" – செய்வதுபோல ,,

குறிப்பு :- கேட்டல் முதலிய தன்மையில்லாத அஃறிணைப் பொருளை, அவற்றையுடையனபோல வைத்துக்கூறல் வழுவாமாயினும் அமைத்துக்கோடலால் வழுவமைதியாயிற்று.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– கேட்குந போலவும்–கேளாதனவற்றைக் கேட்பன போலவும், கிளக்குந போலவும்–பேசாதனவற்றைப் பேசுவன போலவும், இயங்குந போலவும்–நடவாதனவற்றை நடப்பன போலவும், இயற்றுந போலவும்–இத் தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வன போலவும், அஃறிணை மருங்கினும் அறையப்படும்–அஃறிணை யிடத்துஞ் சொல்லப்படும், எ–று.

வ–று.:–

(1) "நன்னீரை வாழி யனிச்சமே" என்புழிக், கேளாதது கேட்பது போலச் சொல்லப்பட்டது.

(2) "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்" என்புழிப், பேசாதது பேசுவது போலச் சொல்லப்பட்டது.

(3) "இவ்வழி யவ்வூர்க்குப் போகும்" என்புழி, நடவாதது நடப்பது போலச் சொல்லப்பட்டது.

(4) "தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என்புழிச், செய்யாதது செய்வது போலச் சொல்லப்பட்டது.

இவ்வழி யவ்வூர்க்குப் போகும் என்புழி நடவாதது நடப்பது போலச் சொல்லப்பட்டது.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். கேட்குந போலவும் – கேளாதனவற்றைக் கேட்பனபோலவும், – கிளக்குநபோலவும் – பேசாதனவற்றைப் பேசுவனபோலவும், – இயக்குந போலவும் – நடவாதனவற்றை நடப்பனபோலவும், – இயற்றுநபோலவும் – இத்தொழில்களல்லன பிறதொழில்களைச் செய்யாதனவற்றைச் செய்வன போலவும், – அஃறிணை மருங்கினும் அறையப்படும் – அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும், எ–று.

வ–று.:–

(1)"நன்னீரை வாழியனிச்சமே" எனவும். "கணியாயி துவோகணி தன்னியல்பே" (கணி – வேங்கைமரம்) எனவும். அனிச்சம், கணி என்னுந் தாவரங்கள் கேளாத பொருளாயிருக்கவும் கேட்பன போலச் சொல்லப்பட்டன. "மலையே மரனே மயிலே குயிலே, கலையே பிணையே களிறே பிடியே, நிலையாவுயிரே நிலை தேறினர்டோய், உலையா வலியா ருழைநீ ருரையீர்" இக்கவியினுள்ளுங் கேளாதனவற்றைக் கேட்குக்போலக் கூறியது காண்க.

(2)"பகைமையுங்கேண்மையுங்கண்ணுரைக்கும்" எனவும். "மையறன்னையுமுரைத்திடும்விழியெனமதித்தாள்" எனவும்.

"கணிகளுஞ் சொற்ற" எனவும். பேசாதன பேசுவனபோலச் சொல்லப்பட்டன. "பொருதமைபுண்ணே சொல்ல வென்றமை போந்ததன்மை, யுரைசெயவூர் தீயிட்ட தோங்கிரும்புகையே யோதக், கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலேகாட்டத், தெரிதரவுணர்ந் தேம்பின்ன ரென்னினிச்செய்துமென்றார்" என்னுங் கவியினுள்ளும் பேசாதன பேசுவனபோல வந்தனகாண்க.

(3) "இவ்வழியவ்வூர்க்குப்போகும்" "ஆண்டப்பகல் நீங்கலுமெய்தியதந்தகாரம்" (அந்தகாரம் – இருள்.) என்புழி இயங்காதன இயக்குவனபோலச் சொல்லப்பட்டன.

(ச) "தன்னெஞ்சேதன்னைச்சுடும்" "அடக்கமமரருளுய்க்கு மடங்காமை, யாரிருளுய்த்துவிடும்" என்பனவற்றுள் செய்யாதன செய்வனபோற் சொல்லப்பட்டன காண்க.

இவை இலக்கணையின் பாற்படும்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– கேட்குந போலவும்– (கேளாதவற்றைக்) கேட்பவை போலவும். கிளக்குந போலவும்– (பேசாத வற்றைப்) பேசுபவை போலவும், இயங்குன போலவும்–(நடவாதவற்றை) நடப்பவை போலவும், இயற்றுந போலவும் – (இவையல்லாத வேறு தொழில்களைச் செய்யாதவற்றைச்) செய்பவை போலவும். அஃறிணை மருங்கினும்–அஃறிணையிடத்தும், அறையப்படும்–(உயர்திணை போலவைத்துச்) சொல்லப்படும்; எ–று. இது–வழுவமைதி.

உ–ம்.:–

(1) "நன்னீரை வாழி அனிச்சமே"–கேட்பது போலச் சொல்லப்பட்டது.

(2) "பகைமையைக் கண் உரைக்கும்"–பேசுவது போலச் சொல்லப்பட்டது.

(3) "இவ்வழி அவ்வூர்குப்போகும்"–நடப்பது போலச் சொல்லப்பட்டது,

(4) "தன் நெஞ்சே தன்னைச்சுடும்"–செய்வது போலச் சொல்லப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: கேட்குந் போலவும் – (கேளாதனவற்றைக்) கேட்பன போலவும்.

கிளக்குந போலவும் – (பேசாதனவற்றைப்) பேசுவன போலவும், இயக்குந போலவும் – (நடவாதனவற்றை) நடப்பன போலவும், இயற்றுந போலவும் – (இவையல்லாத பிற தொழில்களைச் செய்யாதனவற்றைச்) செய்வன போலவும், அஃறிணை மருங்கினும் அறையப்படும் – அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும். எ–று.

உ–ம்.:–

(1) "நன்னீரை வாழி யனிச்சமே" – கேளாத்து கேட்பது போலச் சொல்லப்பட்டது.

(2) "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்' – பேசாதது பேசுவதுபோலச் சொல்லப்பட்டது.

(3) "இவ்வழி யவ்வூர்க்குப் போகும்" – நடவாதது நடப்பது போலச் சொல்லப்பட்டது.

(4) "தன்னெஞ்சே தனனைச் சுடும்" – செய்யாதது செய்வது போலச் சொல்லப்பட்டது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ – ள்.) கேட்குந போலவும் – (கேளாதவைகளைக்) கேட்பவைகள் போலவும், கிளக்குந போலவும் – (சொல்லாதவைகளைக்) சொல்பவைகள் போலவும், இயங்குந போலவும்–(நடவாதவைகளை) நடப்பவைகள் போலவும், இயற்றுந போலவும்–(செய்யாகவைகளைச்) செய்பவைகள் போலவும், அஃறிணை மருங்கினும் – அஃறிணை இடத்தும், அறையப்படும் – சொல்லப்படும். (எ–று)

(பொ–ரை.) கேளாதனவற்றைக் கேட்குவன போலவும், சொல்லாதனவற்றைச் சொல்லுவனபோலவும், நடவாதனவற்றை நடப்பன போலவும், இத் தொழில்கள் அல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வனபோலவும், அஃறிணை இடத்தும் சொல்லப்படும்.

(உ–ம்.)

| | |
|---|---|
| நன்னீரை வாழி யனிச்சமே. | கேட்பது போலக் கூறப்பட்டது. |
| பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும். | பேசுவதுபோலக் கூறப்பட்டது. |
| இவ் வழி அவ்வூருக்குப் போகும் வழி. | நடப்பது போலக் கூறப்பட்டது. |
| தன்னெஞ்சே தன்னைச் சுடும். | செய்வது போலக் கூறப்பட்டது. |

## கா. நமச்சிவாய முதலியார்

கேட்குந போலவும் – (கேளாதவைகள்) கேட்பவை போலவும், கிளக்குந போலவும் – (சொல்லாதவைகள்) சொல்பவை போலவும், இயங்குந போலவும் – நடவாதவைகள்) நடப்பவை போலவும், இயற்றுந போலவும் – (செய்யாதவைகள்) செய்பவை போலவும், அஃறிணை மருங்கினும் – அஃறிணையிடத்தும், அறையப்படும் – சொல்லப்படும்.

உதாரணம்

| | |
|---|---|
| 'நன்னீரைவழி அனிச்சமே' | கேளாதது, கேட்பதுபோலக் கூறப்பட்டது. |
| 'பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும்' | பேசாதது, பேசுவது போலக் கூறப்பட்டது. |
| இவ்வழி அவ்வூருக்குப் போகும் | நடவாதது, நடப்பது போலக் கூறப்பட்டது |
| தன்னெஞ்சே தன்னைச் சுடும் | செய்யாதது, செய்வதுபோலக் கூறப்பட்டது. |

## மோசசு பொன்னையா

கேளாதனவற்றைக் கேட்பவை போலவும், சொல்லாதனவற்றைச் சொல்லுவன போலவும், நடவாதனவற்றை நடப்பன போலவும், இவையல்லாத வேறு தொழில்களைச் செய்யாதவற்றைச் செய்பவை போலவும் அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும் எ–று.

இறந்தது தழீஇய எச்சஉம்மை உயர்திணையிடத்து அவ்வத் தொழில் செய்வாரைச் செய்பவராகச் சொல்லுதலைக் குறித்தது.

எ–டு.:–

1.நன்னீரை வாழி அனிச்சமே2

–கேட்பது போலச் சொல்லப்பட்டது.

2. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்

–சொல்லுவதுபோலச் சொல்லப்பட்டது.

3. இவ்வழி அவ்வூருக்குப் போகும்

–நடப்பதுபோலச் சொல்லப்பட்டது

4. தன்னெஞ்சே தன்னைச் சுடும்

வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன்ன மடமை கூரத்

தண்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக்

கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்
பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே.

–இவை செய்வனபோலச் சொல்லப்பட்டன.

தொல்காப்பியர்,

வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின வெனக்கூ றுதலும்
அன்னவை யெல்லா மவற்றவற் றியல்பான்
இன்ன வென்னுங் குறிப்புரை யாகும்,4

எனக் கூறியுள்ளமை காண்க.

(58)

## 409. உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
## [1]பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

உருவக உவமையில் திணை சினை முதல்கள்
உறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

uruvaka uvamai il ṭiṇai siṉai muṭalkaḻ
piūalṭal um piūa um pēṇiṉar koḻal ē

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

In metaphors and similies, there may be interchanges of the (personal and impersonal) classes and of wholes and members; besides other changes (not included in this chapter.

### மயிலை நாதர்

எ–ன், மரபுவழுவமைப்பும் இவ்வோத்திற்குப் புறநடையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– உருவகமும் உவமையு மென்னும் இவ்வலங்காரங்கட்கு ஏற்புழி இருதிணையும் தம்முள் மயங்கலும் சினையுமுதலும் தம்முள் மயங்கலும், இவ்வோத்தினுட் சொல்லாதொழிந்தனவும் போற்றி யறிந்துகொள்க, எ–று.

வ–று.:–

"தருமன் றண்ணளி யாற்றன தீகையால்

பாட வேறுபாடு:–

1.பிறழ்வும்

வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திருமகன்றிரு மாநில மன்னனே"

(சீவக. 160.)

இஃது உயர்திணையும் முதலும் மயங்காது வந்த உருவகம்.

"முகந்தா மரைமுறுவன் முல்லைகண் ணீலம்
இகந்தார் விரல்காந்த ளென்றென்—றுகந்தியைந்த
மாழைமா வண்டிற்கா நீழல் வருந்தாதே
ஏழைதா னேகு மினிது"

(திணைமா. 72.)

இஃது அஃறிணையும் சினையும் மயங்காது வந்த உருவகம்.

"மதிபவள முத்த முகம்வாய் முறுவல்."

இது திணை மயங்காது முதலும் சினையும் மயங்கி வந்த உருவகம்.

"மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை அன்ன
நடையினார்க் காரமுதம் – துன்னும் பரிசிலர்க்கு
வானம் பனிமலர்ப்பூம் பைந்தார் எரிசினவேற்
றானையெங் கோ"

(பு.வெ.:9:1).

"தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மதம்
ஆழ்கடற் சுற்றமா வழன்று சீவக
ஏமுயர் போதக மினத்தொ டேற்றதே"

(சீவக.: 775.)

இவை உயர்திணை அஃறிணையாக மயங்கி வந்த உருவகம்.

"பட்டவர்த் தப்பலிற் பரவையேந் தல்குல்
அட்டொளி யரத்தவாய்க் கணிகை யல்லது
மட்டுடை மணமகண் மலர்ந்த போதினாற்
கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே"

(சீவக.: 99).

"அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை நாஞ்சில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகம்
சிகழிகை நெடுங்கொடி செல்விக்கென்பவே"

(சீவக.: 1444.)

இவை அஃறிணை உயர்திணையாக மயங்கி வந்த உருவகம். பிறவுமன்ன.

"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்
மங்கலங் கூற மலிபெய்திக் – கங்கையாள்
பூம்புன லாகங் கெழீஇயினான் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து"

(பு.வெ. 9:36),

"இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்"

(குறள். 1040),

"வருந்தி யீன்றாண் மறந்தொழிந்தாள்
வளர்த்தாள் சொற்கேட்டில்கடிந்தாள்
முருந்தின் காறுங் கூழையை முனிவார்
நின்னை யென்முனிவார்
பொருந்திற் றன்றா லிதுவென்னாய்
பொன்று மளித்திவ் வுயிரென்னாய்
திருந்து சோலைக் கருங்குயிலே
சிலம்ப விருந்து கூவுதியால்"

(சீவக.: 1661)

என்றற் றொடக்கத்தன உருவக விலக்கணம் விளங்க நின்றிலவேனும் அதனிடத்து மயங்கி நின்றனவெனக் கொள்க.

"மணியணி வரைநிகர் மாட வாயிலோன்"

எனவும்,

"திருமக ளிவளெனச் செல்வி செல்லுமே"
"இந்திர குமரன் போல விறைமக னிருந்து காண"

(சீவக.: 1253)

எனவும், வரும் இவை திணையும் முதலும் மயங்காது வந்த உவமை.

"செம்பவழ மேய்ப்பத் திகழ்ந்திலங்கு சீறடியின்
வம்பழகு நோக்கி வழிபடுவ தேசாலும்"

(சூளா. கல்.: 293),

"மதிநுதன் மாதர் மதலைபின் சென்றாள்",
"கயற்கண் ணாளையுங் காமனன் னானையும்"

(சீவக.: 1346)

எனவருமிவை திணைமயங்காது முதலும் சினையும் மயங்கின உவமை.

"மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்"

(சீவக.: 2789),

"ஆளிய மொய்ம்பர்க் களித்தணி சண்பக
நாள்செய் மாலை நகைமுடிப் பெய்பவே"

(சீவக.: 132)

எனவும்,

"தேர்ந்தநூற், கல்விசேர் மாந்தரி
னிறைஞ்சிக் காய்த்தவே"

(சீவக.: 53)

"ஏலங் கமழ்குழ லேழை யவரன்ன
வாலைக் கரும்பி னகநா டணைந்தான்"

(சீவக.: 1613)

எனவும், வருமிவை திணை மயங்கி வந்த உவமை.இவை பட்டாங்குரைத்தலின், உவப்பினுள் அடங்காவெனக் கொள்க.'பிறவும்' என்றதனால்,

"அடிவண்ண மல்லா லலங்குதார்க் கோதை
முடிவண்ணங் கண்டறியா வேந்து"
"நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே"

(புறநா.: 3)

இவை, வேத்தியல் அரசியலென்னும் தன்மையை யுணர்த்தற் பாலன. அத்தன்மையை யுடைய மக்களை யுணர்த்தி உயர்திணையாய் ஈண்டு அஃறிணையான் முடிதலின், வழுவாயின. இவ்வாறு வருவனவும் பிறவும் அமைத்துக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், இதுவும் அது.

இ—ள்.: உருவகத்தின்கண்ணும் உவமைக்கண்ணும் இரு திணை தம்முள் மயங்குதலும், சினை முதல் தம்முள் மயங்குதலும், இவ்வியலுள் சொல்லாது ஒழிந்தனவும் போற்றிக் கொள்க, எ—று.

வ—று.:

"மன்னர் மடங்கல் மறையவர் சொன்மாலை
அன்ன நடையினார்க் காரமுதம் – துன்னும்
பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தார்
எரிசினவேல் தானையெங் கோ"

என்பன உயர்திணை அஃறிணையோடு மயங்கின.

"தாழிரும் தடக்கையும் மருப்பும் தம்பியர்
தோழர்தன் தாள்களாச் சொரியு மும்மதம்
ஆழ்கடற் சுற்றமா அழன்று சீவக
ஏழுயர் போதகம் இனத்தொ டேற்றதே"

என்பன உயர்திணை அஃறிணையோடும், முதல் சினையோடும் மயங்கின. முகமதி என்பது சினை முதலோடு மயங்கிற்று.

"அகழ்கிடங் கந்துகில் ஆர்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரம் திங்கள் வாண்முகம் சிகழிகை
நெடுங்கொடி செல்விக் கென்பவே"

இஃது அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. இவை உருவகம்.

"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள் மங்கலம்
கூற மலிவெய்திக் – கங்கையாள் பூம்புனல்
ஆகம் தழீஇயி னான் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து"

"இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்"

"வருந்தி ஈன்றாள் மறந்தொழிந்தாள்
வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள்
முருந்தின் காறும் கூழையை
முனிவார் நின்னை என்முனிவார்
பொருந்திற் றன்றால் இது என்னாய்
பொன்றும் அளித்திவ் வுயிரென்னாய்
திருந்து சோலைக் கருங்குயிலே
சிலம்ப இருந்து கூவுதியால்"

என்றற்றொடக்கத்தனவும் அன்ன.

"மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்"

என்பது உயர்திணையோடு அஃறிணை மயங்கிற்று.

"கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"

என்பது அஃறிணையோடு உயர்திணை மயங்கிற்று. கயற்கண் என்பது சினை முதலோடு மயங்கிற்று. தளிர்மேனி என்பது முதல் சினையோடு மயங்கிற்று. பிறவும் அன்ன.

"தருமன் தண்ணளி யால்தன தீகையால் வருணன்
கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை ஐந்துடைத்
திரும கன்திரு மாநில மன்னனே"

"இந்திர குமரன் போல இறைமகன் இருந்து காண"

என்றற் றொடக்கத்தனவாய் மயங்காது வருதல் மரபாமாதலின், இது வழுவமைதியாயிற்று.

இனிப் பிறவும் என்றதனால், உருவக உவமைக்கண் இவன் பாரதி, இவன் பாரதியனையான் எனப் பால்மயங்கக்

கூறுதலும், கயலினது பிறழ்ச்சிபோலும் கண்ணினது பிறழ்ச்சி என்பார், கயற்கண் என்று சொல்லின்முடிவின் அப்பொருள் முடியாது எஞ்சக் கூறுதலும், பிறவற்றுள்ளும் இவ்வாறு எஞ்சக் கூறுதலும், செங்கோல் கொடுங்கோல் வீரக்கழல் சினவேல் என ஒரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பார் அருளினான் என ஒருவினையை மற்றொரு வினையால் கூறுதலும்,

"அடிவண்ண மல்லால் அலங்குதார்க் கோதை
முடிவண்ணம் கண்டறியா வேந்து"

"துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே"

என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும், இவைபோல்வன பிறவும் வழுவமைதியாகக் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், மரபு வழுவமைப்பும் இவ்வியலுக்குப் புறநடையும் கூறுகின்றது.

இ-ள்.: உருவக முவமையில் - உருவக அலங்காரமும் உவமை அலங்காரமும் என்னும் இவ்விரு அலங்காரங்கட்கு ஏற்புழி, **திணை** - இரு திணையும் தம்முள் மயங்கலும், **சினை முதல்கள்** - சினையும் முதலும் தம்முள் மயங்கலும், **பிறழ்தலும்** - மயங்கலும் என்றது பொருள், இச்சொல்லை முன்னிரண்டினோடும் கூட்டுக; **பிறவும்** - இவ்வோத்தினுள் சொல்லாது ஒழிந்தனவும், **பேணினர் கொளலே** - போற்றி அறிந்து கொள்க.

உ-ம்.:

"தருமண்றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலில் வாமனே
யருமை யாலடி கிற்கணை ஐந்துடைத்
திரும கன்றிரு மாநில மன்னனே"

(சீவக. 160)

இது உயர்திணையும் முதலும் மயங்காது வந்த உருவகம்.

"முகந்தா மரைமுறுவல் முல்லைகண் ணீலம்
. . . . விரல் காந்தள்"

(திணைமாலை. 72).

மதிமுகம், பவளவாய், முறுவல் முத்தம் எனத் திணை மயங்காது முதலும் சினையும் மயங்கி வந்த உருவகம்.

"மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை
யன்ன நடையினார்க் காரமுதந் துன்னும் பரிசிலர்க்கு
வானம் பனிமலர்ப்பூம் பைந்தார் எரிசினவேற் றானையெங்
கோ"

(பு.வெ. 189)

என உயர்திணை அஃறிணையாக மயங்கி வந்த உருவகம்.

"அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை ஞாயில் பூண்மாலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகம் சிகழிகை
நெடுங்கொடி செல்விக் கென்ப"

(சீவக. 1444)

என அஃறிணை உயர்திணையாக மயங்கி வந்த உருவகம்.

"இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்."

(குறள். 1040)

"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்
மங்கலங் கூற மகிழ்பெய்திக் கங்கையாள்
பூம்புன லாகந் தழீஇயினான் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து"

(பு.வெ. 224)

என உருவக இலக்கணம் விளங்கி நின்றிலவேனும் அதனிடத்து மயக்கமெனக் கொள்க.

"மணியணி வரைநிகர் மாட வாயிலோன் எனவும்
திருமக ளிவளெனச் செல்வி செல்லுமே எனவும் இந்திர
குமரன் போல விறைமக னிருந்து காண"

(சீவக. 1253)

எனவும் இவை திணையும் முதலும் மயங்காது வந்த உவமை.

"செம்பவள மேய்ப்பத் திழ்ந்திலங்கு சீறடியின்
வம்பழகு நோக்கி வழிபடுவ தேசாலும்"
(சூளா. கல்யாணச். 293.)

"மதிநுதன் மாதர் மதலைபின் சென்றாள்
கயற்கண் ணாளையுங் காமனன் ளாளையும்"
(சீவக. 1346)

என இவை திணை மயங்காது முதலும் சினையும் மயங்கின உவமை.

**மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்**

(சீவக. 2780)

எனவும்,

**"தேர்ந்தநூற்**

**கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"**

(சீவக. 53)

என இவை திணை மயங்கி வந்த உவமை.

இவை பட்டாங்கு உரைத்தலின் உவப்பினுள் அடங்காவெனக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இதுவுமது.**

**இ–ள்.:** உருவகவுவமையில் – உருவகத்திலு முவமையிலும், **திணை** – இருதிணைகளும், **சினை**–சினைகளும், **முதல்கள்** – முதல்களும், **பிறழ்தலும்** – தம்முள்ளே மயங்குதலும், **பிறவும்** – இவ்வியலுட் சொல்லாதொழிந்தவையும், **பேணினர் கொளல்** – பாதுகாத்துக் கொள்க, எ–று.

**வ–று.:–**

'நம்மரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகளஞ்சி யோடின', உயர்திணை யஃறிணையோடு மயங்கிற்று. 'அவ்வரசனுக்குத் தம்பியரிருவரு மிரண்டு தோள்கள்', உயர்திணை முதல் உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. முகமாகிய மதி, உயர்திணைச் சினை யஃறிணை முதலோடு மயங்கிற்று. கல்விமங்கையை நல்லோர் விரும்புவார். அஃறிணை யுயர்திணையோடு மயங்கிற்று; இவை யுருவகம்.

'மயில்போலு மங்கை' அஃறிணை யுயர்திணையோடு மயங்கிற்று. 'கயல்போலுங்கண்', உயர்திணைச்சினை யஃறிணை முதலோடு மயங்கிற்று. 'தளிர்போலுமேனி', உயர்திணை முதல், அஃறிணைச் சினையோடு மயங்கிற்று; இவை யுவமை.

இனிப் பிறவுமென்றதனால், இவன் சரசுவதிக்கொப்பானவன் எனப் பால் மயங்கக் கூறுதலும், செங்கோல், வீரக்கழல் என வொரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பதற்கு அருளினான் எனவொரு வினையை மற்றொரு வினையாற் கூறுதலும், அரசு வேந்து

என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும், பிறவுங்கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

உயர்திணையஃறிணைகளும் சினைமுதல்களும் இன்னவிடத்துப் பிறழினுங் கொள்கவெனக்கூறுஞ் சூத்திரம் யாது?

உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்

பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.

(உருவக உவமையில் திணை சினை முதல்கள் பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.)

இ—ள்.: உருவகத்திலும் உவமையிலும் உயர்திணையஃறிணை தம்முண்மயங்குதலும் சினைமுதல் தம்முண்மயங்குதலும் இவ்வியலுட் சொல்லா தொழிந்தவையும் பாதுகாத்துக் கொள்க. எ—று.

உருவகமாவது யாது?

உவமேயத்தை உவமானமாகக் கூறுவதோரலங்காரம்.

(வரலாறு)

உருவகம்:—

(1) நம்மரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர்கூட்டமாகிய யானைக ளஞ்சியோடின என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. கல்விமங்கையை நல்லோர் விரும்புவார் என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

(2) அவ்வரசனுக்குத் தம்பியரிருவரு மிரண்டுதோள்கள் என உயர் திணை முதல் உயர்திணைச்சினையோடு மயங்கிற்று. முகமாகியமதி என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று.

உவமை:—

(1)மயில்போலுமங்கை என உயர்திணை அஃறிணையோடுமயங்கிற்று. நெற்பயிர்கள் கல்வியுடையார் போலிறைஞ்சிச் சாய்த்தன என அஃறிணை உயர்திணை யோடு மயங்கிற்று.

(2) கயல்போலுங்கண் என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. தளிர்போலுமேனி என உயர்திணை முதல் அஃறிணைச் சினையோடு மயங்கிற்று.

இனிப் பிறவுமென்றதனால், இவன் சரசுவதிக் கொப்பானவன் எனப் பான்மயங்கக் கூறுதலும், செங்கோல், வீரக்கழல் என ஒருபொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பதற்கு அளினான் என ஒரு வினையை மற்றொருவினையாற் கூறுதலும், அரசு, வேந்து என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும் பிறவுங்கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இதுவுமது,**

**இ—ள்.:** உருவக உவமையின் — உருவகத்திடத்தும் உவமையிடத்தும், **திணைபிறழ்தலும்** — உயர்திணை யஃறிணை தம்முள் மயங்குதலும், **சினை முதல்கள் பிறழ்தலும்** — அவயவம் அவயவி தம்முள் மயங்குதலும், **பிறவும்** — இவ்வியலுள்ளே சொல்லாதொழிந்தனவும், **பேணினர் கொளல்** — போற்றிக் கொள்க, **எ—று.**

**வ—று.:—**

"மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை
யன்ன நடையினார்க் காரமுதந்—துன்னும், பரிசிலர்க்கு
வானம் பனிமலர்ப் பூம்பைந்தா
ரெரிசின வேற்றானையெங்கோ"

இதனுள் எங்கோ, மடங்கல், மாலை, அமுதம், வானம் என உயர்திணை யஃறிணையாக மயங்கிற்று, (மயங்கல்—இணங்கல்)

"தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மத
மாழ்கடற் சுற்றமா வழகன்று சீவக
வேழுயர்போதகமினத்தோடேற்றதே"

இதனுள், தம்பியர் தடக்கை மருப்பு, தோழர் தாள்கள், சுற்றம் மும்மதம், சீவகன் யானை என முதல் சினையாகவும், உயர்திணை யஃறிணையாகவும், மயங்கி நின்றன.

"அகழ்கிடங் கந்துகிலர்ந்த பாம்புரி
புகழ்தரு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந்திங்கள் வாண்முகஞ்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே"

இது, நகரென்னும் அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. (அகழ்கிடங்கு — தோண்டிய பள்ளம், பாம்புரி — நீர்சூழ்ந்த அகழி, ஞாயில் — கோட்டை மதில் உறுப்பு, சிகழிகை — மயிர்முடி, ஆதலால்) கிடங்கு ஆடை, அகழி மேகலாபரணம், மதிலுறுப்பு ஆபரணம், முலை கோபுரம், திங்கள் முகம், மயிர்முடி

துகிற்கொடி, நகர் செல்வி எனக் காண்க. முகமதி என்பது, சினை முதலொடு மயங்கிற்று. இவை யனைத்தும் உருவகம். உருவகமாவது, முகம் மதியை யொக்கும் என வருமுவமையின் கண்ணிரு பொருட்படநின்றதை யொழித்து ஒருபொருட்பட முகமே மதியென்பது. 'மல்லன் மலையனைய மாதவரை' என்பது, உயர்திணையோடு அஃறிணை மயங்கிற்று.

**சொல்லருஞ் சூற் பசும் பாம்பின் றோற்றம்போன்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்**
**கல்விசேர் மாந்திரி னிறைஞ்சிக் காய்த்தவே**

என்பது நெல் என்னுமஃறிணை உயர்திணையொடு மயங்கிற்று. கயற்கண், தளிர்மேனி என்னுமுவமைத் தொகைகள் சினைமுதலோடும் முதல்சினையோடு மயங்கி நின்றன. மேனி–முதல். இவை யெல்லா முவமை. இனிப் பிறவு மென்றதினாலே, உருவக வுவமைகளில் இவன்பாரதி, இவன் பாரதியனையான் எனப் பால் மயங்கக் கூறதலும், கயலினது பிறழ்ச்சிபோலுங் கண்ணினது பிறழ்ச்சி எனச் சொல்லின் முடிவின் அப்பொருள்முடியாது, கயற்கண் எனக் குறைபடக் கூறுதலும், செங்கோல், கொடுங்கோல், வீரக்கழல், சினவேல் என ஒரு பொருளின் குணத்தை மற்றொரு பொருள் மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தானென்பதை அருளினான் என மற்றொரு வினையாற் கூறுதலும் வேந்து, அரசு என உயர்திணைப்பொருளை அஃறிணை வாய்பாட்டாற் கூறுதலும் இவை போல்வன பிறவும் வழுவமைதியாகக் கொள்க.

இச்சூத்திரம், 'மற்றொன்று விரித்தலாய்' வேண்டா கூறலாயிற்று. என்னெனின், சொல்லிலக்கணங் கூற வந்தவர் அணியிலக்கணத்தையும் அதன் புறனடைகளையுங் கூறுதலாலென்க. அவை யாவை யெனின்,

"மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும் – பான்மாறு படுதலும் பாகுபா டுடைய"

எனவும்,

**"உருவக முவமை யென விரு திறத்தவு**
**நிரம்ப வுணர்த்தும் வரம்புதமக் கின்மையிற்**
**கூறிய நெறியின் வேறுபட வருபவை**
**தேறினர் கோட றெள்ளியோர் கடனே"**

எனவும் வருவனவாமென்க. பேணினர்கொளல் எனப் பல்லோர் படர்க்கை முற்றெச்சம் வியங்கோள் வினை கொண்டதாதலால், அதற்கேற்கப் புலவரென்னும், பெயர்

வருவித்து அதனை எழுவாயாகவேனும் பயனிலையாகவேனுங் கூட்டி முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– உருவகம் – உருவகவணியிலும், உவமையில் – உவமையணியிலும், திணை – உயர்திணை அஃறிணைகளும், சினைமுதல்கள் – அவயவமும் அவயவியும், பிறழ்தலும் – தம்முள் மாறிவருதலையும், பிறவும் – (இவ்வியலுள்) சொல்லாதொழிந்தவற்றையும், பேணினர் கொளல் – பாதுகாத்துக்கொள்க.

குறிப்பு :–

உருவகமாவது – ஒற்றுமையினாலாவது செய்கையினாலாவது உபமேயத்தில் உபமானத்தைப் பேதமின்றி ஏற்றிச் சொல்லுதல். உவமையாவது – தொழில் பயன்வடிவு நிறம் முதலிய காரணங்களால் இரண்டு பொருளுக்கு ஒப்புமை விளங்கச் சொல்வது, உருவகம் – ரூபகம். உவமை – உபமா.

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| உருவகம்:– | 1. | அரசனாகிய சிங்கத்திற்குப் பகைவராகிய யானைகள் அஞ்சியோடின | உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று |
| | | கல்வி மங்கையை நல்லோர் விரும்புவர் | அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. |
| | 2. | அரசனுக்குத் தம்பியர் இருவரும் இரண்டு தோள்கள் | உயர்திணை முதல் உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. |
| | | முகமாகிய மதி | உயர்திணைச் சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. |
| உவமை | 1. | மயில்போலும் மங்கை | உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. |
| | | நெற்பயிர்கள் கல்வி யுடையோர் போல்வணங்கிக் காய்த்தன | அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. |
| | 2. | கயல்போலுங் கண் | உயர்திணைச் சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. |

| | |
|---|---|
| தளிர்போலும் மேனி | உயர்திணை முதல் அஃறிணைச் சினை யோடு மயங்கிற்று. |

இனி, 'பிறவும்' என்றதனால் – 'இவன் ஸரஸ்வதிக் கொப்பானவன்' எனப் பால் மயங்கக் கூறுதலும், செங்கோல், வீரக்கழல் என ஒருபொருளின் தன்மையை மற்றொரு பொருளின்மேல் வைத்துக் கூறுதலும் (உடையானுடைய செம்மையும் வீரமும் – கோலின் மேலும் கழலின் மேலும் வைத்துக் கூறப்பட்டன). 'ஈந்தான்' என்பதற்கு 'அருளினான்' என ஒரு வினையை மற்றொரு வினையாற் கூறுதலும்; அரசு வேந்து அமைச்சு என உயர்திணையை அஃறிணை வாய்பாட்டாற் கூறுதலும் பிறவுங்கொள்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– உருவக உவமையில் – உருவகத்திலும் உவமையிலும், திணை (பிறழ்தலும்) – உயர்திணை யஃறிணை தம்முண் மயங்குதலும், சினை முதல்கள் பிறழ்தலும் – சினைமுதல் தம்முண் மயங்குதலும், பிறவும் – இவ்வியலுட் சொல்லாதொழிந்தவையும், பேணினர் கொளல் – பாதுகாத்துக்கொள்க, எ–று.

வ–று.:–

உருவகம்: 'நம்மரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகளஞ்சி யோடின' என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. 'கல்விமங்கையை நல்லோர் விரும்புவார்' என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

'அவ்வரசனுக்குத் தம்பியரிருவரு மிரண்டு தோள்கள்' என உயர்திணை முதல், உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. 'முகமாகிய மதி' என உயர்திணைச் சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று.

உவமை: 'மயில்போலு மங்கை' என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. 'நெற்பயிர்கள் கல்வியுடையார் போலிறைஞ்சிக் காய்த்தன' என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

கயல்போலுங் கண் என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. தளிர்போலுமேனி என உயர்திணைமுதல் அஃறிணைச் சினையோடு மயங்கிற்று.

இனிப் பிறவுமென்றதனால், இவன் சரசுவதிக் கொப்பானவன்

எனப் பான்மயங்கக் கூறுதலும், செங்கோல், வீரக்கழல் என ஒரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பதற்கு அருளினான் என ஒருவினையை மற்றொரு வினையாற் கூறுதலும், அரசு, வேந்து என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும் பிறவுங் கொள்க.

## வ. குமாரசாமிப்புலவர்

இ–ள்.:–உருவக உவமையில் – உருவகத்திலும் உவமையிலும், – திணைகள் (பிறழ்தலும்) – உயர்திணை அஃறிணை தம்முண் மயங்குதலும், – சினை முதல்கள் பிறழ்தலும் – சினை முதல் தம்முண் மயங்குதலும், – பிறவும் – இவ்வியலுட் சொல்லாதொழிந்தனவும், – பேணினர் கொளல் – பாதுகாத்துக் கொள்க. எ–று.

(வரலாறு)

உருவகம்:–

(1)நம்மரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகள் அஞ்சியோடின என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. கல்விமங்கையை நல்லோர் விரும்புவர் என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று. இவகரசனாகிய யானை கையுங்கொம்புந் தம்பியராகவும், கால்கள் தோழராகவும் போருக்குப் புறப்பட்டெதிர்த்தது என முதல் சினையாகவும், உயர்திணை அஃறிணையாகவும் மயங்கின.

(2) அவ்வரசனுக்குத் தம்பி யரிருவரு மிருதோள்கள் என உயர்திணை முதல் உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. முகமாகிய மதி என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று.

உவமை:–

(1) மயில் போலுமங்கை என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. "சொல் கல்சேர்மாந்திரினிறைஞ்சிக் சாய்ததவே" (சொல் – நெல்) இக்கவியில் சொல்லென்னும் அஃறிணை "கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்த" என உணர்திணையோடு மயங்கிற்று "சுந்தரன்றிருமுடி மிசைத்தூய நீராட்டும். இந்திரன்றனை யொத்தகாரெழிலி" (எழிலி – மேகம்) இந்திரன் என்னும் உயர்திணையுவமையும் எழிலி என்னும் அஃறிணையும்மேயமும் மயங்கினமை காண்க.

இனிப் பிறவுமென்றதனால், இவன் சரசுவதிக்கொப்பானவன் எனப் பால்மயங்கக் கூறுதலும், நீதிச் செம்மையுடையானது (அரசனது) கோலைச்

செங்கோலெனவும், வீரனது கழலை வீரக்கழல் எனவும் ஒரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துங் கூறுதலும், ஈந்தான் என்பதற்கு அருளினான் என ஒரு பொருள் வினையை மற்றொரு பொருள்வினையாற் கூறுதலும் பிறவுங் கொள்க.

சூத்திரம்.

"மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய" எனவும். "உருவக வுவமையென விருதிறத்தவும், நிரம்பவுணர்த்தும் வரம்பு தமக்கின்மையிற், கூறிய நெறியின் வேறுபட வருபவை, தேறினர் கோடறெள்ளி யோர்கடனே" எனவும். அணியதிகாரர் கூறிய புறனடைகளானுமுணர்க.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– உருவகம் – உருவகவணியிலும், உவமையில் – உவமை யணியிலும், திணை – உயர்திணை அஃறிணைகளும், சினை முதல்கள் – அவயவமும் அவயவியும், பிறழ்தலும் – தம்முள் மாறிவருதலையும், பிறவும் – இவ்வியலுள் சொல்லாதொழிந்தவற்றையும், பேணினர் கொளல் – பாதுகாத்துக்கொள்க.

உருவகமாவது, ஒற்றுமையினாலாவது, செய்கையினாலாவது உபமேயத்தில் உபமானத்தைப் பேதமின்றி ஏற்றிச்சொல்லுதல். உவமையாவது, தொழில் பயன் வடிவு நிறம் முதலிய காரணங்களால் இரண்டு பொருள்களுக்கு ஒப்புமை விளங்கச் சொல்வது. உருவகம் – ரூபகம், உவமை – உபமா.

உ–ம்.:–

'அரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகள் அஞ்சி ஓடின' என, உருவகத்தில் உயர்திணை அஃறிணை யோடு மயங்கிற்று. 'கல்வி மங்கையை நல்லோர் விரும்புவர்' என, அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

'அவனுக்குத் தம்பியர் இருவரும் இரண்டு தோள்கள்' என, உயர்திணை முதல், உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. 'தோளாகிய மலை' என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று.

'மயில்போலும் மங்கை' என, உவமையில் உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. 'நெற்பயிர்கள் கல்வியுடையோர் போல் வணங்கிக் காய்த்தன' என, அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

'கயல்போலும் கண்' என, உயர்திணைச் சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. 'தளிர்போலும் மேனி' என உயர்திணை முதல், அஃறிணைச் சினையோடு மயங்கிற்று.

இனி, 'பிறவும்' என்றதனால், 'இவன் சரசுவதிக்கு ஒப்பானவன்' எனப் பால் மயங்கக் கூறுதலும்: செங்கோல், வீரக் கழல் என ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருளின்மேல் வைத்துக் கூறுதலும் (உடையானுடைய செம்மையும், வீரமும் – கோலின்மேலும், கழலின்மேலும் வைத்துக் கூறப்பட்டன); ஈந்தான் என்பதற்கு, அருளினான் என ஒரு வினையை மற்றொரு வினையாற் கூறுதலும்; அரசு வேந்து அமைச்சு தூது ஒற்று என உயர்திணையை அஃறிணை வாய்பாட்டாற் கூறுதலும் பிறவும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–** உருவக உவமையில் – உருவகவணியிலும் உவமையணியிலும், திணை (பிறழ்தலும்) – உயர்திணையஃறிணை தம்முண் மயங்குதலும், சினை முதல்கள் பிறழ்தலும் – சினைமுதல் தம்முள் மயங்குதலும், பிறவும் – இவ்வியலுட் சொல்லாதொழிந்தவையும், பேணினர் கொளல் – பாதுகாத்துக்கொள்க. எ–று.

உருவகமாவது, உபமேயத்தினிடத்து உபமானத்தின் தன்மையை ஏற்றிக் கூறுவது; 'முகமாகிய தாமரை' என்பது போல.

உவமையாவது, இரண்டு பொருள்களுக்கு ஒப்புமை விளங்கச் சொல்வது; 'தாமரை போன்ற முகம்' என்பது போல.

உதாரணம்:–

உருவகம்:

(1) நம்மரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகளஞ்சியோடின–என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. கல்விமங்கையை நல்லோரார் விரும்புவார் – என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

(2) அவ்வரசனுக்குத் தம்பிய ரிருவரு மிரண்டு தோள்கள் – என உயர்திணைமுதல் உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. முகமாகிய மதி–என உயர்திணைச் சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று.

உவமை:

(1) மயில்போலு மங்கை – என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று, நெற்பயிர்கள் கல்வியுடையார் போலிறைஞ்சிக் காய்த்தன – என அஃறிணை உயர்திணை யோடு மயங்கிற்று.

(2) கயல்போலுங் கண் – என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. தளிர்போலு மேனி – என உயர்திணைமுதல் அஃறிணைச்சினையோடு மயங்கிற்று.

இனிப் 'பிறவும்' என்றதனால், இவன் சரசுவதிக் கொப்பானவன் – எனப் பான்மயங்கக் கூறுதலும்; செங்கோல், வீரக்கழல் – என ஒரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும்; ஈந்தான் என்பதற்கு அருளினான் என ஒரு வினையை மற்றொரு வினையாற் கூறுதலும்; அரசு, வேந்து என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும் பிறவுங் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**உருவகம் உவமையில்** – உருவகத்திலும் உவமையிலும், **திணை** – இருதிணைகளும், **சினை** – சினைகளும், **முதல்கள்** – முதல்களும், **பிறழ்தலும்** – (தம்முள்ளே) மயங்குதலும், **பிறவும்** – (இவ்வியலுட் சொல்லாது) ஒழிந்தவையும், **பேணினர் கொளல்** – பாதுகாத்துக் கொள்க.

**உதாரணம்**

**உருவகம் :**

| | |
|---|---|
| நம் அரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகள் அஞ்சியோடின. | உயர்திணை, அஃறிணையோடு மயங்கிற்று |
| அவ்வரசனுக்குத் தம்பியர் இருவரும் இரண்டு தோள்கள் | உயர்திணைமுதல், உயர்திணைச் சினையோடு மயங்கிற்று |
| முகமாகியமதி | உயர்திணைச்சினை, அஃறிணை முதலோடு மயங்கிற்று |
| கல்விமங்கையை நல்லோர் விரும்புவார். | அஃறிணை, உயர்திணையோடு மயங்கிற்று. |

**உவமை :**

| | |
|---|---|
| மயில்போலும் மங்கை | உயர்திணை, அஃறிணையோடு மயங்கிற்று |
| நெற்பயிர்கள் கல்விடையார் போல் இறைஞ்சிக்காய்த்தன | அஃறிணை, உயர்திணையோடு மயங்கிற்று. |
| கயல்போலும் கண் | உயர்திணைச் சினை, அஃறிணை முதலோடு மயங்கிற்று |

தளிர்போலும் மேனி — உயர்திணை முதல், அஃறிணைச் சினையோடு மயங்கிற்று

இனிப் 'பிறவும்' என்றதனால், இவன் சரசுவதிக் கொப்பானவன் எனப் பால்மயங்கக் கூறுதலும், செங்கோல், வீரக்கழல் என ஒரு பொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பதற்கு அருளினான் என ஒரு வினையை மற்றொரு வினையாற் கூறுதலும், அரசு, வேந்து என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும், பிறவுங் கொள்க.

## மோசசு பொன்னையா

உருவக, உவம அணிகளில் உயர்திணை, அஃறிணைகளும்; சினை, முதல்களும் தம்முள் மாறி வருதலையும், பிறவாறு மாறி வருமேல் அவற்றையும் பேணி ஏற்றுக் கொள்க. எ—று.

எ—டு.:—

1.மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை

அன்ன நடையினர்க் காரமுதம்—துன்னும்

பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தார்

எரிசினவேற் றானையெங் கோ.5

—உயர்திணை அஃறிணையாக மயங்கிவந்த உருவகம்.

அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தரு மேகலை நாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகம்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே.

—அஃறிணை உயர்திணையாக மயங்கிவந்த உருவகம்.

தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் றாள்களாச் சொரியு மும்மதம்
ஆழ்கடற் சுற்றமா வழன்று சீவக
ஏழுயர் போதக மினத்தொ டேற்றதே.

—உயர்திணை அஃறிணையோடும், முதல்சினையோடும் மயங்கி வந்த உருவகம்.

மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துணாப் பாவிகளும்
அல்குல் விலைபகரு மாய்தொடிய ராதியார்
வில்பொருதோண் மன்னா விலங்காய்ப் பிறப்பவே.

–(முதலடியின்கண்) உயர்திணை அஃறிணையோடு

மயங்கிவந்த உவமம்.

**சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்**
**கல்விசேர் மாந்திரி னிறைஞ்சிக் காய்த்தவே.**

–அஃறிணையோடு உயர்திணை மயங்கிவந்த உவமம்.

**செம்பவழ மேய்ப்பத் திகழ்ந்திலங்கு சீறடியின்**
**வம்பழகு நோக்கி வழிபடுவ தேசாலும்.**

–பிறவாறு மாறிவந்த உவமம்.

பிற என்றதனால், இவன் பாரதி (கல்வி மடந்தை) எனவும், இவன் புலி எனவும், இவன் வணங்காமுடி எனவும், இவன் என் வீட்டு ஆள் எனவும், இவள் குயில் எனவும், இவள் பூங்கொடி எனவும் இவ்வாறு திணை, முதல், சினை மயங்கி வருவனவற்றையெல்லாம் அமைக்க. இவை ஆகுபெயராய் அமையினும், திணைமுதலிய மயக்கங்கள் அமைவதற்கு இவ்விதி வேண்டும் என அறிக.

**தண்டியார் தம் அணியியலுள்,**
**மிகுதலுங் குறைதலுந் தாழ்தலும்**
பான்மாறு படுதலும் பாகுபா டுடைய,

எனவும்,

**உருவக முவமை யெனவிரு திறத்தவு**
**நிரம்ப வுணர்த்தும் வரம்புதமக் கின்மையிற்**
**கூறிய நெறியின் வேறுபட வருபவை**
**தேறினர் கோட றெள்ளியோர் கடனே,**

எனவும்,

தொல்காப்பியர்,

**வேறுபட வந்த உவமத் தோற்றம்**
**கூறிய மருங்கின் கொள்வழிக் கொளாஅல்,**

என உவமவியல் புறனடையிலும் கூறிய முடிவை, இவ்வாசிரியர் சொல்லிலக்கணம் அதிகாரப்பட்டவிடத்துக் கூறி வைத்துள்ளமை, 'மற்றொன்று விரித்தலாய் வேண்டா கூறலாயிற்று' என உரைத்தாரும் உளர் என அறிக.3

410. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை [1]விற்பூண்
தாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.

யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை வில் பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறி மாற்று எனப் பொருள்கோள் எட்டே.

yāūūunīr moḷimāūūu niralniūai viūpūṇ
ṭāppisai aḻaimaūipāppu koṇṭukūttu
atimaūimāūūu eṉa poruḻkōḷ ettu ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### ARRANGEMENT OF WORDS IN VERSES

### Eight methods of constructions

The following are the eight methods of arranging words (in verses): The natural, Transposed, parallel, strung-bow, double-faced, involved, promiscuous and variable.

## ஒப்புமைப் பகுதி

நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே
(தொல்.சொல்.:404)

அடிமொழி சுண்ண நிரனிறை விற்பூட்
டடிமறி யாற்று வரவும்– துடியிடையாய்
தாப்பிசை தாவின் மொழிமாற் றளைமறி
பாப்புப் பொருளோடொன் பான்
(நேமி.:92)

பாட வேறுபாடு:–

1.விற்பூட்டு

யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூன்
டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே

(இ.வி.:361)

அளைமறி பாப்பு அடிமறி தாப்பிசை விற்பூண் மொழிமாற்று
ஆற்றொழுக்கு நிரனிறையே கொண்டு கூட்டல் எட்டாம்

(சுவாமி.:69:1)

## மயிலை நாதர்

எ–ன், பொருள்கோட்பகுதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: யாற்றுநீர்ப் பொருள்கோள் முதலாக எட்டாம் பொருள் கொள்ளு முறைமை, எ–று.

இவற்றை,

"நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே"

(தொல். எச்ச. 8)

என நான்காகவும், "பூட்டுவில் விதலை யாப்புக் கொண்டுகூட், டொருசிறை நிலையே பாசி [1]நீக்கமென், றாக்கிய வைந்தும் பொருள்கோ ளாகும்" என ஐந்தாகவும், இவ்வெட்டுடனே அடிமொழிமாற்றென்ப தொன்றுகூட்டி ஒன்பதாகவும் உரைப்பாருமுளர். அவையும் இவற்றுள்ளே அடங்குமெனக் கொள்க. இம்முறைவைத்த காரணமும் காண்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், நால்வகைச் சொற்களானும் செய்யும் செய்யுள் கொள்ளும் பொருள்கோளின் பெயரும் தொகையும் உணர்த்–று.

இ–ள்.:– யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்றுப் பொருள் கோளும், நிரனிறைப் பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமறி மாற்றுப் பொருள்கோளும் எனப் பொருள்கோள் எட்டாம், எ–று.

---

பாட வேறுபாடு:–

1. நீக்குமென் றாக்கிய வைந்துமப்

இவற்றுள் தாப்பிசை என்பதற்கு ஊசல்போல் இடைநின்று இருமருங்கும் செல்லும் சொல் என்பது பொருள். தாம்பு என்பது ஊசல்; அஃது அளைமறி பாம்பு என்பது பாப்பு என நின்றாற் போல வலிந்து நின்றது. ஏனையவும் காரணக் குறியாதல் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், பொருள்கோட் பகுதி கூறுகின்றது.

இ—ள்.:- யாற்றுநீர் – ஆற்றுபுனற் பொருள்கோளும், மொழி மாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறை – நிரனிறைப் பொருள்கோளும், விற்பூண் – விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசை – தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்பு – அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமறி மாற்று – அடிமறி மாற்றுப் பொருள்கோளும், எனப் பொருள்கோ ளெட்டே – எனப் பொருள் கொள்ளுமுறைமை எட்டாம், எ—று.

## விசாகப் பெருமாளையர்

இது, நால்வகைச் சொற்களாலுஞ் செய்யப்படுஞ் செய்யுள்கொள்ளும் பொருள்கோளின் பெயருந் தொகையு முணர்த்துகின்றது.

இ—ள்.:- யாற்றுநீர் – யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்று– மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறை – நிரனிறைப் பொருள்கோளும், விற்பூண் – விற்பூட்டுப்பொருள்கோளும், தாப்பிசை–தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறிபாப்பு–அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமறிமாற்று– அடிமறிமாற்றுப் பொருள்கோளும், என – என்று, பொருள்கோள் – பொருள்கோள், எட்டு – எட்டாம், எ—று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

பொருள்கோளின் பெயரும் முறையும் தொகையுங் கூறுஞ் சூத்திரம் யாது?

யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டறிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.

(யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண் தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு அடி மறி மாற்று என பொருள்கோள் எட்டே.)

இ—ள்.:- யாற்றுநீர்ப்பொருள்கோளும் மொழிமாற்றுப் பொருள் கோளும் நிரனிறைப்பொருள்கோளும் விற்பூட்டுப்பொருள் கோளும் தாப்பிசைப்

பொருள்கோளும் அளைமறிபாப்புப் பொருள்கோளும் கொண்டுகூட்டுப் பொருள்கோளும் அடிமறிமாற்றுப் பொருள்கோளு மெனப் பொருள்கோ ளெட்டாம். எ–று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நால்வகைச் சொற்களாலுஞ் செய்யப்படுஞ் செய்யுள் கொண்ட பொருள்கோளின் பெயருந் தொகையு முணர்த்திற்று.

இ–ள்.:– ஆற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறைப் பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்புப் பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள்கோளும், அடிமறிமாற்றுப் பொருள்கோளும், எனப் பொருள்கோள் எட்டு வகைப்படும், எ–று.

> இவற்றுள், தாப்பிசை என்பது, ஊஞ்சல்போல் இடை நின்ற சொல் இருமருங்குஞ் செல்வது, தாப்பென்பது ஊஞ்சல், அது, அளைமறி பாம்பென்பது பாப்பென நின்றாற்போலத் தாம்பென்பது வலித்தல் விகாரமாய் நின்றது. ஒழிந்தனவுங் காரணக் குறியாதற் கண்டுகொள்க. பொருள்கோளென்பது அந்வயம், சொற்கள் பொருளைக் கொள்ளுங் குணம் எனினும் அமையும்.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :– யாற்றுநீர் – ஆற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரல்நிறை – நிரனிறைப் பொருள்கோளும், **வில்பூண்** – விற்பூட்டுப் பொருள்கோளும், **தாப்பு இசை** –, அளை மறிபாம்பு –, கொண்டுகூட்டு –, அடிமறி மாற்று – அடிமறி மாற்றுப் பொருள்கோளும், என – என்று, **பொருள்கோள்** –, எட்டு –.

குறிப்பு :–

> இதனை வடநூலார் 'அநுவயம்' என்ப. இப்பொருள் கோள்கள் அணியிலக்கணத்தில் வேறுபெயர் பெற்று நடக்கும்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.**: யாற்றுநீர் – யாற்றுநீர்ப் பொருள்கோளும், **மொழிமாற்று** – மொழிமாற்றுப் பொருள்கோளும், **நிரனிறை** – நிரனிறைப் பொருள்கோளும், **விற்பூண்** – விற்பூட்டுப் பொருள்கோளும், **தாப்பிசை** – தாப்பிசைப் பொருள்கோளும், **அளைமறி பாப்பு** – அளைமறி பாப்புப் பொருள்கோளும், **கொண்டுகூட்டு**– கொண்டுகூட்டுப் பொருள்கோளும், **அடிமறிமாற்று என** –

அடிமறிமாற்றுப் பொருள்கோளுமென, பொருள்கோள் எட்டு – பொருள்கோளெட்டாம், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். யாற்றுநீர் – யாற்றுநீர்ப்பொருள்கோளும், – மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளும், – நிரனிறை – நிரனிறைப் பொருள்கோளும், – விற்பூண் – விற்பூட்டுப் பொருள்கோளும், – தாப்பிசை – தாப்பிசைப் பொருள்கோளும், – அளைமறி பாப்பு – அலை மறிபாப்புப் பொருள்கோளும், – கொண்டு கூட்டு – கொண்டு கூட்டுப் பொருள் கோளும், – அடி மறி மாற்று என – அடிமறி மாற்றுப் பொருள் கோளுமென்று, – பொருள்கோள் எட்டு – பொருள்கோள்எட்டாம். எ–று.

என என்பதனை ஏனையவற்றொடுங் கூட்டுக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– யாற்று நீர் – யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரல் நிறை – நிரனிறைப் பொருள்கோளும், வில் பூண் – விற்பூட்டுப் பொருள்கோளும், தாம்பு இசை – தாப்பிசைப் பொருள்கோளும், அளை மறி பாம்பு – அளைமறிபாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடி மறி மாற்று – அடிமறிமாற்றுப் பொருள்கோளும், என – என்று, பொருள்கோள் –, எட்டு – எட்டு வகைப்படும்; எ–று. பொருள்கோள் – சொற்கள் பொருளைக் கொள்ளும் விதம். பொருள்கோளெனினும், அந்வயமெனினும் ஒக்கும்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: யாற்றுநீர் – யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறை – நிரனிறைப் பொருள் கோளும், விற்பூண் – விற்பூட்டுப்பொருள் கோளும், தாப்பிசை – தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறிபாப்பு – அளைமறிபாப்புப் பொருள் கோளும், கொண்டு கூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளும், அடிமறிமாற்று என – அடிமறிமாற்றுப் பொருள்கோளுமென, பொருள்கோள் எட்டு – பொருள்கோளெட்டாம். எ–று.

இவற்றுள், தாப்பென்பது ஊஞ்சல்; தாம் பென்பதன் வலித்தல் விகாரம். அளைமறிபாம் பென்பதும் அவ்வாறே அளைமறி பாப்பென நின்றது.

பொருள் கோளாவது, சொற்கள் பொருளைக் கொள்ளும் முறை. அந்வயம் எனினும் ஒக்கும்

"நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற், றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே" என்பது தொல்காப்பியம். (எச்சவியல் - 8). இறையனாரகப்பொருளில் விற்பூட்டு - விதலையாப்பு - கொண்டுகூட்டு - பாசிநீக்கு - ஒருசிறைநிலை என்பன காணப்படுகின்றன.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ-ள்.) யாற்று நீர் - யாற்று நீர்ப் பொருள்போளும், மொழி மாற்று-மொழி மாற்றுப் பொருள்கோளும், நிரல் நிறை-நிரனிறைப் பொருள்கோளும், விற்பூண் - விற்பூட்டுப் பொருள்கோளும், தாப்பிசை-தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்பு-அளை மறி பாப்புப் பொருள்கோளும், கொண்டு கூட்டு - கொண்டு கூட்டுப் பொருள்கோளும், அடிமறி மாற்று - அடிமறி மாற்றுப் பொருள்கேளும், என - என்று, பொருள் கோள் - பொருள் கோள், எட்டு - எட்டுவகையினாவாம். (எ-று)

(பொ-ரை.)

யாற்று நீர்ப் பொருள்கோளும், மொழிமாற்றுப் பொருள்கோளும், நிரனிறைப் பொருள்கோளும், விற்பூட்டுப் பொருள்கேளும், தரப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்புப் பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள்கோளும், அடிமறி மாற்றுப் பொருள்கோளும் என்று பொருள்கோள் எட்டுவகையினவாம்.

இவைகளுக்கு உதாரணம் அவ்வவற்றின் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

யாற்றுநீர் - யாற்றுநீர்ப் பொருள்கோளும், மொழி மாற்று - மொழி மாற்றுப் பொருள்கோளும், நிரனிறை - நிரனிறைப் பொருள்கோளும், விற்பூண் - விற்பூட்டுப் பொருள்கோளும், தாம்பிசை - தாப்பிசைப் பொருள்கோளும், அளைமறி பாப்பு - அளைமறி பாப்புப் பொருள்கோளும், கொண்டுகூட்டு - கொண்டு கூட்டுப் பொருள்கோளும், அடிமறி மாற்று - அடிமறிமாற்றுப் பொருள்கோளும், என - என்று, பொருள்கோள் - (சொற்களை ஏற்றபடி கூட்டிப்) பொருள்கொள்ளும் வழி, எட்டு - எட்டுவகையினவாம்.

(பொருள்கோள் - அந்வயம்).

## மோசசு பொன்னையா

யாற்றுநீர்ப்பொருள்கோள், மொழிமாற்றுப்பொருள்கோள், நிரனிறைப்பொருள்கோள், விற்பூட்டுப்பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள்,

அளைமறியாப்புப் பொருள்கோள், கொண்டு கூட்டுப்பொருள்கோள், அடிமறிமாற்றுப் பொருள்கோள் எனப் பொருள்கோள் எட்டாம் எ-று.

தாம்பு (ஊஞ்சல்), பாம்பு எனற்பாலன தாப்பு பாப்பு என வலித்து நின்றன.

தொல்காப்பியர்

நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்
றவைநான் கென்ப மொழிபுண ரியல்பே,
எனப் பொருள்கோள் நான்கென்றார். நேமிநாதமுடையார்,
அடிமொழி சுண்ண நிரனிறை விற்பூட்
டடிமறி யாற்று வரவும்-துடியிடையாய்
தாப்பிசை தாவின் மொழிமாற் றளைமறி
பாப்புப் பொருளோரடொன் பான்,2

எனப் பொருள்கோள் ஒன்பது என்றார். யாப்பருங்கலவிருத்தி உரைகாரரும் நேமிநாதத்தைத் தழுவியே உரைத்தார்.

களவியல் உரைகாரர் விற்பூட்டு, விதலையாப்பு, பாசி நீக்கம், கொண்டுகூட்டு, ஒருசிறைநிலை என ஐவகைப் பொருள்கோள் கொண்டார், இவை போக்கி விளக்கியுரைக்கப்படும்.

(60)

**411.** மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

மற்றைய நோக்காது அடிதொறும் வான்பொருள்
அற்றற்று ஒழுகும் அஃது யாற்றுப் புனலே.

maūūaiya nōkkāṭu ati ṭoūu um vāṉ poruḷ
aūūu aūūu oḷukum akẖṭu yaūūuppuṉal ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### The Natural construction

The natural method is that excellent construction which unlike all others flows on like a river, in each line, uninterruptedly, developing the sense from word to word.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுண்
மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொரு
ளற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே

(இ.வி.:362)

................அடிதொறும் பொருண் முற்றிடுதல்

(சுவாமி.:69:3)

## மயிலை நாதர்

எ–ன், யாற்றுநீர்ப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– ஏனை அடிகளை நோக்காது அடிதோறும் பொருள் அற்று வருவது யாற்றுநீர்ப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைவதூஉங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்"

(நான்மணி.: 26)

என வரும்.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், நிறுத்தமுறையானே யாற்றுநீர்ப் பொருள்கோளாமாறு, உணர்–ற்று.

இ–ள்.:– மொழிமாற்று முதலியபோல் பிறழ்ந்து செல வேண்டாது யாற்றுப்புனலொழுக்குப் போல் நெறிப்பட்டு அடிதோறும் வான்பொருள் அற்றற்று ஒழுகும் அப்பொருள்கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம், எ–று.

இடையறாது ஒழுகும் யாற்றுநீரொழுக்கு உவமையாதலின் அடிதொறும் வான்பொருள் அற்றற்று ஒழுகுதலாவது, மொழிமாற்று முதலியபோல் பிறழ்ந்து செல்லும் செலவற்று ஆங்காங்கு அமைந்து ஒழுகுதலாமன்றி, அடிதோறும் பொருள் முடிதல் அன்றாம் என்க. அங்ஙனமாயின் ஆங்காங்கு எனப் பொதுப்படக்கூறாது, 'அடிதொறும்' என்றது என்னை யெனின்:– அவ்வாறே கூறுவார் ஓரிலக்கணை மேல் வைத்துக் கூறினார் என்க.

வ–று.:–

**"சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல் கல்விசேர்**
**மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"**

என வரும். இப்பாட்டினுள் சொல் என்னும் எழுவாயினை முதலெடுத்து, அதன்தொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொள்ள, இடையே முறைநிறீஇக் காய்த்த என்னும் பயனிலையை இறுதிக்கண் தந்து முடித்தமையின் இப்பொருள் ஒழுகுதல் யாற்றுநீரொழுக்குப்போறல் காண்க.

இதற்கு இவ்வாறு அன்றி ஏனையடிகளை நோக்காது அடிதோறும் பொருள் முடிந்து வருவது யாற்றுநீர்ப் பொருள்கோள் எனப் பொருளுரைத்து,

**"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலும் குற்றம்**
**விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலும் குற்றம்**
**சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்**
**கொலைப்பாலும் குற்றமே யாம்"**

என உதாரணம் காட்டுவாரும் உளர். யாற்றுநீரொழுக்குக்கு இடையறுதல் இன்மையானும், அற்றதேல் அதனை ஒழுக்கு என்றல் கூடாமையானும் அஃது உவமையன்றாம். ஒவ்வோரடி ஒழுகுதற்கு உவமையாயிற் றெனின், பாட்டு முழுவதும் இடையறாது ஒழுகிப் பயின்றுவரும் பொருள்கோள் மொழிமாற்று முதலியவற்றுள் அடங்காமையின் குன்றக் கூறலாம். இங்ஙனமாதலின் அது பொருளன்றாய், அவர் காட்டிய உதாரணம் அடிமறிமாற்றின்பாற்படும் என்க. அப்பொருள்கோளின் விகற்பம் அச் சூத்திரத்துள் தோன்றக் கூறுதும்.

இதனை 'வான்பொருள்' என்றார் இது நெறிப்பட்டு வருதலானும், பயின்று வருதலானும், மொழிமாற்று முதலிய வந்த செய்யுட்கண்ணும் விராய் வருதலானும் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், முறையே யாற்றுநீர்ப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

**இ-ள்.: மற்றைய நோக்கா தடிதொறும்** - ஏனைய அடிகளை நோக்காது அடி அடிதோறும், **வான்பொருள் அற்றற் றொழுகும்** - மேன்மையுள்ள பொருள் அற்று வருவது, **அஃது யாற்றுப் புனலே** . . . . . . . பொருள்கோளாம், **எ-று.**

**உ-ம்.:-**

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டுன் மிசைவதூஉங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்வதூஉங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்"

(நான்மணி. 26)

என வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, நிறுத்த முறையானே யாற்றுநீர்ப் பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ-ள்.: மற்றைய நோக்காது - மொழிமாற்று முதலியவை போலப் பிறழ்ந்து செல்ல வேண்டாமல், அடிதொறும் - அடிதோறும், அற்றற்றொழுகு மஃது - யாற்றுநீரொழுக்குப் போல நெறிப்பட்டு அற்றற்றொழுகுவதாகிய, வான்பொருள் - சிறந்த பொருள்கோள், யாற்றுப்புனல் - யாற்றுநீர்ப் பொருள்கோளாம், எ-று.

வ-று.:

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மெல்லார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற் கல்விசேர்
மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"

என வரும் இப்பாட்டினுட் சொல்லென்னு மெழுவாயினை முதலெடுத்து அதன்றொழிலாகிய வினையெச்சங்க ளொன்றனை யொன்று கொள்ள விடையே முறை நிறுத்திக் காய்த்த வென்னும் பயனிலை யிறுதியிலே தந்து முடித்தமையால் இப்பொருளொழுகுதல் யாற்றுநீ ரொழுக்குப்போலுதல் காண்க. (சொல்-நெற்பயிர்.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

யாற்றுநீர்ப்பொருள் கோளாவது யாது?

மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

(மற்றைய நோக்காது அடிதொறும் வான் பொருள் அற்று அற்று ஒழுகும் அஃது யாற்றுப்புனலே.)

இ-ள்.: ஏனையடிகளைநோக்காது அடிதோறுஞ் சிறந்த பொருள் அற்றற்றொழுவதாகிய அப்பொருள்கோள் யாற்றுநீர்ப்பொருள்கோளாம் எ-று.

வ—று.:—

"சொல்லருஞ் சூற்பசும்பாம்பின் றோற்றம்போன்—மெல்லவே கருவிருந் தீன்றுமேலலார்—செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்—கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" எனவரும். இப்பாட்டினுட் சொல்லென்னுமெழுவாயினை முதலெடுத்து, அதன்றொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சியென்னும்வினையெச்சங்கள் ஒன்றனை யொன்றுகொள்ள இடையே முறைநிறுத்திக், காய்த்தவென்னும் பயனிலையை யிறுதியிலேதந்து முடித்தமையால், இப்பொருளொழுகுதல் யாற்றுநீரொழுக்குப் போலுதல் காண்க. (சொல்—நெற்பயிர்.)

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே யாற்று நீர்ப் பொருள்கோளாமா றுணர்த்திற்று.

இ—ள்.:— மற்றைய — மொழிமாற்று முதலியபோல, நோக்காது — (பிறழ்ந்து செல்லுதலை) நாடாது, அடிதொறும் — பாதங்கள் தோறும், வான்பொருள் — சிறந்த பொருளானது, அற்றற்றொழுகுமஃது — அறுபட்டு அறுபட்டு நடக்கும் பொருள்கோள், யாற்றுப்புனலே — யாற்று நீர்ப் பொருள்கோளாம், எ—று.

திரும்பாமலே ஒரே முகமாகவோடுகின்ற யாற்று நீரோட்ட முவமையாதலால், அற்றற்றொழுகுதலாவது மொழிமாற்று முதலியன போலத் திரும்பி நடக்கும் நடையற்று, அங்கங்கே யமைந்து நடத்தலே யன்றிப் பொருள் முடிந்து நடத்தல் அன்றென்க. அங்ஙனமாயின், 'அடிதொறும் என்ற தென்னெனின் அடிகண் முழுமையும் அவ்வாறொழுகுவ தென்னும் எஞ்சாப் பொருட்டென்க.

வ—று.:

"சொல்லருஞ் சூற்பசும்பாம்பின் றோற்றம்போன் மெல்ல வேகருவிருந்தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற் கல்விசேர் மாந்தரினிறைஞ்சிக் காய்த்தவே"

என வரும். இப்பாட்டினுள், சொல் என்னும் எழுவாயினை முதலெடுத்து அதின் தொழிலாகிய வினையெச்சங்கள் ஒன்றை யொன்று கொள்ளும்படி இடையிலே முறையாக வைத்து அவற்றை முடித்த, காய்த்த என்னும் பயனிலையை யிறுதியிலே கூட்டி முடித்தமையால், அப்பொருளொழுகியது ஆற்று நீரொழுக்குக்கு உவமையாயினவாறு காண்க. இதனை,

'வான் பொருள்' என்ற தென்னெனின், நெறிப்பட்டு வருதலாலும், பெரும்பாலாக வழங்கி வருதலாலும், மற்றப் பொருள்கோள்களைப் போல் மயங்கிப் பொருளுணர வேண்டாமையாலும், அம் மொழிமாற்று முதலியவற்றுள்ளும் இது கலந்து வருதலாலுமென்க.

இனியிதற்கு இவ்வாறன்றி மற்ற அடிகளை நோக்காமல் அடிதொறும் பொருள்முடிந்து வருவது எனப் பொருளுரைத்து,

**"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம் – விலைப்பா**
**லிற்கொண்டுன் மிசைதலுங் குற்றஞ் சொலற்பால வல்லாத**
**சொல்லுதலுங் குற்றங்**
**கொலைப்பாலுங் குற்றமே யாம்"**

எனவுதாரணங் காட்டுவாருமுண்டு. ஆற்றொழுக்கு இடையறுதல்இன் மையாலும், இடையறின் அதனை யொழுக்கென்றல் கூடாததினாலும் அது உவமையன்றாக வேண்டும். இனி, ஒவ்வோரடி யொழுகுதற்கு உவமையாயிற்றெனின் பாட்டு முழுவதும் இடையறா தொழுகி வழங்கிவரும் பொருள்கோள் மொழிமாற்று முதலியவற்றுள் அடங்காமையால் குன்றக்கூறல் என்னுங் குற்றமாமென்க. ஆயின், அவர்காட்டிய உதாரணம் யாதினுளடங்கு மெனின், அடிமறிமாற்றின்பாற்மடு மென்க. அதன்விகற்பம் அச் சூத்திரத்தில் விளங்கக்காட்டுவோம் ஆங்குணர்க. இதன் முடிவு விளங்கிற்று.

## கா. சோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **மற்றையநோக்காது** – மொழிமாற்று முதலியவைபோல மாறிச் செல்லவேண்டாமல், **அடிதொறும்** – (செய்யுளில்) அடிகளெல்லாம், **வான்பொருள்** – சிறந்தபொருள், **அற்று அற்று ஒழுகும் அஃது** – அமைந்து அமைந்து நடப்பதாகிய அப்பொருள்கோள், **யாற்றுப்புனல்** – யாற்று நீர்ப்பொருள்கோளாம்.

குறிப்பு :– யாற்றுநீர்ப் பொருள்கோள் – திரும்பாமலே ஒரேமுகமாக ஒடுகின்ற ஆற்றுநீரின் ஓட்டம்போலச் சொற்கள்மாறாமல் நேராகவே பொருள் கொள்ளப்படுவது.

உ–ம் :–

"சொல்லருஞ் சூர்ப்பகும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்த நூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"

இதில் முதலில் எடுக்கப்பட்ட 'சொல்' என்பதன் வினைகளாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி என்னும் சொற்கள் ஒன்றையொன்று தழுவி இடையில் முறையாக நின்று, இறுதியில் 'காய்த்த' என்னும் பயனிலைப் பெற்று நேராய்ப் பொருள்கொண்டது காண்க. (சொல் – நெற்பயிர்).

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **மற்றைய நோக்காது** – மொழிமாற்று முதலியவை போலப் பிறழ்ந்து செல்ல வேண்டாது, **அடிதொறும் வான்பொருள் அற்று அற்று ஒழுகும் அஃது** – யாற்று நீரொழுக்குப் போல நெறிப்பட்டு அடிதோறுஞ் சிறந்த பொருள் அற்றற் றொழுகுவதாகிய அப் பொருள்கோள், **யாற்றுப்புனல்** – யாற்றுநீர்ப் பொருள் கோளாம், எ–று.

வ–று.:–

**"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற் கல்விசேர்**
**மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"**

என வரும். இப்பாட்டினுட் சொல்லென்னு மெழுவாயினை முதலெடுத்து, அதன் றொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி யென்னும் வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொள்ள இடையே முறை நிறுத்திக், காய்த்தவென்னும் பயனிலையை யிறுதியிலே தந்து முடித்தமையால், இப்பொருளொழுகுதல் யாற்றுநீரொழுக்குப் போலுதல் காண்க. (சொல்–நெற்பயிர்.)

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– மற்றைய நோக்காது – மொழிமாற்று முதலியவை போலப் பிறழ்ந்து செல்லவேண்டாது, – **அடிதொறும் வான்பொருள் அற்று அற்று ஒழுகும் அஃது** – யாற்று நீரொழுக்குப் போல அடிதொறுஞ் சிறந்த பொருள் அற்றற்று ஒழுகுவதாகிய அப்பொருள் கோள், – **யாற்றுப் புனல்** – யாற்று நீர்ப் பொருள்கோளாம். எ–று.

அடிதொறும் அற்று அற்று என்பதற்கு (ஈற்றிலே முடிவதல்லது) ஒவ்வோரடியிலும் முடிதலற்று என்பது பொருளாகக் கொள்க. அப்பொருளமைக்கப்பட்ட அடிகளில் ஈற்றடியின் ஈற்றிலே பொருண்முடிவுறும் அதற்கு முன்புள்ள அடிகளில் அப்பொருள் அறுத்தறுத்துவிட்டாற்போல நிற்கும் என்பதாம். முதற்றொடங்கி இறுதிவரையும் மாறுதலின்றி நெறிப்பட்டுச்

செல்லும் பொருளை ஒவ்வோரடியளவில் நோக்குமிடத்து ஆதியந்தப்படாமல் அறுத்துவிட்ட குறைபோலிக்குமென்பது விளக்கமாம். இவ்வாறன்றி அடிதொறும் பொருள் முடிவுற்று முடிவுற்று என்பது பொருளாகவுரைக்கின் அறுதலின்றித் தொடர்பாக ஓடுகிற யாற்றுநீர் போலாக மாட்டாமையால் அப்பெயரொடு முரணுமாதலின் அது பொருளன்மை யறிக.

வ–று. “சொல்லருஞ்சூற்பசும்பாம்பின்றோற்றம் போல், மெல்லவே கருவிருந்தீன்றுமேலலார், செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற், கல்வி சேர்மாந்த ரினிறைஞ்சிக் காய்த்தவே” என வரும். இப்பாட்டினுள் சொல்லென்னு மெழுவாயினை முதலெடுத்து, அதன் றொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி என்னும் வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொள்ள அவற்றை இடையே முறைநிறுத்தி, காய்த்தவென்னும் பயனிலையை யிறுதியிலே தந்து முடிந்தமையால் இப்பொருளொழுகுதல் யாற்று நீரொழுக்குப் போலுதல் காண்க. (சொல் – நெற்பயிர்) இடையிலுள்ள அடைமொழிகளும் அவ்வவ்வெச்சங்களோடும் முற்றோடுந் தொடரவேண்டிய நியதியின்படி தொடர்ந்து வந்தமையு நோக்கி, பொருள்கொள்வோர் ஒரு சொல்லையும் மாற்றிவைக்காதபடி நீரோட்டம் போலமைந்து நின்றமையுமறிக.

இந்த யாற்று நீர்ப்பொருள் கோளை முதலில் வைத்தது: மற்றப்பொருள் கோள்களைப் போல மாற்றி வைக்காமல் மொழிகளிருந்தபடியே பொருள் கொள்ளும்படி தெளிவாய் வசனநடை போலிருத்தலானும், மிகுதியாய் வருதலானும், பொருளுரைக்குமிடத்து மற்றப் பொருள்கோள்களை மாற்றி நெறிப்பட வைத்தபோது அவ்வாக்கியங்களின் அடுக்குப் போலிருத்தலால் இதுவே மற்றப் பொருள்கோள்களுக்கு ஆதார இலக்காயிருத்தலானு மென்றறிக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: மற்றைய நோக்காது – (மொழிமாற்று முதலிய) மற்றைப் பொருள்கோள்கள் போல மாறிச் செல்லவேண்டாமல், **அடி தொறும்** – (செய்யுளின் ) அடிகளிலெல்லாம், **வான் பொருள்** – சிறந்த பொருள், **அற்று அற்று ஒழுகும் அஃது** – அமைந்து அமைந்து நடப்பதாகிய அப்பொருள்கோள், **யாற்றுப் புனல்** – யாற்றுநீர்ப் பொருள்கோளாம்; எ–று.

யாற்றுநீர்ப் பொருள்கோள் – திரும்பாமலே ஒரே முகமாக

ஓடுகின்ற ஆற்றுநீரின் ஓட்டம்போல, சொற்கள் முன்பின்னாக மாறாமல் நேராகவே பொருள் கொள்ளப்படுவது. எனவே, இது உவமை பற்றிவந்த பெயரென்க. பூட்டுவில், தாப்பிசை, அளை மறிபாப்பு என்பனவும் இவ்வாறே.

உ–ம்.:

**"சொல்அருஞ் சூற் பசும்பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமேபோல் தலைநிறுவித் தேர்ந்த நூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"**

இப்பாட்டினுள், சொல் என்னும் எழுவாயினை முதல் எடுத்து, அதன் தொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி என்னும் வினையெச்சங்கள் ஒன்றை ஒன்று கொள்ளும்படி இடையிலே முறையாக வைத்து, காய்த்த என்னும் பயனிலையை இறுதியிலே நிறுத்தி முடித்தவாறு காண்க.

**இதன்பொருள்:** சொல் – நெற்பயிர்களானவை, அருஞ் சூல் பசும் பாம்பின் தோற்றம் போல் – (கருவுண்டென்று அறிதற்கு) அரிய கருக்கொண்ட பச்சைப்பாம்பின் வடிவம்போல, மெல்லவே கரு இருந்து – நாளடைவிலே கருக்கொண்டு தங்கி, ஈன்று – பின்பு கதிர்விட்டு, மேல் அலார் செல்வமே போல் – மேன்மைக்குணமுடையரல்லாத கீழ்மக்கட்குச் செல்வம் (நேர்ந்தால் அவர்கள் செருக்கினால் வணக்கமின்றித் தலைநிமிர்ந்து நிற்பது போல) தலை நிறுவி – தமது தலை வணங்காமல் நேரே நிறுத்தி நின்று , (பின்பு கதிர்முற்றியதனால்), தேர்ந்த நூல் கல்வி சேர் மாந்தரின் – மெய்ப்பொருளை யாராய்ந்து கூறுகின்ற சாஸ்திரங்களைக் கற்றல் பொருந்திய மனிதர்கள் (மிக்க வணக்கமுடையராதல்) போல, இறைஞ்சி – மிகவும் வளைந்து, காய்த்த – விளைந்தன எனக் காண்க. ஏ – ஈற்றசை.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: மற்றைய நோக்காது – (மொழிமாற்று முதலிய மற்றப் பொருள்கோள்கள் போலப்) பிறழ்ந்து செல்லவேண்டாது, அடிதொறும் – (செய்யுளின்) அடிதோறும், வான் பொருள் – சிறந்த பொருள், அற்று அற்று ஒழுகும் அஃது – (யாற்றுநீ ரொழுக்குப்போல நெறிப்பட்டு) அற்றற்றொழுகுவதாகிய அப்பொருள்கோள், யாற்றுப்புனல் – யாற்றுநீர்ப் பொருள்கோ ளாம். எ–று.

அற்றற்றொழுகுதலாவது, திரும்பி நடக்கும் நடையற்று அங்கங்கே அமைந்து நடத்தல்.

(உ–ம்.)

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தோர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே"

இப்பாட்டினுட் சொல்லென்னு மெழுவாயினை முதலெடுத்து, அதன்றொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி யென்னும் வினையெச்சங்கள் ஒன்றைறொன்று கொள்ள இடையே முறை நிறுத்திக், காய்த்தவென்னும் பயனிலையை இறுதியிலே தந்து முடித்மையால், இப்பொருளொழுகுதல் யாற்று நீரொழுக்குப்போலுதல் காண்க. (சொல் – நெற்பயிர்.)

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) மற்றைய நோக்காது – மொழிமாற்று முதலியவை போலப் பிறழ்ந்து செல்ல வேண்டாது, அடிதோறும் – (யாற்று நீ ரொழுக்குப் போல நெறிப்பட்டு) அடிதோறும், வான் பொரஎள் – சிறந்த பொருள், அற்று அற்று – அறுபட்டு அறுபட்டு, ஒழுகும் அஃது – நடப்பதாகிய அப் பொருள்கோள், யாற்றுப் புனல் – யாற்று நீர்ப் பொருள்கோளாம். (எ–று)

(பொ–ரை.) மொழிமாற்று முதவியவைபோலப் பிறழ்ந்து செல்ல வேண்டாது, (யாற்று நீ ரொழுக்குப்போல நெறிப்பட்டு) அடிதோறும் சிறந்த பொருள் அறுபட்டு அறுபட்டு நடப்பதாகிய அப் பொருள்கோள் யாற்றுநீர்ப் பொருள்கோளாம்.

திரும்பாமலே ஒலே முகமாக ஓடுகிற ஆற்று நீரோட்டம் உவமையாதலால், அற்றற் றொழுகுதலாவது மொழிமாற்று முதலியன போலத் திரும்பி நடக்கும் நடையற்று அங்கங்கே அமைந்து நடத்ததலே யன்றிப் பொருள் முடிந்து நடத்தல் அன்றெனக் கொள்க.

(உ–ம்.)

"சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே."

இப் பாட்டினுள் சொல்லென்னும் எழுவாயினை முதலெடுத்து அதன் றொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி என்னும் வினை யெச்சங்கள் ஒன்றனை ஒன்று கொள்ள இடையே முறை நிறுத்திக் காய்த்த என்னும் பயனிலை இறுதியிலே தந்து முடித்தமையால், இப் பொருளொழுகுதல் யாற்று நீரொழுக்குப் போலுதல் காண்க. (சொல் – நெற்பயிர்.)

## கா. நமச்சிவாய முதலியார்

மற்றைய நோக்காது – மொழிமாற்று முதலியவை போலப் பிறழ்ந்து செல்லவேண்டாமல், அடிதொறும் – அடிதோறும், வான்பொருள் – சிறந்த பொருளானது, அற்று அற்று ஒழுகும் – (யாற்றுநீர் ஒழுக்குப்போல நெறிப்பட்டு) அமைந்து அமைந்து நடப்பதாகிய, அஃது – அப்பொருள்கோள், யாற்றுப்புனல் – யாற்றுநீர்ப் பொருள் கோளாம்.

திரும்பாமலே ஒரேமுகமாக ஓடுகிற யாற்றுநீரோட்டம் உவமையாதலால், அற்றற்றொழுகுதலாவது, மொழிமாற்று முதலியன போலத் திரும்பி நடக்கும் நடையற்று, அங்கங்கே அமைந்து நடத்தலாம்; அவ்வாறன்றிப் பொருள் முடிந்து நடத்தல் அன்றென்க.

உதாரணம்

'சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே'

இப்பாட்டினுள், சொல் என்னும எழுவாயினை முதலெடுத்துத் தன்றொழிலாகிய இருந்து, ஈன்று, நிறுவி, இறைஞ்சி என்னும் வினையெச்சங்கள் ஒன்றனை ஒன்றுகொள்ள இடையே முறையாக வைத்து, அவற்றைக் கொண்டு முடிந்த காய்த்த என்னும் பயனிலையை இறுதியிலே தந்து முடித்தமைபால், இப்பொருள் ஒழுகுதல் யாற்று நீர் ஒழுக்குப்போலுதல் காண்க; இப்பொருள்கோள் மொழிமாற்று முதலியவற்றுள்ளும் கலந்து வருமென்று அறிக.

(சொல் – நெற்பயிர்)

## மோசசு பொன்னையா

யாற்றுப்புனலினது ஒழுக்குப்போல் நெறிப்பட்டுப் பொருள் முடிவுக்கு ஒவ்வொரு அடியும் பிற அடிகளை நோக்காது, சிறப்புப் பொருளான் முடிந்து பொதுநிலையால் தொடர்ந்து, அறல்பட்டு யாறு தொடர்ந்து ஒழுகுவது போல அமைவது யாற்று நீர்ப்பொருள்கோளாம்.

யாறு அறல்பட்டும் இடையறாது ஒழுகுவது போல், அடிதோறும் அற்றும் தொடர்ந்து நடப்பது இப்பொருள்கோளின் இயல்பு என்று உவமத்திற்கு ஏற்பப் பொருள் விரித்துக் கொள்க.

எ–டு

சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்

மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.

இதன்கண் எச்சங்கள் அற்றற்று நின்றும், சொல் என்னும் எழுவாய் தொடர்ந்து ஒழுகிக், காய்த்த என்னும் பயனிலை கொண்டு முடிந்தமை காண்க, இனி, ஆறு மீளாது செல்வதே இங்கு அமைந்த உவமம் என்று கொண்டு,

அலைப்பான் பிறிதுயிரை யாக்குதலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்.

என்பதனை எடுத்துக்காட்டி யுரைத்தாரும் உளர். இதன் கண்ணும் உம்மைகள் முன்னும் பின்னும் தழுவி நிற்க, இச்செய்யுள் அமைந்துள்ளதே யன்றி மீளாது செல்லாமையை நோக்கி யறிக.

(61)

**412. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே.**

ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை
மாற்றிஓர் அடியுள் வழங்கல் மொழிமாற்றே.

ēūūa poru̱ ku iyaiyum mo!ika̱ ai
māūūi ōr ati u̱ va!aṅkal mo!imāūūu ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**The transposed construction**

The transposed construction reverses in a single line, the natural order of subjects and predicates.

## ஒப்புமைப் பகுதி

மொழிமாற் றியற்கை
சொல்நிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்
(தொல்.சொல்.:409)

ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கல் மொழிமாற்றே

(இ.வி.:363)

...........ஓர் அடியிற் பொருள்நேர்
செய்மொழி மாற்றுதல்.............

(சுவாமி.:69:3)

## மயிலை நாதர்

எ—ன், மொழிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.: கருதிய பொருளுக்குப் பொருந்திய மொழிகளை ஓரடியுள்ளே மாற்றிச் சொல்லுவது மொழிமாற்றாம், எ—று.

வ—று.:

"சுரையாழ[1] வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

என வருமிதனுள், சுரைமிதப்ப, அம்மி ஆழ எனவும், யானைக்கு நிலை முயற்கு நீத்தெனவும் ஓரடியுள்ளே மாற்றினவாறு காண்க; இதனைச் சுண்ணமொழி மாற்றென்று ஈரடியிடத்தே கொள்ளின், ஏனையடிகளுள்ளும் ஏனைப் பாக்களுள்ளும் வரப் பெறாதாமென மறுக்க.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், மொழிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு உணர்—ற்று.

இ—ள்.:— இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக் கூறுவார் அந்நான்கனுள் ஏற்ற பயனிலைகட்கு இயையுமொழிகளைத் தனித்தனி கூட்டிக்கூறாது ஏலாத பயனிலைகட்கு இயையாத மொழிகளைத் தனித்தனி கூட்டி ஓரடியுள்ளே கூறும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோளாம், எ—று.

ஒன்றற்கு ஒன்று பொருந்தியது என்பார் 'ஏற்றபொருளுக்கு இயையும்மொழி' என்றார்.

---

பாட வேறுபாடு:—

1. சுரையாட

மொழிமாற்று என்பது தனக்கு உள்ளதைக் கொடுத்துப் பிறர்க்கு உள்ளதை வாங்கும் பண்டமாற்றுப் போறலின் இரண்டுமொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையும் வந்து அல்லது மொழிமாற்றுதல் கூடாமையின் அத்தொகை தந்து கூறினாம்.

வ–று.:

**"சுரைஆழ அம்மி மிதப்ப வரையனைய**
**யானைக்கு நீத்து முயற்கு நிலைஎன்ப**
**கானக நாடன் சுனை"**

என வரும். இதனுள் ஆழ என்னும் பயனிலைக்கு இயைந்த அம்மி என்னும் மொழியினை மிதப்ப என்னும் பயனிலைக்கும், மிதப்ப என்னும் பயனிலைக்கு இயைந்த சுரை என்னும் மொழியினை ஆழ என்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும், நீத்து என்னும் பயனிலைக்கு இயைந்த முயல் என்னு மொழியினை நிலை என்னும் பயனிலைக்கும் நிலை என்னும் பயனிலைக்கு இயைந்த யானை என்னும் மொழியினை நீத்து என்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறும் காண்க.

**"ஆலத்து மேல குவளை குளத்துள வாலின் நெடிய குரங்கு"**

என ஈரடி முதலியவற்றுள் கூறின் சேய்மைக்கண்ணவாய் மொழிமாற்று என்பது தோன்றாமையின் அஃது இலக்கணம் அன்று என விலக்கி அண்மைக்கண் கூறுவதே மொழிமாற்று என்பார் 'ஓரடியுள்' என்றார்.

ஆலத்துமேல என்பது ஓரடியுள் வாராமையின் கொண்டு கூட்டு என்பாரும் உளர். அது மொழிமாற்றிற்கும் கொண்டு கூட்டிற்கும் வேற்றுமையுணரார் கூற்றாம் என்க. அவர் இச் சூத்திரத்திற்கு மொழிமாற்றோடு பொருந்தாது கொண்டு கூட்டொடு பொருந்தப் பொருள் கூறிச் சுரையாழ என்னும் உதாரணம் காட்டுவர்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், மொழிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்.: ஏற்ற பொருளுக்கு – கருதிய பொருளுக்கு, **இயையு மொழிகளை** – பொருந்திய மொழிகளை, **மாற்றியோரடியுள் வழங்கல்** – ஓரடியுள்ளே மாற்றிச் சொல்லுவது, **மொழி மாற்றே** – மொழிமாற்றாம், எ–று.

உ–ம்.:

"கரையாடக் கொண்டை கயத்தாட
மஞ்ஞை சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

இதனுள் கரையாட மஞ்ஞை, கயத்தாடக் கெண்டை எனவும் சுரை மிதப்ப, அம்மி ஆழ எனவும் யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனவும் ஓரடியுள்ளே மாற்றினவாறு காண்க.

இதனைச் சுண்ணமொழிமாற்று என்று ஈரடியிடத்தே கொள்ளின் ஏனையடிகளுள்ளும் ஏனைப் பாக்களுள்ளும் வரப்பெறாவென மறுக்க. அவை வருமாறு:

"ஆலத்தின்மேற் குவளை கயத்துள்
வானெடிய குரங்கு"

இதனுள் ஆலத்தின்மேல் வானெடிய குரங்கு, குவளை கயத்துள் எனவும் பொருள் கொண்டு ஈரடி மொழிமாற்று என்க.

அடிமறிமொழிமாற்றெனவும் . . . அது

"சூரல் பம்பிய . . . . . . நீவர லாறே"

என்னும் எல்லாவடியும் முதலிறுதியாக உச்சரித்தாலும் ஓசையும் பொருளும் வழுவாது நிற்றலின் அடிமறிமொழிமாற்று ஆயிற்று. என்னை?

**அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து சீர் நிலை திரியாது தடுமா றும்மே**

## விசாகப் பெருமாளையர்

இது, மொழிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ–ள்.: ஏற்ற பொருளுக்கு– ஏற்ற விரண்டு பயனிலைகளுக்கு, இயையு மொழிகளை – பொருந்துமொழிகளை, மாற்றி – ஏலாத பயனிலைகளுக்குத் தனித்தனிக் கூட்டி, ஓரடியுள்– ஓரடியுள்ளே, வழங்கல் – சொல்லுவது, மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"கரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

எனவரும் இதனுள் ஆழவென்னும் பயனிலைக்கு இயைந்த அம்மியென்னு மொழியினை மிதப்ப வென்னும் பயனிலைக்கும் மிதப்ப வென்னும் பயனிலைக்கு இயைந்த சுரை யென்னு மொழியினை ஆழவென்னும் பயனிலைக்கும், நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னு மொழியினை நிலை யென்னும் பயனிலைக்கும், நிலை யென்னும் பயனிலைக் கியைந்த யானை யென்னு மொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறு காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மொழிமாற்றாவது யாது?

ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை

மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே.

(ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை மாற்றி ஓரடியுள் வழங்கல் மொழிமாற்றே.)

இ–ள்.: தாங்குறித்த பொருளுக்குப் பொருந்துமொழிகளை ஓரடியுள்ளே மாற்றிச் சொல்லுதல் மொழிமாற்றுப் பொருள் கோளாம். எ–று.

வ–று.:–

"சுரையாழ வம்மிமிதப்ப வரையனைய – யானைக்குநீத்து முயற்கு நிலையென்ப–நானகநாடன்சுனை" எனவரும். இதனுள், ஆழவென்னும் பயனிலைக் கியைந்த அம்மியென்னு மொழியினை மிதப்பவென்னும் பயனிலைக்கும், மிதப்ப வென்னும் பயனிலைக் கியைந்த சுரையென்னு மொழியினை ஆழவென்னும் பயனிலைக்கும், நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னுமொழியினை நிலையென்னும் பயனிலைக்கும், நிலையென்னும் பயனிலைக் கியைந்த யானையென்னு மொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறு காண்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே மொழிமாற்றுப் பொருள்கோள் உணர்த்திற்று.

இ–ள்.: **ஏற்ற பொருளுக்கியையு மொழிகளை** – (இரண்டு மொழியும் அவை கொள்ளும் இரண்டு பயனிலையுமாய் வரக் கூறுவோர் அந்த நான்கினுள்) கொண்டு முடியும் பயனிலைகட்குப் பொருந்துஞ் சொற்களை, **மாற்றி**– (தனித்தனி கூட்டிக் கூறாமல்) ஏலாத பயனிலைகட்கு இயையாத மொழிகளைத்

தனித்தனி மாற்றி வைத்து, ஓரடியுள் வழங்கன் மொழிமாற்று – ஓரடியுள்ளே கூறப்படும் பொருள்கோள் மொழிமாற்றுப் பொருள்கோளாம், எ–று.

ஓரடியுள் இரண்டு சொல்லும் இரண்டு பயனிலையுமாய் வந்தாலல்லது மொழிமாற்றுதல் கூடாமையால் நான்கென்னுந் தொகை வருவித்துரைக்கப்பட்டது.

வ–று.:

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

என்னும் இச் சிந்தியல் வெண்பாவினுள், ஆழவென்னும் பயனிலைக்கு இயைந்த அம்மியென்னு மொழியினை மிதப்பவென்னும் பயனிலைக்கும், மிதப்ப வென்னும் பயனிலைக்கு இயைந்த சுரையென்னு மொழியினை, ஆழவென்னும் பயனிலைக்குமாக மாற்றி வைத்ததும், நீத்தென்னும் பயனிலைக்கு இயைந்த முயலென்னு மொழியினை நிலை யென்னும் பயனிலைக்கும், நிலை யென்னும் பயனிலைக்கு இயைந்த யானை யென்னும் மொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றி வைத்ததுங் காண்க.

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலின் னெடிய குரங்கு"

என ஈரடி முதலியவற்றுள் உரைப்பது தூரத்ததாய் மொழி மாற்றென்பது தோன்றாமையால் அதனை யிலக்கணமன்றென விலக்கிச் சமீபத்திற் கூறுவதே மொழிமாற்றென்று சொல்ல வந்தவர், 'ஓரடியுள் வழங்கன் மொழிமாற்று' என்றார், ஆலத்துமேல வென்பது ஓரடிக்கண் வாராமையால் மொழிமாற்றன்று, 'வாலி னெடியி குரங்கு ஆலத்து மேல' எனச் சென்று ஒட்டுதலாற் பூட்டுவிற் பொருள்கோளின்பாற்படு மென்க. இதனைக் கொண்டு கூட்டென்பாருமுண்டு. இனி ஆசிரியர் தொல்காப்பியனார்,

"சுண்ணந்தானே பட்டாங் கமைத வீரடியெண்சீ
ரொட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல்"

எனச் சுண்ணமொழிமாற்றெனக் கூறுதலுங் காண்க. இனி, ஓரடியுள் வழங்கன் மொழிமாற்றென்ற இந்நூலுடையார், 'ஈரடி யெண் சீ ரிலக்கியமே யுதாரணங் காட்டியதினாலும், ஒழிந்த பொருள் கோள்களுக்கு அடிவரையறை கூறாததினாலும், ஊணுடையுடுத்துண்டு என நான்கு சொல் இரண்டு சீராகிய

அரையடியிலும் வருதலாலும், அவ்வாறு கூறியதிற் பயனின்மையும்.

**"ஈரடியெண்சீர் துணித்தன ரியற்றல்"**

என ஆசிரியர் கூறியதே யமைவுடைத் தென்பதுங் காண்க. இன்னும்,

**"மொழிமாற்றியற்கை**
**சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய**
**முன்னும் பின்னுங் கொள்வழிக் கொளாஅல்"**

என ஈரடிக்கண்ணே யாதாயினும் ஓர்சொல்லைப் பொருளுக்கு இயையும்படி முன்னின்றதைப் பின்னேயாவது பின்னின்றதை முன்னேயாவது மாற்றுவது, மொழி மாற்றெனக் கூறுதலால் இதனைச் சுண்ணமொழி மாற்றென்பதும், மொழிமாற்றுக்கு

**"இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்**
**பரலவ லடைய விரலை தெறிப்ப"**

என்பதில் இரலையெனப் பின்னின்றதை மருப்பின் என முன்னின்றதனொடு மருப்பினிரலை யெனக் கூட்டுவது போல்வனவும், 'இடைமுலைக்கிடந் துஎன்பதில்', முலையிடைக் கிடந்தெனவும், 'சிலையிலே தோள் விசய னிவ்வண்ணஞ் செப்பினான்' என்பதில், தோளிலே சிலைவிசயன் என முன்னின்ற சொற்களைப் பின்னே மாற்றுவன போல்வனவும் உதாரணமெனவும், இரண்டிறந்த பலவடிக்கண்ணும் பலசெய்யுள் தொடர்பினும் இவ்வாறு அகன்றும் அணுகியும் வரின், அதனை அகன்ற மாட்டுறுப்பு, அணுகிய மாட்டுறுப்பு எனப் பெயர் கொடுத்து,

"அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையிலு
மியன்றுபொருண் முடியத் தம்பொரு ளுணர்த்தன் –
மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்"

எனக் கூறுதலும், பூட்டுவிற்பொருள்கோளும் அளைமறிபாப்புப் பொருள்கோளும் தாப்பிசைப் பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள் கோளும் இம்மாட்டுறுப்புள் அடங்கி நின்றமையும், யாற்றுநீர்ப்பொருள்கோள் யாப்புறுப்பு ளடங்கியவாறுங் காண்க. இதன் முடிபு விளங்கிற்று.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– ஏற்றபொருளுக்கு – ஏற்ற இரண்டு பயனிலைகளுக்கு, இயையும் – பொருந்தும்படியான, மொழிகளை – சொற்களை, மாற்றி – (ஏலாத பயனிலைகளுக்குத்) தனித்தனிகூட்டி, ஓர் அடியுள் வழங்கல் – ஓரடிக்குள்ளே சொல்வது, மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளாம்.

உ–ம் :–

"சுரை ஆழ அம்மிமிதப்ப வரையனைய – யானைக்கு நீத்து
முயற்கு நிலையென்ப – கானக நாடன் சுனை"

குறிப்பு :– இதில் 'ஆழ' என்பது பயனிலைக்கு இயைந்த 'அம்மி' என்னும் மொழியை 'மிதப்ப' என்னும் பயனிலைக்கும், 'மிதப்ப' என்னும் பயனிலைக்கு இயைந்த 'முயல்' என்னும் மொழியை 'நிலை' என்னும் பயனிலைக்கும், 'நிலை' என்னும் பயனிலைக்கு இயைந்த 'யானை' என்னும் மொழியை 'நீத்து' என்னும் பயனிலைக்குமாக மாற்றி வைத்தவாறுங் காண்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை – ஏற்ற விரண்டு பயனிலைகளுக்குப் பொருந்துமொழிகளை, மாற்றி – ஏலாத பயனிலைகளுக்குத் தனித்தனி கூட்டி, ஓரடியுள் வழங்கல் மொழி மாற்று – ஓரடியுள்ளே சொல்லும் பொருள்கோண் மொழிமாற்றுப் பொருள் கோளாம், எ–று.

வ–று.:

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

என வரும். இதனுள், ஆழவென்னும் பயனிலைக்கு இயைந்த அம்மியென்னு மொழியினை மிதப்ப வென்னும் பயனிலைக்கும், மிதப்ப வென்னும் பயனிலைக்கு இயைந்த சுரை யென்னு மொழியினை ஆழவென்னும் பயனிலைக்கும், நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னு மொழியினை நிலை யென்னும் பயனிலைக்கும், நிலை யென்னும் பயனிலைக் கியைந்த யானை யென்னு மொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறு காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

சகக. ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை – இயைந்த இரண்டு பயனிலைகளுக்குப் பொருந்து மொழிகளை, – மாற்றி – இயையாத

பயனிலைகளுக்குத் தனித்தனி கூட்டி, – **ஓரடியுள் வழங்கல்** – ஓரடியுள்ளே – சொல்லப்பட்ட பொருள்கோள், – **மொழிமாற்று** – மொழிமாற்றுப் பொருள்கோளாம். எ—று.

வ—று. "சுரையாழவம்மி மிதப்பவரையனைய, யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப, கானகநாடன்சுனை" இதனுள், ஆழவென்னும் பயனிலைக்கியைந்த அம்மியென்னுஞ் சொல்லை அதற்கியையாத மிதப்ப என்னும் பயனிலையோடு கூட்டிப் பாடினதும், மிதப்ப என்னும் பயனிலைக்கியைந்த சுரையென்னுஞ் சொல்லை அதற்கியையாத ஆழவென்னும் பயனிலையொடு கூட்டிப் பாடினதும், நீத்தென்னும் பயனிலைக்கியைந்த முயலென்னுஞ்சொல்லை அதற்கியையாத நிலை யென்னும் பயனிலையொடு கூட்டிப் பாடினதும், நிலையென்னும் பயனிலைக்கியைந்த யானையென்னுஞ் சொல்லை அதற்கியையாத நீத்து என்னும் பயனிலையொடு கூட்டிப் பாடினதுங் காண்க. பாடினபோதே ஒருவனப்புப்பற்றி இடையில்லாதபடி மாற்றிக் கூட்டப்பட்டமையால், இக்கவிக்குப் பொருள்கொள்வோர் இயையாத அம்மாறுதலைப் பின்பும் மாறுதல் செய்தாற்றான் இயைந்தபடி சொற்கள் நின்று பொருள் பயந்துவிடுமென்பது விளக்கம். (ஏற்ற, இயைந்த என்பவற்றுக்குப் பொருத்தமான என்பது பொருள்.)

"ஆலத்துமேலகுவளை குளத்தள, வாலினெடியகுரங்கு" என ஈரடி முதலியவற்றுள் எழுவாயும் பயனிலையுங் கலந்திருக்கமிம்மாறுதல் தூரத்ததாய் மொழிமாற்றென்பது தோன்றாமையால், அதனையிதற்கிலக்கண மன்றென விலக்கிச் சமீபத்திற்கூறுதலே மொழிமாற்றென்று சொல்லவந்தவர் ஓரடியுள் வழங்கன் மொழிமாற்றென்றார் குரங்கு ஆலத்தின்மேல என்று கவியின் ஈற்று மொழியையும் முதன் மொழியையுங் கூட்டிப் பூட்டுவிற்பொருளாமாறு காண்க. ஆசிரியர் தொல்காப்பியனார் (சூ) "சுண்ணந்தானே பட்டாங்கமைந்தவீரடியெண்சீர், ஒட்டுவழியறிந்து துணித்தனரியற்றல்" எனக் கண்ணமொழி மாற்றென்று கூதலுங் காண்க.

தொல்காப்பியனார் 'ஈரடியெண்சீர்' எனவே ஒவ்வோரடியும் நாற்சீரடியாயிருத்தல் வேண்டுமென்பதும் சுண்ணமொழி மாற்றுப்பொருளை இரண்டடியின் மிக்க அடிகளிலமைக்கலாகா தென்பதும் பெறப்பட்டவாறறிக.

அவ்வாறு பெறப்பட்டனவாயினும் உரையாசிரியர் அச்சூத்திரத்திற்கு உதாரணமாகக் காட்டிய செய்யுள்

ஈரடியின்மேற் 'கானகநாடன்சுனை' என்று முச்சீரடியொன்று கூடி முடிதலானும், ஓரடியாற் கவியின்மையாலும், நன்னூலார் ஓரடியுள் வழங்கலென்றதினாலும் இப்பொருளையுடையகவி பலவடிகளாய் வரினும் வருக மாற்றும் பொருளமைதி ஒவ்வோரடியைக் கடக்கலாகாதென்பது வலியுறுத்தப்பட்ட வாறாம். இவ்வனைத்தும் நோக்குங்கால் மொழிமாற்றுப் பொருள் பலவடிக்கவிகளில் வரலாமெனின்; "சுரையாடக் கெண்டை கயத்தாட மஞ்ஞை, சுரையாழவம்மி மிதப்ப - வரையனைய, யானைக்கு நீத்து முயற்குநிலையென்ப, கானகநாடன் சுனை," என்னுங் கவியையுதாரணமாகக் கொள்ளலாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ-ள்.:-** ஏற்ற பொருளுக்கு - ஏற்ற இரண்டு பயனிலைகளுக்கு, **இயையும்** - பொருந்தத்தக்க, **மொழிகளை**- சொற்களை, மாற்றி - (ஏலாத பயனிலைகளுக்குத்) தனித்தனி கூட்டி, ஓர் அடியுள் வழங்கல் - ஓர் அடியினுள்ளே சொல்வது, **மொழிமாற்று** - மொழிமாற்றுப் பொருள்கோளாம்; எ-று.

உ-ம்.:-

**"சுரை ஆழ அம்மி மிதப்ப வரையனைய**
**யானைக்கு நீத்து முயற்கு நிலை யென்ப**
**கானக நாடன் சுனை"**

இப்பாட்டினுள், முதலடியில் ஆழ என்னும் பயனிலைக்கு இயைந்த அம்மி என்னும் மொழியை மிதப்ப என்னும் பயனிலைக்கும், மிதப்ப என்னும் பயனிலைக்கு இயைந்த சுரை என்னும் மொழியை ஆழ என்னும் பயனிலைக்குமாக மாற்றி வைத்தவாறும்; இரண்டாமடியில் நீத்து என்னும் பயனிலைக்கு இயைந்த முயல் என்னும் மொழியை நிலை என்னும் பயனிலைக்கும், நிலை என்னும் பயனிலைக்கு இயைந்த யானை யென்னும் மொழியை நீத்து என்னும் பயனிலைக்குமாக மாற்றி வைத்தவாறும் காண்க.

(இதன்பொருள்:- காடுகள் சூழ்ந்த நாட்டையுடைய அரசனது மலைச் சுனையானது, சுரைக்காய் மிதக்க அம்மி அமிழ மலைபோன்ற யானைக்குக் கால் நிலைக்கத் தக்க ஆழமும் முயலுக்கு நீந்தத்தக்க தன்மையது மாகுமென்று கூறுவர் (அறிந்தோர் எனக் காண்க.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– ஏற்றபொருளுக்கு – ஏற்ற விரண்டு பயனிலைகளுக்கு, இயையும் மொழிகளை – பெழருந்தும் மொழிகளை, மாற்றி – ஏலாத பயனிலைகளுக்கும் தனித்தனி கூட்டி, ஓரடியுள் வழங்கல் – ஓரடியுள்ளே சொல்வது, மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள்கோளாம். எ–று.

(உ–ம்.)

"சுரையாழ் வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

இதனுள், ஆழவென்னும் பயனிலைக் கியைந்த அம்மியென்னுமொழியினை மிதப்பவென்னும் பயனிலைக்கும், மிதப்பவென்னும் பயனிலைக்கு இயைந்த சுரையென்னு மொழியினை ஆழவென்னும் பயனிலைக்கும், நீத்தென்னும் பயனிலைக் கியைந்த முயலென்னு மொழியினை நிலையென்னும் பயனிலைக்கும், நிலையென்னும் பயனிலைக்கியைந்த யானையென்னு மொழியினை நீத்தென்னும் பயனலைக்குமாக மாற்றிக் கூறியவாறு காண்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) ஏற்ற பொருளுக்கு – ஏற்ற (இரண்டு) பயனிலைகளுக்கு, இயையும் மொழிகளை – பொருந்து மொழிகளை, மாற்றி – (ஏலாத பயனிலைகளுக்குத்) தனித்தனி கூட்டி, ஓர் அடியுள் வழங்கல் – ஓரடியுள்ளே சொல்லுவது, மொழி மாற்று – மொழி மாற்றுப் பொருள்கோளாம். (எ–று)

(பொ–ரை.) ஏற்ற (இரண்டு) பயனிலைகளுக்குப் பொருந்து மொழிகளை (ஏலாத பயனிலைகளுக்குத்) தனித்தனி கூட்டி ஓரடியுள்ளே சொல்லுவது மொழி மாற்றுப் பொருள்கோளாம்.

(உ–ம்.)

"சுரையாழ வம்மி மிதப்ப வரையனையயானைக்கு நீத்து முயற்கு நிலையென்பகானக நாடன் சுனை"

இதனுள் ஆழ என்னும் பயனிலைக் கியைந்த அம்மி யென்னு மொழியினை மிதப்ப என்னும் பயனிலைக்கும், மிதப்ப என்னும் பயனிலைக்கு இயைந்த சுரை என்னு மொழியினை ஆழ என்னும் பயனிலைக்கும், நீத்து என்னும் பயனிலைக் கியைந்த முயல் என்னும் மொழியினை நிலை என்னும் பயனிலைக்கும், நிலை என்னும் பயனிலைக்கியைந்த யானை என்னு மொழியினை நீத்து என்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறு காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

ஏற்ற பொருளுக்கு – தகுதியான பொருளுக்கு, இயையும் மொழிகளை – பொருந்தும் மொழிகளை, மாற்றி – தனித்தனிக் கூட்டி, ஓர் அடியுள் – ஓர் அடியுள்ளே, வழங்கல் – சொல்லுவது, மொழிமாற்று – மொழிமாற்றுப் பொருள் கோளாம்.

உதாரணம்

'சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்று நிலையென்ப
கானக நாடன் சுனை',

இதனுள், ஆழ என்னும் சொல்லை அம்மி என்பதனோடும், மிதப்ப என்பதைச் சுரை என்பதனோடும் ஓரடியுள் மாற்றிக் கூட்டுக. அவ்வாறே, நீத்து என்பதை முயற்கு என்பதனோடும், நிலை என்னும் சொல்லை யானைக்கு என்பதனோடும் ஓர் அடியுள் மாற்றிக் கூட்டிப் பொருள் கொள்க.

இதனால், மொழிமாற்றுப் பொருள்கோளாவது, ஓரடிக்குள் மொழிகளை ஏற்றவாறு மாற்றிக் கூட்டிப் பொருள் கொள்வதாம் என்றறிக.

## மோசசு பொன்னையா

ஓரடியின் மொழிகளை அவை தரும் பொருளுக்குப் பொருந்த மாற்றிச் சொல்லுதல் மொழிமாற்றுப்பொருள்கோளாம் எ–று.

எ–டு.

**குன்றத்து மேல குவளை குளத்துள**
**செங்கோடு வேரி மலர்**
**ஆலத்து மேல குவளை குளத்துள**
**வாலி னெடிய குரங்கு**

இவற்றுள் முதலடியின் சொற்கள், அவை ஏற்று நிற்கும் பொருளுக்குப் பொருந்த குவளை குளத்துள, குன்றத்துமேல (செங்கோடு வேரி மலர்) எனவும்; குவளை குளத்துள, ஆலத்து மேல (வாலின் நெடிய குரங்கு) எனவும் முன்பின்னாக மாற்றிக் கூட்டிப் பொருள் காண்க. ஆசிரியர் தொல்காப்பியரும்,

**மொழிமாற் றியற்கை**
**சொன்னிலை மாற்றிப் பொருளெதி ரியைய**
**முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்,**

என்றே கூறினார்.

ஓரடியுள் வழங்கன் மொழியாற்று என்றதனால், ஓரடியுள் மேற்கண்டவாறு

வழங்குவதை அடிமொழிமாற்று எனவும், ஈரடியுள் வழங்குவதைச் சுண்ணமொழிமாற்று எனவும் கொள்க.

அவற்றுள் சுண்ணமொழிமாற்றின் இலக்கணம்,

**சுண்ணம் தானே**
**பட்டாங் கமைந்த ஈரடி யெண்சீர்**
**ஒட்டுவழி யறிந்து துணிந்தனர் இயற்றல்,**

என்று தொல்காப்பியரால் உரைக்கப்பட்டுள்ளது

எ—டு.

**சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய**
**யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப**
**கானக நாடன் சுனை.**

இதன்கண், ஈரடி எண்சீர்வாய்ப் பட்ட பொருளுக்குப் பொருத்தமாக, சுரைமிதப்ப, அம்மி ஆழ, வரையனைய யானைக்கு நிலை, முயற்கு நீத்து, எனத் துணித்துக் கூட்டிப் பொருள காண்க.

(62)

**413. பெயரும் வினையுமாஞ் சொல்லையும்பொருளையும்**
**வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும் நேரும்**
**பொருள்கோ [1]ணிரனிறை நெறியே.**

பெயரும் வினையும்ஆம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல் நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரல்நிறை நெறியே.

peyar um vin̲ai um ām sol ai um poru̲l ai um
vēūu niral niūīi muūaiyin̲ um etirin̲ um
nērum poru̲lkō̲lniralniūai neūi ē

பாட வேறுபாடு:–

1.நிரைநிறைநெறியே

(முற்றுமிப்படியேகொள்க)

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### The Parallel construction

In the parallel construction, the subjects whether Nouns or Verbs, are first placed together in a series, and then their predicates or attributes in another series, following the former in a corresponding or miscellaneous order.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்
(தொல்.சொல்.:405)

பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினு
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே
(இ.வி.:364)

உளவெழுத்துப் பெயர்வினைச் சொற்பொருள் எதிர்நேர் நிரலாய்
உறல்பொருந்திற் றிசைத்தல் விரி என்பர் உயர்ந்தோரே
(சுவாமி.:69:4)

## மயிலை நாதர்

எ-ன், நிரனிறைப் பொருள்கோளமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்.: பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமாகிய இவற்றையும் இவற்றிக்குப் பொருளாய் வருவனவற்றையும் வெவ்வேறே அடைவே தொகையொப்ப வைத்து வைத்த முறையேயாதல் எதிரேறேயாதல் பொருளேற்குமாறு சொல்லைக் கூட்டிப் பொருள்கோடல் [1]நிரனிறைப் பொருள்கோளாம், எ-று.

---

பாட வேறுபாடு:-

1.நிரைநிறைநெறியே
(முற்றுமிப்படியேகொள்க)

எனவே, பெயர்ச்சொல்லும் பொருளும் வேறுநிறீஇயது பெயர் நிரனிறை; வினைச்சொல்லும் பொருளும் வேறுநிறீஇயது வினைநிரனிறை; நிறீஇய முறையே பொருள்கொள்வன: முறைப்பெயர் நிரனிறை, முறை வினைநிரனிறை யென்பன வாம்: எதிர்தொடங்கிப் பொருள்கொள்வன: எதிர்ப் பெயர் நிரனிறை, எதிர்வினைநிரனிறை யென்பனவாம். இவ்வாற்றான் நிரனிறை நான்காம்.

வ–று.:–

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண்
மேனி மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச்
சாயல் வடிவினளே வஞ்சி மகள்"

(யா. வி.),

"காமவிதி கண்முக மென்மருங்குல் செய்யவாய்
தோமி றுகடினி சொல்லமிழ்தந்–தேமலர்க் காந்தள்
குரும்பை கனக மடவாள்கை
யேந்திளங் கொங்கை யெழில்"

(யா.வி.),

"முறிமேனி [1]முல்லை முறுவல் வெறிநாற்றம் வேலுண்கண்
வேய்த்தோ ளவட்கு"

(குறள்.:1113)

என வருமிவை முறைப்பெயர் நிரனிறை.

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர்தார்மார்ப போர்ச்செழிய – நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோண்மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்"

(யா.வி.)

இது முறை வினைநிரனிறை.

"குன்ற வெண்மண லேறி நின்றியா
மின்னுங் காண்கும் வம்மோ தோழி
களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்

பாட வேறுபாடு:–

1.முத்த முறுவல்

தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே"
(தொல். அகத். சூ. 11. ந; யா.வி.)

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமுமூரகமும் பஞ்சரமா – நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் கலிக்கச்சி மாண்பு"
(கணிகண்ணர் பாட்டு; குருபரம்பரை),

"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்"

(குறள்.: 840),

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ
டேனை யவர்"

(குறள்.: 410)

என வருமிவை எதிர்ப்பெயர் நிரனிறை. எதிர்வினை நிரனிறை வந்தவழிக் காண்க.

இதனுள், 'நெறி' என்ற மிகையான், ஒருசாரார் மயக்க நிரனிறை, ஒருமுதனிரனிறை, இருமுதனிரனிறை, உய்த்துணர் நிரனிறை யெனவும் வேண்டுவரென்க.

அவற்றுள்,

"அம்ம் பவள் வரிநெடுங்க ணாய்வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கி,
னரும்ம் பவண்முலை யொக்குமே யொக்கும்,
கரும்ம் பவள்வாயிற் சொல்"

(யா.வி.),

"கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழை மருங்குன் மேதகு சாயலா
ளென்ன் குறமகளா மாறு"

(யா.வி.),

"இரங்கு குயின்முழவா வின்னிசையாழ் தேனா
வரங்க மணிபொழிலா வாடும்போலுமிளவேனி
லரங்க மணிபொழிலா வாடுமாயின்
மரங்கொன் மணந்தகன்றார் நெஞ்ச மென்செய்த
திளவேனில்"

(யாவி.)

இவை மயக்கநிரனிறை யென்று யாப்பருங்கல முடையார் காட்டினர். பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

"மீனாடு தண்டேறு வேதிய ராதியா,
வானாத வைந்தொன்பா னாயினவும் – தேனார்,
விரைக்கமல வாண்முகத்தாய் வெள்ளை முதலா,
உரைத்தனவு மிவ்வாறே யொட்டு"

(யா.வி.)

இது முதல் நிறுத்த முறையானே பின்னும் முற்று நிறுவாது ஒருதிறம் முதலாகவென்று சொன்னமையான் ஒருமுதனிரனிறை.

"வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமா – மொண்பா
வினங்கட்கு மவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூன்
மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து"

(யா.வி.)

இஃது இருதிறம் முதலாவென்று சொன்னமையான் இருமுதனிரனிறை.

"ஆரன் மகமே யனுடம விட்டமென்,
றீரிரண்டு மாதியா வெண்ணியநாள் – சீரிய,
வெண்பா வகவல் [1]கலிவஞ்சி யென்றுரைத்தா,
ரெண்பா லறிவோ ரெடுத்து"

(யா.வி.)

இது முதற் சில பொருளை யோதி இன்னதற்கு இன்னதென்றானும் இன்னது முதலென்றானும் ஓதாது பா நான்கென்று பொதுப்பட வைத்தமையான் உய்த்துணர் நிரனிறை.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், நிரனிறைப் பொருள்கோளாமாறு உணர்–ற்று.

இ–ள்.: பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும்

பாட வேறுபாடு:–

1.கலிப்பாவஞ் சிக்குரைத்தார்

பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும் வேறு வேறு நிரையாக நிறத்தி, முறையாயேனும் எதிராயேனும் இதற்கு இது பயனிலை என்பதுபடக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம், எ—று.

வ—று.:

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்"

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறை.

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய – நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோள் மாற்றாரை ஏற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்"

இது வினைப் பயனிலைகளும் பெயர்ச்சொற்களுமாய் நின்ற முறைநிரனிறை.

"களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனும் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே"

இது பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

"ஆடவர்கள் எவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா – நீடியமால் நின்றான்
இருந்தான் கிடந்தான் இது அன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு"

இது பெயர்ச்சொற்களும் வினைப் பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. பிறவும் அன்ன.

மேலைச் சூத்திரத்துள், 'மொழி' என்றும் இச்சூத்திரத்துள் 'சொல்' என்றும் கூறிய நிறுத்த சொல்லும் அது கொள்ளும் பயனிலை எனினும் பொருள் எனினும் ஒக்கும் குறித்து வரு கிளவியுமன்றி அல்வழிவேற்றுமை உருபுகளும் பிறசொற்களும் உடன்வருமாலோ எனின்:– சாத்தன் வந்தான் என்றால் அவன் ஆடை அணி முதலியனவும் உடன் வருதல் கூறாதே அமைதல் போலும் என்க.

'சொற்றொறுமிற்றிதன் பெற்றி' (461) என்பதனானே,

"காமவிதி கண்முக மென்மருங்குல் செய்யவாய் தோமில்

துகடினி சொல்லமிர்தம் – தேமலர்க்
காந்தள் குரும்பை கனக மடவாள்கை
ஏந்திளங் கொங்கை எழில்"

என வரும் எழுத்து நிரனிறையும்,

"வெண்பா முதலாக வேதியர் ஆதியா
மண்பால் வகுத்த வருணமாம் – ஒண்பா வினங்கட்கும்
இவ்வாறே என்றுரைப்பர் தொன்னூல் மனந்திட்பக்
கற்றோர் மகிழ்ந்து"

எனத் தொகுத்துக்கூறும் நிரனிறை முதலியவும் கொள்க.

"அம்ம் பவள்ள் வரிநெடுங்கண் ணாய்வஞ்சிக் கொம்ம்
பவள்ள் கொடிமருங்குல் கோங்கின்
அரும்ம் பவள்முலை ஒக்குமே ஒக்கும்
கரும்ம் பவள்வாயிற் சொல்"

என்னும் யாற்றுநீர்ப்பொருள்கோளை மயக்க நிரனிறை என்பாரும் உளர். இது சொல்லையும் பொருளையும் தனித்தனி நிறீஇக் கூறியதன்றி நிரனிறையாக நிறீஇக் கூறாமையின் நிரனிறை அன்று என்பார், 'நெறியே' என்றார்.

## விசாகப் பெருமாளையர்

இது, நிரனிறைப் பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ–ள்.:– பெயரும் வினையுமாஞ் சொல்லையும் – பெயரும் வினையுமாகிய சொற்களையும், பொருளையும் – அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும், வேறு – வேறாக, நிரனிறீஇ – வரிசையாக நிறுத்தி, முறையினும் – முறையாகவேனும், எதிரினும் – எதிராகவேனும், நேரும் – இதற்கிது பயனிலை யென்பதுபடக் கூறும், பொருள்கோள் – பொருள்கோள், நெறி – நெறிப்பட்ட, நிரனிறை – நிரனிறைப்பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண் கண்மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்"

இப்பாட்டில் கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி எனவும் மதி முகம், பவளம் வாய், முத்தம் முறுவல் எனவும் பிடி நடை, பிணை நோக்கு, மஞ்ஞை சாயல் எனவும் பெயர்ச்சொற்களும் பெயர்ச் சொற்களும் வந்த முறை நிரனிறை.

**"காதுசேர்தாழ்குழையாய் கன்னித்துறைச்சேர்ப்ப,**
**போதுசேர்தார்மார்ப போர்ச்செழிய – நீதியான்,**
**மண்ணமிர்தமங்கையர்தோண் மாற்றாரை ஏற்றார்க்கு**

"நுண்ணிய வாய பொருள், கா மண் தூ அமிர்தம் சேர் மங்கையர்தோள் தாழ் மாற்றாரை குழை ஏற்றார்க்கு ஆய் நுண்ணியவாயபொருள்" என வினையும் பெயருமாக வந்த முறைநிரனிறை.

**"களிறுங் கந்தும் போல நளிகடற் கூம்புங்**
**கலனுந் தோன்றும்"**

களிறு கந்து கூம்பு எனப்பெயரும் பெயருமாய் வந்த எதிர்நிரனிறை.

**"ஆடவர்களெவ்வா றகன்றொழிவார்வெஃகாவும்,**
**பாடகமு மூரகமும் பஞ்சரமா – நீடியமா,**
**னின்றானிருந்தான் கிடந்தானி துவன்றோ,**
**மன்றார் மதிற்கச்சி மாண்பு"**

வெஃகா கிடந்தான் பாடகம் இருந்தான் ஊரகம் நின்றான் எனப்பெயரும் வினையுமாய் வந்த எதிர்நிரனிறை.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

நிரனிறைப்பொருள்கோளாவது யாது?

பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.

(பெயரும் வினையும் ஆம் சொல்லையும் பொருளையும் வேறு நிரல் நிறீஇ முறையினும் எதிரினும் நேரும் பொருள்கோன் நிரனிறை நெறியே.)

இ–ள்.: பெயரும் வினையுமாகியசொற்களையும் அவைகொள்ளும் பெயரும் வினைமாகிய பயனிலைகளையும் வேறுவேறு வரிசையாக நிறுத்தி முறையாகவேனும் எதிராகவேனும் இதற்கிது பயனிலையென்பதுபடக் கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப்பொருள்கோளாம். எ–று.

நிரனிறை எத்தனை வகைப்படும்?

முறைநிரனிறை எதிர்நிரனிறையென இருவகைப்படும்.

வ–று.:–

(1) "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி–மதிபவள முத்த முகம்வாய் முறுவல்–பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச்சாயல்–வடிவினளேவஞ்சிமகள்" இது, கொடிநுசுப்பு, குவளைஉண்கண், கொட்டைமேனி. எனவும்,

மதிமுகம், பவளம்வாய், முத்தம் முறுவல், எனவும், பிடி நடை, பிணை நோக்கு, மஞ்ஞை சாயல். எனவும், பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறை.

(2) "காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்–போது சேர் தார்மார்ப போர்ச்செழிய–நீதியான்–மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு–நுண்ணியவாய பொருள்." இது, கா மண், து அமிர்தம், சேர் மங்கையர் தோள், தாழ் மாற்றாரை, குழை ஏற்றார்க்கு, ஆய் நுண்ணியவாய பொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் நீன்ற முறை நிரனிறை.

(3) "களிறுங் கந்தும்போல நளிகடற்–கூம்புங் கலனுந் தோன்றுந்–தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே" இது, களிறு கலன், கந்து கூம்பு எனப் பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை. (கந்து–யானை கட்டுந்தறி. கூம்பு–பாய்மரம். கலன்–தோணி.)

(4) "ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்–பாடகமு மூரகமும் பஞ்சரமா–நீடியமா–னின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ–மன்றார் மதிற்கச்சி மாண்பு." இது, வெஃகா கிடந்தான், பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் எனப் பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நன்ற எதிர்நிரனிறை. (நிரனிறை–நிரல் நிறை, நிரல்–நிரை நிறை–நிறுத்துல் எனவே நிரையே வைத்தல்.)

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே நிரனிறைப் பொருள்கோளுணர்த்திற்று.

இ–ள்.:– **பெயரு–வினையும்** – பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொண்டுமுடியும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும், **வேறு நிரனிறீஇ** – வேறுவேறு நிரையாக நிறுத்தி, **முறையினு மெதிரினும்** – முறையாகவாயினும் அதற்கு எதிராகிய முறை பிறழவாயினும், **நேரும்** – **நெறி** – (இதற்கிது பயனிலை யென்பதுபடக்) கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம், எ–று.

'**பெயரும் வினையுமாஞ் சொல்லையும்**' என்றதினால், பெயர் நிரனிறையும் வினை நிரனிறையும் பெயர்வினை நிரனிறையும் என மூவகைப்படு மெனக் கொள்க.

வ–று.:–

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி மதிபவள

முத்தமுகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்"

இது, பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற பெயர்முறை நிரனிறை.

"மாசு போகவுங் காய்பசி நீங்கவும் –
கடிபுனன் மூழ்கி யடிசில் கைதொட்டு"

என்றது, முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொற்கள் வேறுவேறு நிற்றலால், வினைமுறை நிரனிறை. (அடிசில் – சோறு, கைதொடல் – உண்டல்,)

"உடலு மிரிந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலிரு ளாம்பல்பாம் பென்ப – கெடலருஞ்சீர்த் திங்க
டிருமுகமாச் செத்து"

இது, முடிவனவாகிய பெயரும் முடிப்பனவாகிய வினையும் வேறுவேறு நிரல்பட நிற்றலால், பெயர்வினைமுறை நிரனிறை. இதனுள், செத்து என்பது உவமையுருபு, வினையெச்சப் பொருள்பட நின்றது. (உடலல் – பொங்குதல், ஊழ்–முறை,) உடலுங்கடல், இரிந்தோடுமிருள், முறைமலரும் ஆம்பல், பார்க்கும்பாம்பு, எனக் கூட்டிப் பொருளுணர்க.

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய நீதியான்
மண்ணமிழ்த மங்கையர் தோண் மாற்றாரை
யேற்றார்க்கு–நுண்ணிய வாய பொருள்"

இதுவுமது, இதனுள், 'காதுசேர்தாழ் குழையாய்' என்பது, ஆறு முன்னிலை யேவல் வினைச்சொற்களாதலால், கா – மண், து– அமிழ்தம், சேர்மங்கையர்தோள், தாழ் – மாற்றாரை, குழை – ஏற்றார்க்கு, ஆய் – நுண்ணியவாயபொருள், எனக் கூட்டிப் பொருளுணர்க. து என்றது நீ யுண் என்னும் பொருள்பட நின்ற ஓரெழுத்தொருமொழி. இவையெல்லா முறைநிரனிறை.

"களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந் – தோன்றன்
மறந்தோர் துறைகெழு நாட்டே"

இது பெயர்ச்சொற்களும் பெயரிப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை; இதனைக் களிறுங் கந்துங் கலனுங் கூம்புமென மாற வேண்டுதலால் முறைக்கு எதிராயிற்று. (கந்து – யானைகட்டுந்தறி, கூம்பு – பாய்மரம், கலன் – தோணி,)

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவர் வெஃகாவும்

பாடகமு மூரகமும் பஞ்சரமா – நீடியமா
னின்றா னிருந்தான் கிடத்தா னிதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு"

இது பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் வந்த எதிர்நிரனிறை. இதனை வெஃகாவிற் கிடந்தான், பாடகத்திருந்தான், ஊரகத்து நின்றான், என மாறிக் கூட்டிப் பொருளுணர்க. இவை எதிர் நிரனிறை.

இனிச், 'சொற்றொறு மிற்றிதன் பெற்றி'யென்னுஞ் சூத்திரத்தால்

"காமவிதி கண்முக மென்மருங்குற் செய்யவாய் தோமி
றுகடினி சொல்லமிர்தந் – தேமலர்க்
காந்தள் குரும்பை கனக மடவாள்கை
யேந்திளங் கொங்கை யெழில்"

எனவருமிதனுள், கண் முகம் காவி மதி என்பதைக் 'காமவிதி' என்றும், மென்மருங்குல் செய்யவாய் துடிகனி என்பதைத், துகடினி என்றும், மாற்றி வைத்த எழுத்து மாற்றுநிரனிறையும்,

"வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால வகுத்த வருணமா – மொண்பா
வினங்கட்கு மிவ்வாறே யென்றுரைப்பர் தொன்னூன்
மனத்திட்பக் கற்றோர் மகிழ்ந்து"

என வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்பனவற்றையும் வேதியர், அரசர், வணிகர், சூத்திரர் என்பனவற்றையுந் தொகுத்துக் கூறும் நிரனிறை முதலியவுங் கொள்க. இதனுள் வெண்பா – வேதியர், ஆசிரியம் – அரசர், கலி – வணிகர், வஞ்சி – சூத்திரர், என வகுத்து நிரனிறையாகக் கூட்டிப் பொருள் காண்க. இந்த நான்கு பாவிற்கும் இனங்களாகிய தாழிசை, துறை, விருத்தங்களுள் வெண்பாவினம் வேதியரினமெனவும், ஆசிரியவினம் அரசரினமெனவும், ஒழிந்த கலி வஞ்சியு மவ்வாறே வணிகர் சூத்திரரின மெனவும் பொருள் காண்க.

"அம்ம் பவள்வரி நெடுங்க ணாய்வஞ்சிக்
கொம்ம் பவள்கொடி மருங்குல் கோங்கின் அரும்ம் –
பவண்முலை யொக்குமே யொக்குங்
கரும்ம் பவள்வாயிற் சொல்"

என வருமிது, சொல்லையும் பொருளையும் வெவ்வேறு நிரலாக வையாது தனித்தனி சொன் முடிந்தாங்கே பொருண் முடிய வைத்தலால் – யாற்றுநீர்ப்பொருள்கோளென்க. பிறவுமன்ன,

"அவற்று ணிரனிறை தானே
வினையினும் பெயரினு நினையத் தோன்றிச்
சொல் வேறு நிலை இப் பொருள்வேறு நிலையல்"

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க. நேரும் பொருள்கோள் நிரனிறை என முடிந்து நிற்றல் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **பெயரும் வினையும் ஆம்** – பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமாகிய, **சொல்லையும்** – சொற்களையும், **பொருளையும்** – (அவைகொள்ளும் பெயரும் வினையுமாகிய) பயனிலைகளையும், **வேறு** – வேறு வேறாக, **நிரல் நிறீஇ** – வரிசைப்பட நிறுத்தி, **முறையினும்** – முறையாகவாயினும், **எதிரினும்** – முறைமாறுபடவாயினும், **நேரும்** – 'இதற்கு இது பயனிலை' என்பது படக்கூறுகின்ற, **பொருள் கோள்** –, **நெறி** – நெறிப்பட்ட, **நிரல் நிறை** – நிரனிறைப்பொருள்கோளாம்.

உ–ம் :

1.

'கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்தமுகம் வாய்முறுவல்பிடிபிணை மஞ்ஞை
நடைநோக்குச் சாயல்வடிவினளே வஞ்சி மகள்.

குறிப்பு :– இது – கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டைமேனி எனவும்; மதி முகம், பவளம்வாய், முத்தம் முறுவல் எனவும்; பிடிநடை, பிணைநோக்கு, மஞ்ஞைசாயல் எனவும் பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறை.

"இரணிய நாட்ட னிரணிய னீரைந் தலையன்கஞ்சன்
முரணிய கோட்டி னகத்திற் கரத்தின்முன் றாளிற்றுஞ்சத்
தரணியிற் குத்தி யிடந்தெய் துதைத்தவன் சர்ப்பவெற்பன்
அரணிய கேழ லரிரா கவன்கண்ண னாகிவந்தே"

இச்செய்யுளில் நான்கடியிலும் சொற்கள் முறைநிரனிறையாய் ஒன்றையொன்று தழுவி நின்றமைகாண்க.

உ–ம் :

2.

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்செழிய – நீதியான்
மண்ணமிர்த மங்கையர்தோள் மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்".

இதில், 'கா து சேர் தாழ் குழை ஆய' என்னும் ஆறும் முன்னிலை ஏவல் வினைச்சொற்களாதலால் காமண், து அமிர்தம், சேர்மங்கையர் தோள், தாழ் மாற்றாரை, குழை ஏற்றார்க்கு, ஆய் நுண்ணியவாயபொருள் என வினைப் பயனிலைகளும் பெயர்களுமாய் நின்ற முறைநிரனிறை.

3. களிருங் கந்தும் போல நளிதடற் கூம்புங் கலனுந் தோன்றும் –தோன்றல் மறந்தோர் துறைகெழுநாட்டே''

இது – களிறுபோலக்கலனும், கந்துபோலக்கூம்பும் என மாறவேண்டுதலால், பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. (கந்து – யானைகட்டுந்தறி, கூம்பு – பாய்மரம். கலன் – மரக்கலம்).

4.

''ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா – நீடியமால்
நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிட்கச்சி மாண்பு''.

இது – வெஃகா கிடந்தான், பாடகமிருந்தான், ஊரகம் நின்றான் எனப் பெயர்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. நிரனிறையை ''கிரமாலங்காரம்'' என்பர் வடநூலார்.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: பெயரும் வினையும் ஆம் சொல்லையும் பொருளையும் – பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும், வேறு நிரல் நிறீஇ – வேறுவேறு வரிசையாக நிறுத்தி, முறையினும் எதிரினும் – முறையாகவேனும் எதிராகவேனும், நேரும் பொருள்கோள் – இதற்கிது பயனிலை யென்பதுபடக் கூறும் பொருள்கோள், நெறி நிரனிறை – நெறிப்பட்ட நிரனிறைப்பொருள்கோளாம், எ–று.

வ–று.:

''கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல் வடிவினளே
வஞ்சி மகள்''

இது கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி எனவும், மதிமுகம், பவளம் வாய், முத்தம் முறுவல் எனவும், பிடி நடை, பிணைநோக்கு, மஞ்ஞை சாயல் எனவும்,

பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை.

**"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப**
**போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய நீதியான்**
**மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு**
**நுண்ணிய வாய பொருள்"**

இது, கா மண், து அமிர்தம், சேர் மங்கையர்தோள், தாழ் மாற்றாரை, குழை ஏற்றார்க்கு, ஆய் நுண்ணிய வாயபொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் நின்ற முறை நிரனிறை.

**"களிறுங் கந்தும் போல நனிகடற்**
**கூம்புங் கலனுந் தோன்றுந்**
**தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே."**

இது, களிறு, கலன், கந்து, கூம்பு எனப் பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. (கந்து- யானைகட்டுந்தறி. கூம்பு - பாய்மரம். கலன் - தோணி.)

**"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார்**
**வெஃகாவும் பாடகமு மூரகமும் பஞ்சரமா நீடியமா**
**னின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ**
**மன்றார் மதிற்கச்சி மாண்பு."**

இது, வெஃகா கிடந்தான் பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் எனப் பெயர்ச்சொற்களும் வினைப் பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

## வ. குமாரசாமிப் புலவர்

இ-ள். பெயரும் வினையும் ஆம் சொல்லையும் பொருளையும் - பெபரும் வினையுமாகிய சொற்களையும் அவைகொள்ளும் பயனிலைகளையும், - வேறு நிரல் நிறீஇ - வேறுவேறு வரிசையாகநிறுத்தி, - முறையினும் எதிரினும் - முறையாக வேனும் எதிராகவேனும், - நேரும் பொருள்கோள் - இதற்கிது பயனிலையென்பதுபடக் கூறும் பொருள்கோள், - நெறி நிரல் நிறையே - நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம். எ-று. (நேரும்பொருள்கோள் என்பதற்குக் கூடும் பொருள்கோள் என்றுரைப்பினு) மாம்.

வ-று.

(1) "1. கொடி 2. குவளை 3. கொட்டை 1. நுசுப் 2. புண்கண் 3. மேனி, 1. மதி 2. பவள 3. முத்த 1. முகம் 2. வாய் 3. முறுவல், 1. பிடி 2. பிணை 3. மஞ்ஞை 1. நடை 2. நோக்குச் 3. சாயல், வடிவினளே வஞ்சி மகள்." இதில் அந்த அந்த அடிகளிலிடப்பட்ட இலக்கப்படி முதலடுக்கின் முதற் சொல்லை இரண்டாமடுக்கின்

முதற்சொல்லொடும், முதலடுக்கின் இரண்டாஞ் சொல்லை இரண்டாமடுக்கின் இரண்டாஞ் சொல்லொடும், முதலடுக்கின் மூன்றாஞ்சொல்லை இரண்டாமடுக்கின் மூன்றாஞ் சொல்லொடும் கூட்டி முறை நிரனிறைப் பொருளாமாறு காண்க. (நுசுப்பு + உண்கண்.)

அவ்வாறு கூட்டினால் கொடி – நுசுப்பு, குவளை – உண்கண், கொட்டை – மேனி. எனவும். மதி – முகம், பவளம் – வாய், முத்தம் – வாண்முறுவல். எனவும். பிடி – நடை, பிணை – நோக்கு, மஞ்ஞை – சாயல், எனவும். வரும். இவை பெயர்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்றன.

(2) "1. கா 2. து 3. சேர் 4. தாழ் 5. குழை 6. யாய் கள்ளித்துறைச்சேர்ப்ப, போது சேர்தார்மார்ப போர்ச்செழிய – நீதியான் 1. மண் 2. ணமிர்த3. மங்கையர்தோண் 4. மாற்றாரை 5. யேற்றார்க்கு, 6. நுண்ணியவாயபொருள்." இதில் முன்னடுக்கிலுள்ள ஆறு சொற்களையும் பின்னடுக்கிலுள்ள ஆறு சொற்களையும் முதலாவதோடு முதலாவதையும், இரண்டாவதோடு இரண்டாஞ் சொல்லையும் இவ்வாறே மற்றவைகளையும் ஆறு என்னும் இலக்கம் வரையும் முறையே கூட்டி வினைப் பயனிலைகளும் பெயர்களுமாய் நின்ற முறைநிரனிறை காண்க. (மண் + அமிர்தம்)

கவியை வாசிக்கும்போது இலக்கங்களை நீக்கிவாசிக்க.

விவரணம்: கா – மண், து – அமிர்தம், சேர் – மங்கையர்தோள், தாழ் – மாற்றாரை, குழை – ஏற்றார்க்கு, ஆய் – நுண்ணியவாயபொருள். என வினைப் பயனிலைகளும் பெயர்களுமாய்நின்ற முறை நிரனிறை. முறைநிரனிறையை வடநூலார் அணியினுள் யதாசங்கியாலங்காரமென்பர்.

(3) "1. களிறுங் 2. கந்தும் போலநளிகடற், 2. கூம்புங் 1. கலனுந்தோன்றுந், தோன்றன்மறந்தோர் துறை கெழுநாட்டே." இது, களிறு – கலன், கந்து – கூம்பு எனப் பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை. (கந்து – யானைகட்டுந்தறி. கூம்பு – பாய்மரம். கலன் – தோணி.) இதில் முதலடுக்கின் முதற்சொல்லோடு இரண்டாமடுக்கின் இரண்டாஞ் சொல்லும், முதலடுக்கின் இரண்டாஞ் சொல்லோடு இரண்டாமடுக்கின் முதற்சொல்லுங் கூடிப் பொருடந்தவாறறிக.

(4) "ஆடவர்களெவ்வாறகன்றொழிவார் 1. வெஃகாவும், 2. பாடகமு 3. மூரகமும் பஞ்சரமா – நீடியமால், 3. நின்றா 2. னிருந்தான் 1. கிடந்தா னிதுவன்றோ, மன்றார் மதிற்கச்சிமாண்பு" இது வெஃகா – கிடந்தான், பாடகம் –

இருந்தான், ஊரகம் – நின்றான். எனப் பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை. இதில் முதலடுக்கின் முதற்சொல் இரண்டாமடுக்கின் இறுதிச் சொல்லொடும், முதலடுக்கின் இரண்டாஞ் சொல் இரண்டாமடுக்கின் ஈற்றயற்சொல்லொடும், முதலடுக்கின் மூன்றாஞ்சொல் இரண்டாமடுக்கின் முதற்சொல் லொடுங் கூடிப் பொருள் பயந்தமை காண்க.

## வை.மு. சடகோபராமாநு சாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **பெயரும் வினையும் ஆம்** – பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லுமாகிய, **சொல்லையும்** – சொற்களையும், **பொருளையும்** – (அவைகொள்ளும் பெயரும் வினையுமாகிய) பயனிலைகளையும், **வேறு** – வேறுவேறாக, **நிரல்நிறீஇ**–வரிசைப்பட நிறுத்தி, **முறையினும்** – முறையாகவாயினும், **எதிரினும்** – முறை மாறுபடவாயினும், **நேரும்** – இதற்கு இது பயனிலை யென்பது படக் கூறுகிற, **பொருள்கோள்**–, **நெறி** – வழிப்பட்ட, **நிரல் நிறை** – நிரனிறைப் பொருள்கோளாம்; எ–று.

உ–ம்.:–

**“உடுத்ததுவும் மேய்த்ததுவு மும்பர்கோன் றன்னால்,**
**எடுத்ததுவும் பள்ளிக் கியையப் – படுத்ததுவும்,**
**அந்நாளெறிந்ததுவு மன்பி னிரந்ததுவும்,**
**பொன் னா வரை யிலை காய் பூ”**

இது, உடுத்தது பொன், மேய்த்தது ஆ, எடுத்தது வரை, படுத்தது இலை, எறிந்தது காய், இரந்தது பூ எனப் பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறை. (‘உடுத்தது’ முதலியன – வினையாலணையும் பெயர், வரை – மலை, பூ – பூமி; வடசொல்.)

**(இதன் பொருள்:** – தேவாதி தேவனான திருமாலினால் அரையில் உடுக்கப்பட்டது பீதாம்பரமென்னும் பொற்பட்டாடை, (கிருஷ்ணாவதாரத்தில்) மேய்க்கப்பட்டது பசு, குடையாக எடுத்துப் பிடிக்கப்பட்டது கோவர்த்தன கிரி, (பிரளய காலத்தில்) சயனத்துக்கு இயையப் படுக்கையாகக் கொள்ளப்பட்டது ஆலிலை, (கிருஷ்ணாவதார காலத்தில் கன்று கொண்டு) எறியப்பட்டது விளங்காய், (பாண்டவர்க்காகத் துரியோதனனிடம் தூது சென்று அன்போடு இரக்கப்பட்டது பூமி எனக் காண்க.)

**“காதுசேர் தாழ்குழையாய் கன்னித்துறைச்சேர்ப்ப,**

போதுசேர்தார்மார்ப போர்ச்செழிய – நீதியான்,
மண்ணமிர்த மங்கையர் தோள் மாற்றாரையேற்றார்க்கு,
நுண்ணிய வாய பொருள்"

இதில் 'கா து சேர் தாழ் குழை ஆய்' என்னும் ஆறும் முன்னிலை ஏவல் வினைச் சொற்களாதலால், கா–மண், து–அமிர்தம், சேர் –மங்கையர் தோள், தாழ்–மாற்றாரை, குழை–ஏற்றார்க்கு, ஆய் –நுண்ணியவாய பொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் நின்ற முறை நிரனிறை: (து–உண். தாழ் – கீழ்ப்படுத்து, குழை – மனமிரங்கு, ஆய் – ஆராய்ந்துபார்.)

(இதன்பொருள்:– கன்னி துறை சேர்ப்ப – கன்னியாகுமரி யென்னுந் துறைமுகத்தையுடைய கடற்கரைக்குத் தலைவனே! போது சேர் தார் மார்ப – மலர்களினால் தொடுக்கப்பட்ட மாலையைத் தரித்த மார்பை யுடையவனே! போர் செழிய – போர் செய்யவல்ல பாண்டியனே! (நீ), நீதியால் – முறையே, மண் – பூமியை, கா – பாதுகாப்பாய்; அமிர்தம் – இனிய உணவை, து – உண்பாய்; மங்கையர் தோள் – உரிய மகளிர்களின் தோள்களை, சேர் – சேர்வாய்; மாற்றாரை – பகைவர்களை, தாழ்–தாழச்செய்வாய்; ஏற்றார்க்கு – இரப்பவர்களுக்கு, குழை – மனம் நெகிழ்வாய்; நுண்ணிய ஆய பொருள் – நுட்பமான பொருள்களை, ஆய் – ஆராய்வாய் எனக் காண்க.)

"வான்முகிலும் மின்னும் வருநிலத்து வீழ்ந்தது போல்

தானும் குழலும் தனி வீழ்ந்தாள்"

இது, முகில்போலக் குழலும், மின் போலத் தானும் என மாறவேண்டுமாதலின், பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

இதன்பொருள்:– வானத்திலுள்ள மேகமும் மின்னலும் வெறுந்தரையிலே விழுந்திட்டாற்போலத் தலைவிரி கோலமாய்த் தான் (தமயந்தி) தனியே விழுந்திட்டாள் எனக் காண்க.)

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும் பாடகமு மூரகமும் பஞ்சரமா – நீடியமால்

நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ மன்றார் மதிற்கச்சி மாண்பு"

இது, வெஃகா கிடந்தான், பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் எனப் பெயர்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

(இதன்பொருள்:- நீண்ட திருமால் வெஃகா, பாடகம், ஊரகம் என்ற தலங்களைத் தனக்கு இடமாகக் கொண்டு அவற்றில் முறையே கிடந்தான், இருந்தான், நின்றான்; பலசமைகள் நிறைந்ததும், மதில் சூழ்ந்ததுமான காஞ்சீபுரியின் பெருமை இதுவன்றோ? இப்படிப்பட்ட கச்சிப்பதியை, மனிதர்கள் எங்ஙனம் விட்டு நீங்குவர்? எனக் காண்க. பஞ்சரம் – இடம். வெஃகா, பாடகம், ஊரகம் என்பன – காஞ்சிநகரத்திலுள்ள திருமால் திருப்பதிகள். திருமால் அவற்றுள் வெஃகாவில் பள்ளிகொண்ட திருக்கோலமாகவும், பாடகத்தில் வீற்றிருந்த திருக்கோலமாகவும், ஊரகத்தில் நின்ற திருக்கோலமாகவும் எழுந்தருளியிருக்கின்றனன் ஆதலால், இச்செய்யுளில், முறையே கொள்ளாமல் மாற்றி இயைத்துப் பொருள் கொள்ளவேண்டியதாயிற்று. திருவெஃகா–யதோக்தகாரி சந்நிதி யென்றும், திருப்பாடகம் – பாண்டவதூதர்சந்நிதி யென்றும், திருவூரகம் – உலகளந்த பெருமாள் சந்நிதி யென்றும் வழங்கும்.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: பெயரும் வினையும் ஆம்–பெயரும் வினையுமாகிய, சொல்லையும் பொருளையும் – சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும், வேறு நிரல் நிறீஇ – வேறுவேறு வரிசையாக நிறுத்தி, முறையினும் எதிரினும் – முறையாகவேனும் எதிராகவேனும், நேரும் பொருள்கோள் – இதற்கிது பயனிலை யென்பதுபடக் கூறும் பொருள்கோள், நெறி நிரனிறை – நெறிப்பட்ட நிரனிறைப்பொருள் கோளாம். எ–று.

உ–ம். (1) "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்"

இது, கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி எனவும்; மதிமுகம், பவளம், வாய், முத்தம் முறுவல் எனவும்; பிடி நடை ,பிணை நோக்கு, மஞ்ஞை சாயல் எனவும்; பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறை.

(2) "காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்சொழிய – நீதியோன்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யோற்றோர்க்கு
நுண்ணிய வாய பொருள்."

இது கா மண், து அமிர்தம், சேர் மங்கையர்தோள், தாழ் மாற்றாரை, குழை ஏற்றார்க்கு, ஆய் நுண்ணிய வாயபொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் நின்ற முறை நிரனிறை, (மண்–பூமி. து–உண். தாழ்–கீழ்ப்படுத்து. குழை – மனமிரங்கு. ஆய்–ஆராய்ந்துபார்.)

(3) "களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே."

இது, களிறு கலன், கந்து கூம்பு எனப் பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர், நிரனிறை. (கந்து – யானைகட்டுந்தறி. கூம்பு – பாய்மம்ரம். கலன் – தோணி.)

(4) "ஆடவர்க ளெவ்வா றகன் றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா = நீடியமா
னின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு."

இது, வெஃகா கிடந்தான், பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் எனப் பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) பெயரும் வினையும் ஆம் சொல்லையும் – பெயரும் வினையுமாகிய சொற்களையும், பொருளையும் – (அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய) பயனிலைகளையும், வேறு நிரல் நிறீஇ– வேறு வேறு வரிசையாக நிறுத்தி, முறையினும் எதிரினும் – முறையாகவேனும் வரிசையாக நிறுத்தி, முறையினும் எதிரினும் – முறையாகவேனும் எதிராகவேனும், நேரும் பொருள்கோள் – (இதற்கிது பயனிலை யென்பதுபடக்) கூறும் பொருள்கோள், நெறி நிரல் நிறை – நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம். (எ–று)

(பொ–ரை.) பெயரும் வினையுமாகிய சொற்களையும், (அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய) பயனில்லகளைம் வேறு வேறு வரிசையாக நிறுத்தி முறையாக வேனும் எதிராக வேனும் (இதற்கிது பயனிலை யென்பது படக்) கூறும் பொருள்கோள் நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம்.

(உ–ம்.)

1. **"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்தமும் வாய்மு றுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோடக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்."**

இது, கொடி–நுசுப்பு, குவளை–உண்கண், கொட்டை– மேனி எ–ம்; மதி–முகம், பவளம்–வாய், முத்தம்–முறுவல் எ–ம்; பிடி–நடை, பிணை–நோக்கு,

மஞ்ஞை–சாயல், எ – ம்; பெயர்ச்சொற்களும் பெயர்ச்சொற்களுமாய் வந்த முறைநிரனிறை.

2. “காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய – நீதியால்
மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்.”

இது, கா–மண், து–அமிர்தம், சேர்–மங்கையர் தோள், தாழ்–மற்றாரை, குழை–எற்றர்க்கு, ஆய்– நுண்ணியவாய பொருள் என விரியும் பெயருமாய் வந்த முறை நிரனிறை.

3. “களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றும்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே”

இது, களிறு–கலன், கந்து– கூம்பு எனப் பெயரும் பெயருமாய் வந்த எதிர் நிரனிறை.

(கலன் – கப்பல், கந்து–கட்டுத்தறி, கூம்பு – பாய்மரம்.)

4. “ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா–நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு”

இது, வெஃகா–கிடந்தான், பாடகம்–இருந்தான், ஊக்கம்– நின்றான் எனப் பெயரும் வினையுமாய் வந்த எதிர் நிரனிறை.

## கா. நமச்சிவாய முதலியார்

**பெயரும் வினையும் ஆம் சொல்லையும்** – பெயரும் வினையுமாகிய சொற்களையும், **பொருளையும்** – (அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய) பயனிலைகளையும், **வேறு** – வேறாக, **நிரல் நிறீஇ** – வரிசையாக நிறுத்தி, **முறையினும்** – முறையாகவேனும், **எதிரினும்** – எதிராகவேனும், **நேரும்** – (இதற்கு இது பயனிலை என்பது பட) அமைகின்ற, **பொருள் கோள்** – பொருள்கோள், **நெறி** – நெறிப்பட்ட, **நிரல்நிறை** – நிரல் நிறைப் பொருள்கோளாம்.

உதாரணம்

1. ‘கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவளம் முத்தம் முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்’.

இது : கொடி – நுசுப்பு, குவளை – உண்கண், கொட்டை –மேனி; என்றும்; மதி – முகம், பவளம் – வாய், முத்தம் – முறுவல் என்றும்; பிடி – நடை, பிணை – நோக்கு, மஞ்ஞை – சாயல் என்றும்; பெயர்ச் சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் வந்த முறை நிரனிறை.

2. 'காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப் போர்ச்செழிய– நீதியால்
மண்ணமிர்தம் மங்கையர்தோள் மாற்றாரை ஏற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்.'

இது : கா–மண், து–அமிர்தம், சேர்–மங்கையர்தோள், தாழ்–மாற்றாரை, குழை– ஏற்றார்க்கு, ஆய் – நுண்ணியவாயபொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் வந்த முறை நிரனிறை.

தாழ் = தாழ்த்து எனப் பிறவினைப்பொருளில் வந்துளது. து – உண்.

3. 'களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்பும் கலனும் தோன்றும்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே.'

இது : களிறு – கலன், கந்து – கூம்பு, எனப் பெயரும் பெயர்ப் பயனிலைகளுமாய் வந்த எதிர் நிரனிறை.

கந்து – யானைகட்டுந்தறி. கூம்பு – பாய்மரம், கலன் – தோணி.

4. 'ஆடவர்கள் எவ்வா றகன்றொழிவர் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா – நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு'

இது : வெஃகா – கிடந்தான், பாடகம் – இருந்தான், ஊரகம் – நின்றான் எனப் பெயரும் வினைப்பயனிலைகளுமாய் வந்த எதிர் நிரனிறை.

## மோசகு பொன்னையா

பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் ஆகிய சொற்களையும், அவைகொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும், வேறாக வரிசைப்படுத்தி, நேர்முறையாகவாயினும், எதிர்மறையாகவாயினும் இதற்கு இது பயனிலை யென்பதுபடக்கூறுவது நிரல்நிறைப் பொருள்கோளாம் எ–று.

எ–டு

1. கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்.

இதன்கண் கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டைமேனி, மதிமுகம், பவளம்வாய், முத்து முறுவல், பிடிநடை, பிணைநோக்கு, மஞ்ஞை சாயல் என இயைத்துப் பெயர்ச் சொற்களும் பெயர்ப்பயினலைகளுமாய் நின்ற முறைநிரனிறைப் பொருள் காண்க.

**2. காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப**
**போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியால்**
**மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு**
**நுண்ணிய வாய பொருள்.**

இதன் கண் மண்ணைக் கா, அமிர்தத்தைத் து(உண்), மங்கையர்தோளைச்சேர், மாற்றாரைத் தாழ் (தாழ்த்து) ஏற்றார்க்குக்குழை (இரங்கு), நுண்ணியவாய பொருளை ஆய் என இயைத்துப் பெயர்ச் சொற்களும் வினைப் பயனிலைகளுமாய் நின்ற முறைநிரனிறைப் பொருள் காண்க.

**3. களிறுங் கந்தும் போல நளிகடற்**
**கூம்புங் கலனுந் தோன்றும்**
**தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே.**

இதன்கண் களிறுபோலக் கலனும், கந்துபோலக் கூம்பும் தோன்றுமெனப் பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறைப் பொருள் காண்க.

**4. ஆடவர்க் னெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்**
**பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமால்**
**நின்ற னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ**
**மன்றார் மதிட்கச்சி மாண்பு.**

இதன்கண் வெஃகாவிற்கிடந்தான், பாடகத்தில் இருந்தான், ஊரகத்தில் நின்றான் எனப் பெயர்ச்சொற்களும் வினைபயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறைப் பொருள் காண்க.

ஆசிரியர் தொல்காப்பியர்,

**அவற்றுள்,**
**நிரல்நிறை தானே**
**வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்**
**சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.**

என்றே கூறினார். எதிர்நிரனிறை இவ்வாசிரியராற் கூட்டியுரைக்கப்பட்டது. யாப்பருங்கல விருத்தி உரைகாரர் பெயர்நிரனிறை, எழுத்துமாறுநிரனிறை, வினைநிரனிறை, முறைநிரனிறை, எதிர்நிரனிறை, மிகையயெண் நிரனிறை, ஒருமுதனிரனிறை, இருமுதனிரனிறை, உய்த்துணர்நிரனிறை,

இணைநிரனிறை, பொழிப்புநிரனிறை, ஒரூஉநிரனிறை, கூழை நிரனிறை, மேற்கதுவாய் நிரனிறை, கீழ்க்கதுவாய் நிரனிறை, முற்று நிரனிறை, முரண்நிரனிறை என வகுத்துக்காட்டி எடுத்துக்காட்டுகளுந் தந்துரைத்தார். அவ்விகற்பங் களெல்லாம் அவருரையால் அறிக.

(63)

## 414. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
## பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.

எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக்கு உடையது பூட்டுவில் ஆகும்.

eḷuvāy iūuṭi nilai moḷi ṭam uḻ
poruḻ nōkku utaiyaṭu pūttuvil ākum

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**The strung-bow construction**

The strung-bow construction is that in which a (grammatical) relation subsists between the first ands last words (of a stanza).

### ஒப்புமைப் பகுதி

எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக் குடையது பூட்டுவில் லாகும்

(இ.வி.:365)

............பிறசொல் முதல்நோக்கல்.......

(சுவாமி.:69:3)

### மயிலை நாதர்

எ–ன், பூட்டுவிற் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– பாவின் முதலினும் ஈற்றினுநின்ற மொழிகள் தம்மிற் பொருள்நோக்கி நிற்பது பூட்டுவிற் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத,

ரிறந்து படிற்பெரிதா மேதம் – உறந்தையர்கோன்,
றண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்,
கண்ணாரக் காணக் கதவு"

(முத். புறத். காம.)

எனவரும்.

## சங்கர நமச்சிவாயர் சிவஞானமுனிவர்

எ–னின், பூட்டுவிற்பொருள்கோளாமாறு, உணர்–ற்று.

**இ–ள்.:** செய்யுட்கண் முதலினும் ஈற்றினும் நிற்கும் மொழிகள் தம்முள் பொருள்நோக்கமுடைய பொருள்கோள் பூட்டுவிற் பொருள்கோளாம், எ–று.

*செய்யுட்கெல்லாம் முதலினும் ஈற்றினும் என்னாமையின் அதனகத்து எங்ஙனம் இவ்வாறு வரினுமாம் என்க.*

**வ–று.:**

"திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்துபடின் பெரிதாம் ஏதம் – உறந்தையர்கோன்
தண்ணார மார்பில் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

என வரும். பிறவும் அன்ன.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** நிரனிறைப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

**இ–ள்.:– பெயரும் வினையுமாஞ் சொல்லையும்** – பெபர்ச்சொல் வினைச்சொல் என்னும் இவற்றையும், **பொருளையும்** – இவற்றிற் பொருளாய் வருவனவற்றையும், **வேறு நிரனிறீஇ** – வெவ்வேறே அடைவே தொகை யொப்ப வைத்து, **முறையினு மெதிரினும்** – வைத்த முறையே யாதல் எதிரேயாதல், **நேரும் பொருள்கோள்** – பொருளேற்குமாறு சொல்லைக் கூட்டிப் பொருள் கொள்ளுதல், **நிரனிறை நெறியே** – நிரனிறைப் பொருள் கோளின் முறையாம். எ–று.

**அரும்பதவுரை:–** பெயர்ச்சொல்லும் பொருளும் வேறு நிறீஇயது பெயர் நிரனிறை; வினைச்சொல்லும் பொருளும் வேறு நிறீஇயது வினை நிரனிறை. இவை நிறீஇய முறையே பொருள் கொள்வன, முறைப்பெயர் நிரனிறை, முறைவினை நிரனிறை என்னும் பெயராம். எதிர் தொடங்கிப் பொருள் கொள்வன எதிர்ப்பெயர் நிரனிறை எதிர்வினை நிரனிறை என்பனவாம். இவ்வாற்றான் நான்காம் நிரனிறைப் பொருள் . . . கொள்க.

உ–ம்.:

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி மதிபவள
முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்"

"காமவிதி கண்முக மென்மருங்குல் செய்யவாய்
தோமி றுகடினி சொல்லமிர்தந் – தேமலர்க் கா ந் த ள்
குரும்பை கனக மடவாள்கை
யேந்திளங் கொங்கை யெழில்"

"முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு"

(குறள்: 1113)

என இவை பெயர்முறை நிரனிறை.

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய – நீதியான்
மண்ணமிர்த மங்கையர் தோன் மாற்றாரை யேற்றார்க்கு
நுண்ணிய வாய பொருள்

இவை வினை நிரனிறை.

"குன்ற வெண்மண லேறி நின்றியா
மின்னுங் காண்கு வம்மோ தோழி
களிறுங் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே"

"ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமு மூரகமும் பஞ்சரமா – நீடியமால் நி ன் ற ா
னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி மாண்பு"

"கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றே சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்"

(குறள். 840)

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

(குறள். 410)

இவை பெயர் எதிர் நிரனிறை. எரித்தான் உரித்தான்

உதைத்தான் வேளினை தோலினை காலனை. இதுவும் பெயர் எதிர் நிரனிறை. “நெறி” என்ற மிகையானே, ஒரு சாரார் மயக்க நிரனிறையும் ஒரு முதனிரைனிறையும் இருமுதனிரனிறையும் எனவும் வேண்டுவர் என்க.

அவற்றுள்,

“அம்ம் பவள்ள் வரிநெடுங் கணாய் வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கின்
அரும்ம் பவண்முலை யொக்குமே யொக்கும்
கரும்ம் பவளவாயிற் சொல்”

“கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு பொ ன் ன்
பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குல் மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு

இவை மயக்க நிரனிறை.

"அறவரு முதலாய அந்நால்வருமாம்"

இவை ஒரு முதனிரனிறை.

அறவரு முதலாய . . . ன்னவர் முதலாய வருஞ் சாதியாகும். இவை இருமுதனிரனிறை நால்வகைப் பொருளும் நால் வண்ணமாகும். இவை உய்த்துணர் நிரனிறையாம்.

“வஞ்சி மகள்” இப் பாவினொடு சேர்ந்த பெயர் முறை நிரனிறை ஆறாம்.

“மயில்களிக்கும் வண்டார்க்கும் தண்டளவும் பூக்கும்
குயிலொளிக்குங் கோபம் பரக்கும் வயிலொளிக்கும்
கானங் குழைகொள்ளும் காந்தள் துடுப்பெக்கும் வானம்
பொழியு மழை”

இது நிரலே நிறுத்து நேரே பொருள் கொண்டது.

“காரிகை மென்மொழியோ நோக்கால் கதிர்
முலையான் வார்புருத்தான் இடையாள் வாய்த்துவரியாள்
ஏர்புனைந்த கொல்லி
வடிநெடுவேற் கோங் கரும்பு வாங்குசிலை
வல்லி தமியேன் மனம்”

இது நிரையே நிறுத்திய மொழிமாற்றுக் கொண்டது.

## கூழங்கைத்தம்பிரான்

சூ–ம், பூட்டுவிற் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்.: எழுவா யிறுதி நிலைமொழி – பாவின் முதலினும் ஈற்றினும் நின்ற மொழிகள், தம்முட் பொருணோக் குடையது – தம்முன் பொருள் நோக்கி நிற்பது, பூட்டுவில்லாகும் – பூட்டுவிற் பொருள்கோளாம், எ–று.

உ–ம்.:

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத
ரிறந்து படிற்பெரிதா மேதம் – உறந்தையர்கோன்
றண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

(முத்தொள்.)

என வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, பூட்டுவிற்பொருள் கோளாமாறு உணர்த்துகின்றது.

இ–ள்.:– எழுவாய் – செய்யுள்முதலிலும், இறுதி – இறுதியிலும், நிலை – இருக்கின்ற, மொழி – மொழிகள், தம்முள் – தமக்குள், பொருணோக்குடையது – பொருளைநோக்குதலுடைய பொருள்கோள், பூட்டுவில்லாகும் – பூடுவிற் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத
ரிறந்துபடிற் பெரிதா மேத–முறந்தையர்கோன் றண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

இதில் திறந்திடுமின் கதவு என நோக்கிற்று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

பூட்டுவிற்பொருள்கோளாவது யாது?

எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.

(எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள் பொருள். நோக்கு உடையது பூட்டுவில் ஆகும்.)

இ—ள்.:— செய்யுண் முதலிலும் இறுதியிலும் நிற்குமொழிகள் தம் முள்ளே பொருளை நோக்குதலுடைய பொருள்கோள் பூட்டு விற்பொருள்கோளாம். எ—று.

வ—று.;—

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத—ரிறந்துபடிற் பெரிதா மேத—முறந்தையர்கோன்—றண்ணார மார்பிற்றமிழர் பெருமானைக் — கண்ணாரக் காணக் கதவு" இதிவே, திறந்திடுமின் கதவு என நோக்கிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே பூட்டுவிற்பொருள்கோளுணர்த்திற்று.

இ—ள்.:— எழுவாயிறுதி மொழி — செய்யுள் முதலிலும் ஈற்றிலும் நிற்குமொழிகள், தம்முட் பொருணோக்குடையது பூட்டுவில்லாகும் — தம்மிற் பொருள் நோக்க முடையதாயிருப்பது விற்பூட்டுப் பொருள்கோளாம், எ—று.

வ—று.:—

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதரிறந்து படிற்பெரிதா மேதமுறந்தையர் கோன்

றண்ணா ரமார்பிற் றமிழ்நர் பெருமானைக் கண்ணாரக் காணக் கதவு"

இதனுள், திறந்திடுமின் என்னும் செய்யுள் முதல்மொழிக்குங் கதவு என்னும் அதனிறுதி மொழிக்கும் பொருள் நோக்க முடைத்தாகிக் கதவு திறந்திடுமின் என நின்றவாறு காண்க, பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :— எழுவாய் — (செய்யுளின்) முதலிலும், **இறுதி** — ஈற்றிலும், **நிலை** — நிற்கிற, **மொழி** — சொற்கள், **தம்முள்** — தமக்குள்ளே, பொருள் நோக்கு **உடையது** — பொருளை நோக்குதலையுடையது, பூட்டுவில் **ஆகும்** — விற்பூட்டுப் பொருள்கோளாம்.

குறிப்பு :— விற்பூட்டுப் பொருள்கோள் — இருகோடிகளிலும் நாணி பூட்டப் படுதலையுடைய விற்போலச் செய்யுளின் முதன்மொழியும் இறுதி மொழியும் பொருளிற் பொருந்துவது.

உ—ம். "திறந்திடுமின் தீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம் — உறந்தையர்கோன்

தண்ணார மார்பன் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: எழுவாய் இறுதி நிலைமொழி – செய்யுண் முதலிலும் இறுதியிலும் நிற்கு மொழிகள், தம்முள் பொருள் நோக்கு உடையது – தம்முள்ளே பொருளை நோக்குதலுடைய பொருள்கோள், பூட்டுவில் ஆகும் – பூட்டுவிற் பொருள்கோளாம், எ–று.

வ–று.:

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத
ரிறந்து படிற்பெரிதா மேத – முறந்தையர்கோன்
றண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு."

இதிலே, திறந்திடுமின் கதவு என நோக்கிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். எழுவாய் இறுதி நிலைமொழி – கவியின் முதலிலும் ஈற்றிலும் நிற்கின்ற சொற்கள், – தம்முள் பொருள் நோக்கு உடையது – தம்முள்ளே பொருளை நோக்குதலுடைய பொருள்கோள், – பூட்டுவில் ஆகும் – பூட்டுவிற் பொருள்கோளாம். எ–று.

வ–று.:–

"திறந்திடுமின்றீயவைபிற்காண்டுமாதர், இறந்து படிற்பெரிதாமே தம் – உறந்தையர்கோன், தண்ணார மார்பிற்றமிழர் பெருமானைக், கண்ணாரக் காணக்கதவு." இதில் திறந்திடுமின் – கதவு என்று முதலிலும் ஈற்றிலுநின்ற சொற்கள் கூடிப் பொருள் பயந்தவாறறிக. வில்லின் அடி, நுனி என்னுமிரண்டந்தங்களும் நாணிற்பூண்டாற்போலக் கவியின் முதலுமிறுதியுமாகிய இரண்டும் பொருளிற் சம்பந்தப்பட்டு நின்றமையால் அப்பெயருண்டாயிற்று.

"மாடுதின்பான்பார்ப்பான்மறையோதுவான்குயவன், கூடிமிகமண்பிசைவான்கொல்லனே – தேடி, இரும்படிப் பான்றான் செக்கானெண்ணெய் விற்பான் வண்ணான், பரும்புடைவைதப்பும்பறை." இக்கவியில், பறை – மாடுதின்பான், என்று ஈற்றமொழியு முதன்மொழியுங் கூடிப்பொருள் பயந்தவாறறிக.

"தருமஞ்சந் திகழ்தாமரையோன்பதம், கருமஞ்சந்திகடுப்பவர் வாழ்பதம், துருமஞ்சந்திரற்றோய்திருக்காளத்தி, வருமஞ்சந்தி மழைமத யானையே." இதில் யானையே – தரும், என்று கவியில் இறுதியிலும் முதலிலும் நின்ற சொற்கள் கூடிப் பொருணோக்குற்றமை காண்க.

இந்த விற்பூட்டுப் பொருள்கோளுக்கிடையிற் கொண்டு கூட்டு, நிரனிறை, தாப்பிசை என்னும் பொருள் கோள்களிலொன்று சிறிது கலந்துவருதலுமுண்டு.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: எழுவாய் – (செய்யுளின்) முதலிலும், இறுதி – ஈற்றிலும், நிலை – நிற்கிற, மொழி – சொற்கள், தம்முள் – தமக்குள்ளே, பொருள்நோக்கு உடையது – பொருளை நோக்குதலுடையது, பூட்டு வில் ஆகும் – விற்பூட்டுப் பொருள்கோளாம், எ–று. இங்கே எழுவாய் – முதல். பூட்டுவிற் பொருள்கோள் – இரு கோடிகளிலும் நாண் பூட்டப்படுதலையுடைய விற்போலச் செய்யுளின் முதல் மொழியும் இறுதிமொழியும் பொருளிற் பொருந்துவது.

உ–ம்.:

"திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்,
இரந்து படிற்பெரிதா மேதம் – உறந்தையர்கோன்,
தண்ணார மார்பன் தமிழர் பெருமானைக் கண்ணாரக்
காணக் கதவு"

இதில், திறந்திடுமின் கதவு என நோக்கிற்று.

(இதன் பொருள்:– தீயவை பின் காண்டும் – (எவையேனும்) தீங்குகள் நேருமாயின் (அவற்றிற்குப் பரிகாரம்) பின்பு பார்த்துக் கொள்வோம்; மாதர் இறந்துபடின் பெரிது ஆம் ஏதம் – (சோழனைக் காணுதற்கு மிக்க ஆசை கொண்டு வந்துள்ள) மகளிர் (அவனைக்காணாமையாலாகிய வருத்த மிகுதியால்) இறந்தொழிந்தால் (பெண் கொலையாகிய) பெரும் பாவம் விளையும்; (ஆதலால்) உறந்தையர் கோன் – உறையூரிலுள்ளார்க்கு அரசனும், தண் ஆரம் மார்பன் – குளிர்ந்த முத்துமாலையைத் தரித்த மார்பையுடையவனும், தமிழர் பெருமானை – தமிழ் வல்லார்க்குத் தலைவனுமாகிய சோழனை, கண்ஆர காண – கண்கள் களிக்க (இம்மகளிர்) காணும்படி, கதவு திறந்திடுமின் – கதவைத் திறந்துவிடுங்கள் எனக் காண்க.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: எழுவாய் – செய்யுண் முதலிலும், இறுதி – இறுதியிலும், நிலைமொழி – நிற்கு மொழிகள், தம்முள் – தம்முள்ளே, பொருள் நோக்கு உடையது – பொருளை நோக்குதலுடைய பொருள்கோள், பூட்டுவில் ஆகும் – பூட்டுவிற் பொருள்கோளாம். எ–று.

(உ–ம்.) "திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத
ரிறந்து படிற்பெரிதா மேத – முறந்தையர்கோள
ற்ண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு."

இதிலே, திறந்திடுமின் என்னும் செய்யுள் முதல் மொழிக்கும் கதவு எனனும் அதன் இறுதி மொழிக்கும் பொருள் நோக்கம் உடைத்தாகிக் 'கதவு திறந்திடுமின்' என நின்றவாறு காண்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) எழுவாய் இறுதி – (செய்யுள்) முதலிலும் இறுதியிலும், நிலைமொழி – இருக்கின்ற மொழிகள், தம்முள் – தமக்குள், பொருள் நோக்குடையது – பொருளை நோக்குதலுடைய பொருள் கோள், பூட்டுவில் ஆகும் – பூட்டுவிற் பொருள்கோளாம். (எ–று)

(பொ–ரை.) (செய்யிள்) முதலிலும இறுதியிலும் இருக்கின்ற மொழிகள், தமக்குள் பொருளை நோக்குதலுடைய பொருள் கோள் பூட்டுவிற் பொருள்கோளாம்.

(உ–ம்.)

"திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம் – உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

இதில் 'திறந்திடுமின்–கதவு என நோக்கிற்று.

## கா. நமச்சிவாய முதலியார்

எழுவாய் – (செய்யுள்) முதலிலும், இறுதி – இறுதியிலும், நிலை– அமைந்துள்ள, மொழி – மொழிகள், தம்முள் – தமக்குள், பொருள் நோக்கு உடையது – பொருளை நோக்குதலுடைய பொருள்கோள், பூட்டுவில் ஆகும் – பூட்டுவிற்பொருள்கோளாம்.

உதாரணம்

'திறந்திடுமின் தீயவை பிற்காண்டும் மாதர்
இறந்து படிற்பெரிதாம் ஏதம் –உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு'

இதில் 'திறந்திடுமின் – கதவு' என நோக்கிற்று.

## மோசசு பொன்னையா

செய்யுளில் முதலிலும், ஈற்றிலும் நிற்கும் சொற்கள் தம்முள் பொருள் நோக்கமுடையது பூட்டுவில்பொருள்கோளாகும். எ–று.

எ–டு.

திறந்திடுமின் தீயவை பிற்காண்டு மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம்–உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதஸவ.2

இதனைக் கதவு திறந்திடுமின் எனக் கூட்டிப் பொருள் காண்க.

(64)

**415. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.**

இடைநிலை மொழியே ஏனை ஈர் இடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை.

itai nilai moḷi ē ēṉai īr itaṭṭu um
natanṭu poruḻ al naṇṇuṭal ṭāppisai

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**The Double-faced construction**

In the double-faced (or swinging) construction, a word in the middle corresponds to the first and last portions (of a stanza)

## ஒப்புமைப் பகுதி

இடைநிலை மொழியே ஏனைஈர் இடத்து
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை

(இ.வி.:366)

..............நடுச்சொன்முதல் கடைபோய்த்
தெளிதல்............

(சுவாமி.:69:2–3)

## மயிலை நாதர்

எ–ன், தாப்பிசைப்பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: பாவின் இடைநின்றமொழி முதலினும் ஈற்றினும் சென்று பொருள் கொள்வது தாப்பிசைப்பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு"

(குறள்.: 255)

இதனுள், ஊனென இடைநின்றமொழி ஏனை ஈரிடத்தும் சென்றவாறு காண்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், தாப்பிசைப் பொருள்கோளாமாறு உணர்–ற்று.

இ–ள்.:– இடை நிற்கும் மொழி, ஒழிந்த முதலினும் ஈற்றினும் சென்று பொருளைக்கூடும் பொருள்கோள் தாப்பிசைப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"உண்ணாமை உள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு"

என வரும்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், தாப்பிசைப் பொருள்கோள் ஆமாறு கூறியது.

இ–ள்.:– இடைநிலை மொழியே – பாவின் இடையினின்ற மொழி, ஏனையீரிடத்தும் – ஒழிந்த முதலிடத்தினும் ஈற்றிடத்தினும், நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை – சென்று பொருள் கொள்வது தாப்பிசை, எ–று.

உ–ம்.:

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு"

(குறள். 255)

## விசாகப் பெருமாளையர்

இது, தாப்பிசைப் பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ—ள்.:— இடைநிலைமொழி — நடுவிலுள்ள மொழி, ஏனையீரிடத்தும் — ஒழிந்த முதலிலு மீற்றிலும், நடந்து — சென்று, பொருளை—பொருளை, நண்ணுதல் — கூடும்பொருள்கோள், தாப்பிசை — தாப்பிசைப் பொருள்கோளாம், எ—று.

(ஊசல்வடம் போலிடை நின்று இருமருங்குஞ் செல்லலால் இப் பெயர்பெற்றது. தாம்பு, தாப்பு என விகாரமாயிற்று.)

வ—று.:

**உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண**
**வண்ணாத்தல் செய்யா தளறு**

இதில் ஊனென்பது அப்படி செல்லல் காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

தாப்பிசைப்பொருள் கோளாவது யாது?

இடைநிலை மொழியே யேனையீ ரிடத்தும்

நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.

(இடை நிலை மொழி ஏனை ஈரிடத்தும் நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை.)

இ—ள்.: இடையிலே நிற்குமொழி ஒழிந்த முதலினு மீற்றினுஞ் சென்று பொருளைக்கூடும் பொருள்கோள் தாப்பிசைப்பொருள்கோளாம். எ—று.

தாப்பிசையென்பதற்கு ஊஞ்சல்போல் இடைநின்று இருமருங்குஞ் செல்லும் சொல்லென்பது பொருள். (தாம்பு—ஊஞ்சல். இசை—சொல்.)

வ—று.:—

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண—வண்ணாத்தல் செய்யா தளறு" இதனுள், ஊன் என இடையிலே நின்ற மொழி ஊனுண்ணாமையுள்ளத என முதலிலும், ஊனுண்ண எனப் பின்னருஞ்சென்று கூடுதல் காண்க.

## முகவை இராமானுசக் கவிராயர்

இது, நிறுத்த முறையே தாப்பிசைப் பொருள்கோள் உணர்த்திற்று.

இ—ள்.: இடைநிலைமொழி — செய்யுளிடையிலே நின்றசொல், ஏனையீரிடத்து நடந்து — ஒழிந்த முதலிலும் இறுதியிலுஞ் சென்று, பொருளை

நண்ணுதறாப்பிசை – பொருளைக் கூடுவது தாப்பிசைப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண –
வண்ணாத்தல் செய்யா தளறு,

இதனுள், ஊன் என இடையிலே நின்ற சொல் ஊனுண்ணாமையுள்ளது என முதலிலும், ஊனுண்ண எனப் பின்னருஞ் சென்றடைந்தவாறு காண்க. பிறவுமன்ன.

உரை :– இடைநிலை மொழி – (செய்யுளின்) நடுவில் நிற்கிற மொழி, ஏனை ஈரிடத்தும் – ஒழிந்த முதலிலும் இறுதியிலும், நடந்து – சென்று, பொருளை நண்ணுதல் – பொருளைக் கூடுதல், தாப்பிசை – தாப்பிசைப் பொருள்கோளாம்.

குறிப்பு :– தாப்பிசை என்பதற்கு – ஊஞ்சல்போல் நடுவில் நின்று இருபக்கத்திலுஞ் செல்லுஞ் சொல் என்பது பொருள். (தாம்பு – ஊசல்)

உ–ம். "உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு."

இதில், 'ஊன்' என்ற நடுவில் நின்றசொல், 'ஊனுண்ணாமை' என முன்னும், 'ஊனுண்ண' எனப் பின்னும் சென்று கூடுதல் காண்க. இதனை "மத்திம தீபம்" என்பர் வடநூலார்.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– இடை நிலை மொழி – இடையிலே நிற்குமொழி, ஏனை ஈரிடத்தும் நடந்து பொருளை நண்ணுதல் – ஒழிந்த முதலினு மீற்றினுஞ் சென்று பொருளைக் கூடும் பொருள்கோள், தாப்பிசை – தாப்பிசைப் பொருள்கோளாம், எ–று.

தாப்பிசை யென்பதற்கு ஊசல்போல் இடை நின்று இரு மருங்கு செல்லுஞ் சொல்லென்பது பொருள். (தாம்பு – ஊசல். இசை – சொல்)

வ–று.:–

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணத்தால் செய்யா தளறு".

இதனுள், ஊன் என இடையிலே நின்ற மொழி, ஊனுண்ணாமையுள்ளது என முதலிலும், ஊனுண்ண எனப் பின்னருஞ் சென்று கூடுதல் காண்க.

## வ. குமாரசாமிப்புலவர்

இ–ள்.:– இடைநிலை மொழி – இடையிலே நிற்குமொழி, – ஏனை ஈரிடத்தும் நடந்து பொருளை நண்ணுதல் – ஒழிந்த முதலினு மீற்றினுஞ்சென்று பொருளைக் கூடும் பொருள்கோள், – தாப்பிசை – தாப்பிசைப் பொருள் கோளாம். எ–று.

தாப்பிசை என்பதற்குப் பொருள்: ஊசல்போல் இடைநின்று இருமருங்குஞ் செல்லுஞ் சொல்லென்பது. (தாம்பு – ஊசல், இசை – சொல்)

வ–று.:–

"உண்ணாமையுள்ள துயிர்நிலையூனுண்ண, அண்ணாத்தல் செய்யாதளறு." இதனுள், ஊன் என இடையிலே நின்றசொல் உண்ணாமையுள்ளது ஊன். என முதலிலும், ஊனுண்ண எனப் பின்னருஞ் சென்று கூடிப் பொருள் பயந்தமை காண்க.

"கண்ணுக்குப்புனை மணிப் பூண்கண்ணோட்ட மென்பதெல்லாங் கருணையன்றோ" இதனுள் கண்ணோட்டம் என இடையிலே நின்றசொல் கண்ணுக்குப் புனை மணிப்பூண் கண்ணோட்டம் என் முற்பாகத்தொடும், கண்ணோட்டமென்ப தெல்லாங் கருணையன்றோ எனப் பிற்பாகத்தொடுங் கூடிப் பொருள் பயந்தமை காண்க. ஒருபதம் முன்னும் பின்னுங்கூடிப் பொருள் பயக்கு மிதனை வடநூலார் காகாக்ஷிகோளக நியாயமென்பர்.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– இடை நிலை மொழி – (செய்யுளின்) நடுவில் நிற்கிற மொழி, ஏனை ஈரிடத்தும் – ஒழிந்த முதலிலும் இறுதியிலும், நடந்து – சென்று, பொருளை நண்ணுதல் – பொருளைக் கூடுவது, தாம்பு இசை – தாப்பிசைப் பொருள்கோளாம்; எ–று. இதனை, மத்திமதீபம் என்பர் வடநூலார்.

தாப்பிசை என்பதற்கு, ஊஞ்சற்கயிறுபோல நடுவில் நின்று இருபக்கத்திலும் செல்லும் சொல் என்பதுபொருள்; (தாம்பு – கயிறு.)

உ–ம்.:–

"உண்ணாமையுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு"

இதில், நடுவில் நின்ற 'ஊன்' என்ற சொல், ஊனுண்ணாமை என முன்னும், ஊனுண்ண எனப் பின்னும் சென்று கூடுதல் காண்க.

(இதன்பொருள்:– உயிர் நிலை – சில உயிர்கள் உடம்பிலே நிற்றல் (அல்லது உயிர் நற்கதியடையும் நிலைமை), ஊன் உண்ணாமை உள்ளது – மாமிச போசனஞ் செய்யாமை யென்கிற தருமத்திலே யுள்ளது; (ஆதலால்), ஊன் உண்ண – (அந்நிலை குலைய ஒருவன்) மாமிசத்தைப் புசிப்பானாயின், அளறு அண்ணாத்தல் செய்யாது – (அவனை உட்கொண்ட) நரகம், (பின்பு ஒருகாலும் அவனை வெளிவிடுதற்கு வாய் திறவாது எனக் காண்க.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள். இடை நிலை மொழி – இடையிலே நிற்கு மொழி, ஏனை ஈரிடத்தும் நடந்து – ஒழிந்த முதலினு மீற்றினுஞ் சென்று, பொருளை நண்ணுதல் – பொருளைக் கூடும் பொருள்கோள், தாப்பிசை – தாப்பிசைப் பொருள்கோளாம். எ–று.

தாப்பிசையென்பதற்கு ஊசல்போல் இடை நின்று இருமருங்குஞ் செல்லுஞ் சொல்லென்பது பொருள். (தாம்பு – ஊசல். இசை – சொல்.) இதனை மத்திம தீபம் என்பர் வடநூலார்.

(உ–ம்.) “உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு.”

இதனுள், ஊன் என இடையிலே நின்ற மொழி ஊனுண்ணாமையுள்ளது என் முதலிலும், ஊனுண்ண எனப் பின்னருஞ் சென்று கூடுதல் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**இடைநிலை மொழி** – நடுவிலுள்ள மொழி, **ஏனை ஈரிடத்தும்** – ஒழிந்த முதலிலும் ஈற்றிலும், **நடந்து** – சென்று, **பொருளை** – பொருளை, **நண்ணுதல்** – கூடும் பொருள்கோள், **தாம்பு இசை** – தாப்பிசைப் பொருள்கோளாம்.

ஊசல் வடம்போல் இடைநின்று இருமருங்குஞ் செல்லலால் இப் பெயர்பெற்றது. தாம்பு – தாப்பு என விகாரமாயிற்று.

**உதாரணம்**

‘உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊன் உண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு’.

இதில், ஊன் என இடையிலே நின்றமொழி, ஊன் உண்ணாமையுள்ளது என முதலிலும், ‘ஊன் உண்ண’ எனப் பின்னரும் செல்லல் காண்க.

## மோசசு பொன்னையா

செய்யுள் நடுவில் நிற்கும்மொழி, ஏனை முதல் இறுதி ஆகிய இடங்களில் சென்று பொருளைப் பொருந்துவது தாப்பிசைப் பொருள்கோளாம் எ–று.

தாம்பு எனற்பாலது வலித்து நின்றது. அணி நூலார் இப்பொருள்கோளை இடைநிலை விளக்கு என்பர். தாம்பு–ஊஞ்சல்; இசை–சொல். தாப்பிசை எனின் ஊஞ்சல்போல் இருமருங்கு செல்லும் சொல் என்பது பொருள் எனக் கொள்க.

எ–டு

உண்ணாமை யுள்ள துயர்நிலை யூனுண்ண

அண்ணாத்கல் செய்யா தளறு1

ஊன் என்ற சொல் முதல் இறுதி ஆகிய இடங்களில் சென்று பொருள் பொருந்தி நிற்பதைக் காண்க.

(65)

**416. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.**

**செய்யுள் இறுதி மொழி இடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே.**

seyyul̲ iūuṭi mol̲i itai muṭalin̲ um
eyṭiya porul̲kōl̲ al̲aimaūipāppu ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**The involved construction**

In the involved construction, the last word of a stanza is (grammatically) related to words in the beginning and middle.

## ஒப்புமைப் பகுதி

செய்யுள் இறுதி மொழிஇடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே.

(இ.வி.:367)

வளர்பொருள் கொளபின் மொழிமுன்னிடை சேறல்.........

(சுவாமி.:69:2)

## மயிலை நாதர்

எ–ன், அளைமறிபாப்புப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: செய்யுளீற்று நின்றமொழி இடையிலும் முதலிலும் சென்று பொருள்கொள்வது அளைமறிபாப்புப் பொருள்கோளாம்.

வ–று.:

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித்
 தளர்வார் தாமும்,

சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற்
 சுழல்வார் தாமு,

[1]மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
 முனிவார் தாமும்,

வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி
 முயலா தாரே"

(யா.வி.)

என வரும். (மூழ்ந்த – வளைந்த.)

## சங்கர நமச்சிவாயர்
## சிவஞானமுனிவர்

எ–னின், அளைமறிபாப்புப் பொருள்கோள் ஆமாறு உணர்–ற்று.

இ–ள்.:– செய்யுட்கண் ஈற்றில் நின்ற சொல் இடையினும் முதலினும் சென்ற பொருள்கோள் அளைமறிபாப்புப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:

"தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து
 தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
 நாற்கதியில் சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
 வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து
 நெறிமுன்னி முயலா தாரே"

எனவரும்.

---

பாட வேறுபாடு:–

1.மூழ்ந்து

***இருமருங்கினையும் இறுதியென அமையுமாதலின் வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதாரே என்னும் சொற்களை அம்மருங்கு வைத்துச் செய்யுளாக்கினும் இப்பொருள்கோளாம் என்க.***

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், அளைமறிபாப்புப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்.: செய்யு ளிறுதி மொழி - செய்யுள் ஈற்றினின்ற மொழிகள், இடை முதலினும் - இடையினும் முதலினும் சென்று, எய்திய பொருள்கோள் - வேண்டும் பொருள் கொள்வது, அளைமறி பாப்பே - அளைமறி பாப்புப் பொருள்கோளாம், எ-று.

உ-ம்:

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற்
சுழல்வார் தாமும் மூழ்ந்த வினைநலிய முன்செய்வினை
யென்றே முயல்வார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா
தாரே"

என வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, அளைமறிபாப்புப் பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ-ள்.: செய்யுள் - செய்யுளில், இறுதிமொழி - இறுதியிலுள்ள சொல், இடைமுதலினும் - இடையிலும் முதலிலும், எய்திய பொருள்கோள் - சென்ற பொருள்கோள், அளைமறிபாப்பு - அளைமறிபாப்பு பொருள்கோளாம், எ-று.

(புற்றிலே மறியும் பாம்புபோலுதலால் அப்பெயர் பெற்றது)

வ-று.:

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமு
மூழ்ந்தபிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார்தாமும்

வாழ்ந்த பொழுதினேவானெய்து

நெறிமுன்னி முயலாதாரே”

எனவரும், கடையடிச்சொற்கள் முதலிடைகளில் அப்படி செல்லல் காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அளைமறிபாப்புப்பொருள்கோளாவது யாது?

செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்

எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

(செய்யுள் இறுதி மொழி இடை முதலினும் எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே.)

இ–ள்.: செய்யுளில் இறுதியில் நின்றசொல் இடையிலும் முதலிலுஞ் சென்ற பொருள்கோள் அளைமறிபாப்புப்பொருள் கோளாம். எ–று.

அளையினுள்ளே பாம்புமண்டலட்டு வால்நுனியுங் தலையும் நடுவயிற்றையணைந்துபொருந்த மடங்கிக்கிடக்கும். இப்பொருள் கோள் அதுபோதலின் அளைமறிபாப்புப்பொருள்கோளெனப்பட்டது.

வ–று.:–

“தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்–சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார்தாமு–மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையெல்றே முனிவார் தாமும்–வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே” எனவரும். இதனுள், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார் முழ்ந்த பிணி நலிய முன் செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் எனத் தலைகீழாய் இடையிலு முதலிலுஞ் சென்று கூடுதல் காண்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே அளைமறிபாப்புப் பொருள் கோளுணர்த்திற்று.

இ–ள்.: செய்யுளிறுதிமொழி–செய்யுளின் இறுதியிலே நின்றசொல், இடை முதலிலும் – அதன் இடையிலும் முதலிலும், எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பு – சென்ற பொருள்கோள் அளைமறிபாப்புப் பொருள்கோளாம், எ–று.

அளை – புற்று, புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்பு போன்ற தெனக்காண்க.

**வ–று.:**

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித்
தளர்வார் தாமுஞ் – சூழ்ந்த வினையாக்கை சுடவிழிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமு – மூழ்ந்த பிணி நலிய
முன்செய்த வினையென்றே முனிவார் தாமும் –
வாழ்ந்த பொழுதினேவானெய்து
நெறிமுன்னிமுயலாதாரே"

என வரும். இதனுள், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார், மூழ்ந்த முனிவார், சூழ்ந்த சுழல்வார், தாழ்ந்த தளர்வார், எனத் தலைகீழா யிடையிலும் முதலிலுஞ் சென்றடைந்தவாறு காண்க, பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** செய்யுள் – செய்யுளில், இறுதி – ஈற்றில் நின்ற, மொழி – சொல், இடை – நடுவிலும், முதலிலும் –, எய்திய – சென்று இயைந்த, பொருள்கோள் – , அளைமறி பாப்பு – அளைமறிபாப்புப் பொருள்கோள்.

குறிப்பு :– புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்புபோல முன்பின்னாக அநுவயிக்கப்படுவதால், இப்பெயர் பெற்றது. (அளை – புற்று, மறிதல் – மடங்குதல்).

**உ–ம்:–**

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித்
தளர்வார் தாமும் – சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமும் – மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும் – வாழ்ந்த பொழுதினை
வானெய்து நெறிமுன்னி முயலாதாரே."

இதில், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார், மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் எனத் தலைகீழாய் இடையிலும் முதலிலுஞ் சென்று கூடுதல் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:** செய்யுள் இறுதி மொழி – செய்யுளில் இறுதியில் நின்ற சொல்,

இடை முதலிலும் எய்திய பொருள்கோள் - இடையிலும் முதலிலுஞ் சென்ற பொருள்கோள், அளைமறிபாப்பு - அளைமறிபாப்புப் பொருள்கோளாம், எ-று.

புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்பு போலுதலால், அப்பெயர் பெற்றது. (அளை-புற்று, மறிதல் - மடங்குதல்.)

வ-று.:

"தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமு
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்தபொழுதினே வானெய்து
நெறிமுன்னி முயலா தாரே."

என வரும். இதனுள், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார் மூழ்ந்த பிணி நலிய முன் செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் எனத் தலைகீழாய் இடையிலு முதலிலுஞ் சென்று கூடுதல் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ-ள்.:- செய்யுள் இறுதிமொழி - செய்யுளில் இறுதியில் நின்ற சொல், - இடை முதலினும் எய்திய பொருள்கோள் - இடையிலும் முதலிலும் சென்ற பொருள்கோள், - அளை மறி பாப்பு - அளை மறிபாப்புப் பொருள் கோளாம். எ-று.

புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்புபோலுதலால் அப்பெயர் பெற்றது. (அளை - புற்று, மறிதல் - மடங்குதல்)

வ-று.:-

"தாழ்ந்தவுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார்தாமும், சூழ்ந்த வினையாக்கை சுடவிழிந்து நாற்கதியிற் சுழல்வார்தாமு, மூழ்ந்த பிணிநலியமுன் செய்தவினையென்றே முனிவார் தாமும், வாழ்ந்தபொழுதினேவானெய்து நெறி முன்னி முயலாதாரே." என் வரும்.

இதனுள் வாழ்ந்தபொழுதினேவானெய்து நெறி முன்னிமுயலாதார், மூழ்ந்த பிணிநலிய முன் செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்தவினையாக்கை சுடவிழிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார். எனத் தலைகீழாய் இடையிலு முதலிலுஞ் சென்று கூடுதல் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** **செய்யுள்** – செய்யுளில், **இறுதி** – ஈற்றில் நின்ற, **மொழி** – சொல், **இடை** – நடுவிலும், **முதலினும்** (அதன்பின்பு) முதலிலும், **எய்திய** – சென்று இயைந்த, **பொருள்கோள் அளை மறி பாப்பு** – அளைமறிபாப்புப் பொருள்கோளாம்; எ–று.

புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்புபோல முன்பின்னாக அந்வயிக்கப்படுதலால், இப்பெயர் பெற்றது. (அளை–புற்று. மறிதல் – மடங்குதல்.) பாம்பு புற்றில் தலைவைத்து நுழையுமளவிலே தலை மேலாம்படி நிலைமாறுதல் இயல்பு; அவ்வாறே, செய்யுளின் இறுதியிலிருந்து சொற்களை யெடுத்துக் கூட்டிப் பொருள்கொள்வது, இதன் இலக்கணம்.

**உ–ம்.:–**

"சூழ்ந்த வினை யாக்கை சுடவிளிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமும்
வாழ்ந்த பொழுதினேவா னெய்து
நெறிமுன்னி முயலாதரே"

இதில், வாழ்ந்தபொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார், தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார், மூழ்ந்த பிணிநலிய முன் செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார் எனத் தலைகீழாய் இடையிலும் முதலிலும் சென்று கூடுதல் காண்க.

**இதன்பொருள்: –**

வாழ்ந்த பொழுதினே – (தாம்வலிமையோடு) உயிர் வாழ்ந்திருந்த காலத்திலே, வான் எய்தும் நெறி முன்னி முயலாதார்–(பின்பு) முத்தியைப்பெறும் வழியைக் குறித்து முயற்சி செய்யாதவர்கள், தாழ்ந்த உணர்வினர் ஆய் தாள் உடைந்து தண்டு ஊன்றி தளர்வார்தாமும் – (முதுமையில்) அறிவு மழுங்கியவர்களாய்க் கால்வலிமை குன்றித் தடியை ஆதாரமாக ஊன்றிக்கொண்டு தளர்பவர்களும், மூழ்ந்த பிணி நலிய முன் செய்த வினை என்றே முனிவார்தாமும் – (உடம்பில்) அழுந்திய நோய்கள் வருத்துதலால் முன்பு செய்த கருமத்தின் பயன் இதுவென்று வெறுப்புக் கொள்பவர்களும், சூழ்ந்த வினை யாக்கை சுட விளிந்து நால் கதியில் சுழல்வார்தாமும் – (தம் உயிரை) விடாது சூழ்ந்த கருமம் உடம்பை யொழித்தலால் இறந்து (மக்கட்கதி தேவகதி நரககதி விலங்குகதி யென்னும்) நால்வகைக் கதிகளுள்ளும், மாறிமாறிப்பிறந்து அலைபவர்களுமாவர் எனக் காண்க.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: செய்யுள் இறுதி மொழி – செய்யுளில் இறுதியில் நின்ற சொல், இடை முதலிலும் எய்திய பொருள்கோள் – இடையிலும் முதலிலுஞ் சென்ற பொருள்கோள், அளைமறியாப்பு – அளைமறியாப்புப் பொருள்கோளாம். எ–று.

புற்றிலே தலை வைத்து மடங்கும் பாம்பு போலுதலால், அப்பெயர் பெற்றது. (அளை–புற்று. மறிதல் – மடங்குதல்).

(உ–ம்)

"தாழ்நத வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டுடூன்றித்
தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற்
சுழல்வார் தாமு
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி
முயலா தாரே."

இதனுள், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார் மூழ்ந்த பிணி நலிய முன் செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் எனத் தலை கீழாய் இடையிலு முதலிலுஞ்சென்று கூடுதல் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

செய்யுள் – செய்யுளில், இறுதி மொழி – இறுதியிலுள்ளசொல், இடை முதலிலும் – இடையிலும் முதலிலும், எய்திய பொருள்கோள்– சென்ற பொருள்கோள், அளைமறிபாப்பு – அளைமறிபாப்புப் பொருள்கோளாம்.

புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்பு போலுதலால் அப்பெயர் பெற்றது. (அளை • புற்று. மறிதல்• மடங்குதல், பாம்பு பாப்பு எனத் திரிந்தது).

உதாரணம்

'தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித்
தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற்
சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி
முயலா தாரே'

இதில், 'வாழ்ந்த பொழுதினே வானெய் நெறி முன்னி முயலாதார், மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார்' எனத் தலை கீழாய் இடையிலும் முதலிலும் சென்று கூடுதல் காண்க.

## மோசசு பொன்னையா

செய்யுள் இறுதிக்கண் நின்ற சொல், நடுவிலும், முதலிலும் சென்று இயைய அமையும் பொருள்கோள் அளை மறிபாப்புப் பொருள்கோளாம், எ–று.

எ–டு.:–

தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூண்றித் தளர்வார் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிழிந்து
நாற்கதியிற் சுழல்வார் தாமு
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து
நெறிமுன்னி முயலா தாரே.

இதன்கண் 'வாழ்ந்தபொழுதனே வானெய்து நெறிமுன்னி முயலாதார்' என்னும் இறுதிச்சொல்முதலும், இடையுஞ் சென்று மறிந்துபொருள் கோடலின், அளைமறிபாப்புப் பொருள்கோள் ஆயிற்று. அளை–புற்று. மறிதல்–மடங்குதல்.

பாம்பு புற்றில் தலைவைத்து நுழையும் அளவிலே தலைமேலாக நிலை மாறுவதே போல், செய்யுளின் இறுதியில் நிற்கும் சொல் தலைமேலாக நிலைமாறிப் பொருள் பொருந்தி நிற்பதைக் காண்க.

(66)

**417. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.**

யாப்பு அடி பலவினும் கோப்பு உடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டுகூட்டே.

yāppu ati palavin um kōppu utai moḷikaḷ ai
ēūpuḷi isaippaṭu konṭukūttu ē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**The Promiscuous construction**

The 'Promiscuous' construction is that in which in the meaning may be obtained only by re-arranging in their natural order the various words that are strung together in the several lines of a stanza.

## ஒப்புமைப் பகுதி

யாப்படி பலவினும் கோப்புடை மொழிகளை
ஏற்புழி இயைப்பது கொண்டு கூட்டே

(இ.வி.:368)

......... ஓர் அடியிற் பொருள்நேர்
செய்மொழி மாற்றுதல்.......

(சுவாமி.:69:3)

## மயிலை நாதர்

எ – ன், கொண்டுகூட்டுப் பொருள் கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: செய்யுளது பல அடிகளுள்ளும் நின்றமொழிகளைப் பொருளேற்குமிடத்தே ஏற்ப வருவித்துப் பொருள்கொள்வது கொண்டுகூட்டுப் பொருள்கோளாவது, எ–று.

வ—று.:—

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலி னெடிய குரங்கு"

(யா.வி.)

இஃது, ஆலத்துமேல குரங்கு, குளத்துள குவளையென ஈரடியுட் பெயரையும் வினையையும் வேண்டுழிக் கூட்டிக் கொண்டமையான் ஈரடிக் கொண்டுகூட்டு; இதனை மொழிமாற்றென்பாரும், ஈரடி மொழிமாற் றென்பாருமுளர். அவ்வாறு கொள்ளின், ஏனைப்பல வடிகளுள்வரினும் பலபெயர் கொடுக்க வேண்டுமென்க.

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி அஞ்சனத்
தன்னபசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்"

(யா.வி)

இஃது, அஞ்சனத்தன்ன பைங்கூந்தல் எனவும், தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட வெண் கோழி முட்டை யுடைத்தன்ன பசலை எனவும் பலவடியிற் சொற்களையுங் கூட்டிக் கொண்டமையால், பலவடிக் கொண்டுகூட்டு.

## சங்கர நமச்சிவாயர்

எ — னின், கொண்டுகூட்டுப் பொருள்கோள் ஆமாறு உணர்—ற்று.

இ—ள்.: செய்யுளடி பலவினும் இயல்பாகிய யாற்றுநீர்ப் பொருளுக்கு ஏலாது கோத்துக்கிடந்த மொழிகளை எடுத்து அப்பொருளுக்கு ஏற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டு கூட்டுப் பொருள்கோளாம், எ—று.

இயல்பாகிய யாற்றுநீர்ப்பொருள்கோளிற் பிறழ்ந்து வருவனவற்றை மொழிமாற்று முதலியவாகப் பகுத்தமையின் அப்பொருளுக்கேற்றவிடத்து என்றாம்.

வ— று.:—

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்"

எனவரும். இதனுள், வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத் தன்ன

பைங்கூந்தலை உடையாள் மாமேனிமேல் தெங்கங்காய் போலத்திரண்டு உருண்ட கோழி வெண்முட்டை உடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கொண்டுகூட்டுக.

'உருவக உவமையில் திணைசினை முதல்கள்' (410) என்பதனை முதல்சினை என முறைநிறீஇப் பொருள்கொள்வதும் அது.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், கொண்டுகூட்டுப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்.:– யாப்படி பலவினும் – செய்யுமாறு பல அடிகளுள்ளும், கோப்புடை மொழிகளை – பொருந்தி நின்ற ஏற்புடைய மொழிகளை, ஏற்புழி யியைப்பது – பொருள் ஒக்குமிடத்து ஏற்ப வருவித்துப் பொருள் கொள்வது, கொண்டு கூட்டே – கொண்டு கூட்டுப் பொருள்கோளாம், எ–று.

உ–ம்.:–

ஆலத்தின் மேற் குவளை வாலி னெடிய குரங்கு

இது ஆலத்தின்மேற் குரங்கு, குளத்துட் குவளை என ஈரடியுட் பெயரையும் வினையையும் வேண்டுழிக் கொண்டமையால் ஈரடிக் கொண்டுகூட்டு. இதனை மொழிமாற்று என்பாரும் ஈரடி மொழிமாற்று என்பாரும் உளர். அவ்வாறு கொள்ளின் ஏனைப் பல அடிகளுள் வரினும் பல பெயர் கொடுக்க வேண்டுமென மறுக்க.

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்"

இவை அஞ்சனத்தன்ன பைங்கூந்தல் எனவும் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி பசலை எனவும் பல அடியிற் சொற்களையுங் கூட்டிக் கொண்டமையால் பலவடிக் கொண்டுகூட்டாடப் பொருள்கோள் என்க.

"ஆரிய மன்னர் பறைபோ லெழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை
காரி விறன்முள்ளூர் வேங்கை
பைதானாணுந் தோளாய்
நிறனுள்ளூ ருள்ள தலர்"

பைதல் நாணுந் தோள் எனவும் நிறம் வேங்கை வீ எனவும் ஆரிய மன்னர் பறைபோல் எழுந்தியம்பும் உள்ளூர் எனவும் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டமையால் இதுவும் பலவடிக் கொண்டு கூட்டாம் என்க.

## விசாகப் பெருமாளையர்

இது, கொண்டு கூட்டுப்பொருள் கோளாமாறு உணர்த்துகின்றது.

இ–ள்.: யாப்படி – செய்யுளடிகள், பலவினும் – பலவற்றினும், கோப்புடை– கோக்கப்படுதலையுடைய, மொழிகளை–சொற்களை, ஏற்புழி – எடுத்த பொருளுக்கேற்றவிடத்து, இசைப்பது–கூட்டும் பொருள்கோள், கொண்டுகூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:–

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்

வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி
அஞ்சனத்தன்ன பசலை தணிவாமே

வங்கத்துச் சென்றார் வரின்"

எனவரும் இதனுள் வங்கத்துச் சென்றார்வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாண் மாமேனிமேற் றெங்கங்காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டையுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கொண்டு கூட்டுக.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

கொண்டுகூட்டுப்பொருள்கோளாவது யாது?

யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை

ஏற்புரி யிசைப்பது கொண்டு கூட்டே.

(யாப்பு அடி பலவினும் கோப்பு உடை மொழிகளை ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே.)

இ–ள்.: செய்யுளடிகள் பலவற்றினுங் கோக்கப்படுதலையுடைய சொற்களை எடுத்துப் பொருளுக்கேற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டுகூட்டுப் பொருள்கோளாம். எ–று.

வ–று.:–

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்–
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி–யஞ்சனத்தன்ன
பசலை தணிவாமே–வங்கத்துச் சென்றார் வரின்" எனவரும்.
இதனுள், வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சன த்தன்ன
பைங்கூந்தலையுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய்
போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டை யுடைத்தன்ன
பசலை தணிவாம் எனக் கொண்டுகூட்டுக.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே கொண்டு கூட்டுப் பொருள்கோளுணர்த்திற்று.

இ–ள்.: யாப்படி பலவினும் கோப்புடை மொழிகளை–செய்யுள் அடிபலவற்றினுங் கோத்துக் கிடந்த சொற்களை, ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டு –எடுத்துப் பொருளுக்கு ஏற்ற இடத்தில் இசைத்துக்கொள்வது கொண்டு கூட்டுப் பொருள்கோளாம், எ–று.

பொருளுக்கேற்ற இடமாவது – சிதர்ந்து இடந்த சொற்களை யெடுத்து வரிசைப்பட வைக்க வேண்டுதலால் யாற்றுநீர்ப் பொருள்கோளுக்குப் பொருந்துமிட மெனக் காண்க.

வ–று.:–

தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங் கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத் தன்னமாமேனி யஞ்சனத்
தன்ன பசலை தணிவாமே வங்கத்துச் சென்றார் வரின்

எனவரும். இதனுள்–சிதர்ந்து கிடந்த சொற்களை வங்கத்துச் சென்றார் வரின் – அஞ்சனத்தன்ன பைக்கூந்தலை யுடையவளது மாமேனியின் மேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கொண்டு கூட்டி யாற்றொழுக்குப் போலாக்குக.

ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும் பாரி பறம்பின் மேற் றண்ணுமை – காரி விறன்முள்ளூர் வேங்கைவீ தானாணுந் தோளா – ணிறனுள்ளுருள்ள தலர் என்பதுமது. இதிற் சிதர்ந்து கிடந்த சொற்களை பாரிபறம்பின்மேற்றண்ணுமைதானாணுந் தோளாள் நிறன் விறன் முள்ளூர்வேங்கைவீ உள்ளுருள்ளதாகிய அலர் ஆரியமன்னர் பறையினெழுந்தியம்பும், எனக் கூட்டிப் பொருளுணர்க. இனி இயல்பாகிய, யாற்றுநீர்ப் பொருள்கோளிற் பிறழ்ந்து வருவனவற்றை மொழிமாற்று முதலியவாகப் பகுத்து அவற்றுள் அடங்காது வேறுபட்டு வருவன வெல்லாங் கொண்டு கூட்டுப்பொருள்கோளெனத் துணிதற்பொருட்டு இதனை யீற்றின்கண் வைத்தமையால், 'உருவக வுமையிற் றிணைசினை முதல்கள் என்னுஞ் சூத்திரத்தில் நின்ற சினை முதலென்றதை முதல்சினை யென முறையாக வைத்துப் பொருள்கொள்வதும் பிறவுங் கொண்டுகூட்டெனக் காண்க. இனி இதனை மொழிமாற்றென்றலே ஆசிரியர் கருத்தென்பது முன்னர்க் காட்டினாம்.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ஏங்காசாரியர்

உரை :- யாப்பு அடி பலவினும் – செய்யுளின் அடிகள் பலவற்றினும், கோப்பு உடை – சேர்க்கப்பட்டுக் கிடக்கின்ற, மொழிகளை – சொற்களை, ஏற்புழி – பொருளுக்கு ஏற்றவிடத்தில், இசைப்பது – எடுத்துக் கூட்டிக் கொள்வது, கொண்டுகூட்டு – கொண்டு கூட்டுப் பொருள்கோளாம்.

குறிப்பு :- சிதர்ந்து கிடந்த சொற்களை யெடுத்து வரிசைப்பட அநுவயித்துப் பொருள் கொள்ளுவது கொண்டுகூட்டுப் பொருள்கோள். இக் கொண்டு கூட்டும் மொழிமாற்றும் சொற்கள் முன்பின்னாக மாற்றப்படுவதால் தம்முளொக்குமாயினும், ஓரடியிலுள்ள சொற்களை முன்பின்னாக மாற்றுவது – 'மொழிமாற்று' எனவும், பல அடிகளிலும் நின்ற சொற்களை ஏற்றபடி கொண்டுகூட்டுவது – 'கொண்டுகூட்டு' எனவும் வேறுபாடு அறிக.

உ–ம். "தெங்கங்காய் போல்த் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத் துச் சென்றார் வரின்".

இதில், 'வங்கத்துச் சென்றார் வரின்' அஞ்சனத்தன்ன பைங்கூந் தலையுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டையுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கூட்டுக.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:- யாப்பு அடி பலவினும் கோப்பு உடைமொழிகளை – செய்யுளடிகள் பலவற்றினுங் கோக்கப்படுதலையுடைய சொற்களை, ஏற்புழி இசைப்பது – எடுத்துப்பொருளுக்கேற்ற விடத்துக் கூட்டும் பொருள்கோள், கொண்டுகூட்டு – கொண்டுகூட்டுப் பொருள் கோளாம், எ–று.

வ–று.:-

"தொங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டையுடைத்தன்னமாமேனி
யஞ்சனத்தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்"

என வரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை யுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கொண்டு கூட்டுக.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– யாப்பு அடி பலவினும் கோப்பு உடை மொழிகளை – செய்யுளடிகள் பலவற்றினுங் கோக்கப்படுதலையுடைய சொற்களை, – ஏற்புழி இசைப்பது – எடுத்துப் பொருளுக்கேற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் – கொண்டு கூட்டு – கொண்டு கூட்டுப் பொருள்கோளாம். எ–று.

வ–று.:–

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல், வெண்கோழிமுட்டையுடைத்தன்னமாமேனி, யஞ்சனத்தன்னபசலை தணிவாமே, வங்கத்துச் சென்றார்வரின்" எனவரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின், அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டையுடைத்தன்ன பசலை தணிவாம் எனக் கொண்டு கூட்டுக. (பசலை – தேமல்).

"ஆரியமன்னர் பறையினெழுந்தியம்பும், பாரிபறம்பின் மேற்றண்ணுமை – காரி, விறன் முள்ளூர் வேங்கை வீதானாணுந்தோளாள், நிறனுள்ளூருள்ளதலர்." என்பதுமது. இதிற் சிதர்ந்து கிடந்த சொற்களை பாரிபறம்பின் மேற்றண்ணுமைதானாணுந்தோளாள், நிறன்விறன்முள்ளூர் வேங்கைவீ, உள்ளூருள்ளதாகிய அலர் ஆரியமன்னர் பறையினெழுந்தியம்பும் எனக் கூட்டிப் பொருளுணர்க. (பறம்பு – ஒருமலை. அலர் – பழிப்பு மொழி.)

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– யாப்பு அடி பலவினும் – செய்யுளின் அடிகள் பலவற்றிலும், கோப்பு உடை – கோக்கப்பட்டுக் கிடக்கின்ற, மொழிகளை – சொற்களை, ஏற்பு உழி – (பொருளுக்கு) ஏற்ற இடத்தில், இசைப்பது – எடுத்துக்கொண்டு கூட்டுவது, கொண்டுகூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளாம்; எ–று.

சிதர்ந்து கிடந்த சொற்களை எடுத்து வரிசைப்பட அந்வயித்துப் பொருள் கொள்வது, கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

மொழிமாற்றுப் பொருள்கோளுக்கும், கொண்டு கூட்டுப்பொருள் கோளுக்கும் வேறுபாடு:– இவ்விரண்டும் சொற்கள் முன் பின்னாக மாற்றப்படுதலால் ஒப்புமையுடையன வாயினும் ஓரடியில் உள்ள சொற்களை முன் பின்னாக மாற்றுவது – மொழிமாற்றுப் பொருள்கோள் என்றும், பல

அடிகளிலும் நின்ற சொற்களை ஏற்றபடி கொண்டு கூட்டுவது – கொண்டுகூட்டுப் பொருள்கோள் என்றும் அறிக.

உ–ம்.:

"தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல் வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே வங்கத்துச் சென்றார் வரின்"

இதில், வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை யுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாமே எனக் கொண்டு கூட்டுக.

(இதன்பொருள்:– வங்கத்து சென்றார் வரின் – (பொருள்தேடும் பொருட்டு) மரக்கலத்திலேறிச் சென்ற தலைவர் வந்தால், அஞ்சனத்து அன்ன பைங்கூந்தல் – மையைப் போன்ற கரிய கூந்தலையுடைய இத் தலைவியினது, மாமேனி – அழகிய மேனியிற் காணப்படுகின்ற, தெங்கங்காய்போல திரண்டு உருண்ட வெண் கோழிமுட்டை உடைத்து அன்ன பசலை – தேங்காய்போலத் திரண்டு உருண்ட வெண்மையான கோழிமுட்டையை யுடைத்தாற் போன்ற பசலை நிறம், தணிவாம் – நீங்கப்பெறுவோம் எனக் காண்க. பசலை – காமத்தாலுண்டாகும் நிறவேறுபாடு. தணிவு ஆம் எனப்பிரித்து, நீங்கிவிடுமென்று கொள்ளினும் அமையும். இது, தோழி வார்த்தை.)

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.: யாப்பு அடி பலவினும் – செய்யுளடிகள் பலவற்றினும், கோப்பு உடை மொழிகளை – கோக்கப்படுதலையுடைய சொற்களை, ஏற்புழி – (எடுத்துப் பொருளுக்கு) ஏற்ற விடத்து, இசைப்பது – கூட்டுவது, கொண்டு கூட்டு – கொண்டுகூட்டுப் பொருள்கோளாம். எ–று.

(உ–ம்.)

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
யஞ்சனத தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்."

இதனுள், வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை யுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழிவெண் முட்டை யுடைத்தன்ன

பசலை தணிவாம் எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளக்கிடத்தல் காண்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) யாப்பு அடி பலவினும் – செய்யுளடிகள் பலவற்றினும், கோப்பு உடை மொழிகளை – கோக்கப்படுதலையுடைய சொற்களை, ஏற்புழி இசைப்பது – (எடுத்த பொருளுக்கு) ஏற்ற விடத்துக் கூட்டும் பொருள்கோள், கொண்டு கூட்டு – கொண்டு கூட்டுப் பொருள்கோளாம்.

(பொ–ரை.) செய்யுளடிகள் பலவற்றினும் கோக்கப்படுதலையுடைய சொற்களை (எடுத்த பொருளுக்கு) ஏற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள் கொண்டு கூட்டுப் பொருள்கோளாம்.

(உ–ம்.)

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்த வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி யஞ்சனத் தன்ன பசலை தணிவாமே வங்கத்துச் சென்றார் வரின்."

இதனுள் 'வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தல் மாமேனி தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழிவெண் முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம்' எனக் கொண்டு கூட்டுக.

## கா. நமச்சிவாய முதலியார்

யாப்பு அடி – செய்யுளடிகள், பலவினும் – பலவற்றினும், கோப்பு உடை – கோக்கப்படுதலையுடைய, மொழிகளை – சொற்களை, ஏற்புழி – (எடுத்த பொருளுக்கு) ஏற்ற விடத்து, இசைப்பது – கூட்டும் பொருள்கோள், கொண்டு கூட்டு– கொண்டு கூட்டுப் பொருள்கோளாம்.

உதாரணம்

'தொங்கங்காய் போலத் திரண்டுருண்ட பங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்'

இதனுள், 'வங்கத்துச்சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாள் மாமேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டு ருண்ட கோழிவெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம்' எனக் கொண்டு கூட்டுக.

கொண்டு கூட்டுப் பொருள்கோளாவது, பாட்டின் பல

அடிகளிலும் சொற்களை ஏற்றவாறு கூட்டுதலாம். மொழி மாற்றுப் பொருள் கோளுக்கும் இதற்கும் வேறுபாடு அறிக.

## மோசசு பொன்னையா

செய்யுள் அடிகள் பலவற்றிலும் கோக்கப்பட்டுக் கிடக்கின்ற சொற்களைப் பொருளுக்கு ஏற்ப ஏற்ற இடத்தில் எடுத்துக் கொண்டு கூட்டுவது, கொண்டு கூட்டுப்பொருள் கோளாம் எ–று.

இது பல அடிகளின் பொருளை ஒருசேரக் காணுங்காலே கொள்ளப்படும் எனக் கொள்க. இதனையே தொல்காப்பியர்,

**அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்**
**இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்**
**மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்,**

எனச் செய்புளியலில் மாட்டென்னும் பெயரால் விளக்கிப் போந்தார் என்பதை ஒப்பிட்டுக் காண்க.

எ–டு.

**தேங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்**
**வெண்கோழி முட்டை யுடைந்தன்ன மாமேனி**
**அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே**
**வங்கத்துச் சென்றார் வரின்,**

இதண்கண் 'அஞ்சனத் தன்ன பைங்கூந்தல்' எனவும், 'தேங்காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டையுடைந்தன்ன பசலை' எனவும் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் காண்க.

(67)

**418. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்**
**யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை**
**மாட்சியு மாறா வடியவு மடிமறி.**

ஏற்புழி எடுத்து உடன் கூட்டு உறும் அடியவும்
யாப்பு ஈறு இடை முதல் ஆக்கினும் பொருள் இசை
மாட்சியும் மாறா அடியவும் அடிமறி.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### The Variable Construction

Variable construction are those verses whose fires may be transposed only so as not to injure the sense or those in which the order of the lines maybe varies at pleasure without injury to the meaning or metre or (even) both.

## ஒப்புமைப் பகுதி

அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே

(தொல்.சொல்.:407)

பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இருசீர் எருத்துவயின் திரிபும்
தோற்றமும் வரையார் அடிமறி யான

(தொல்.சொல்.:408)

அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே

(இ.வி.:369)

..................அடிகள்
மாறுகினும் பொருள் ஒத்தல்..........

(சுவாமி.:69:2)

## மயிலை நாதர்

எ-ன், அடிமறிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்.:- பொருளுக்கு ஏற்புடைய விடத்திலே எடுத்துக் கொண்டு வந்து கூட்டி யுரைத்தற்குப் பொருந்தும் அடியவும், வேண்டின வடியைப் பாவிற்கு முதல் இடை ஈறாகத் தொடுத்துரைத்தாலும் தம் ஓசையும் பொருளும் தப்பா அழகையுடைய அடியவும் அடிமறிமாற்றுப் பொருள்கோளாவது, எ-று.

வ-று.:-

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்"

(நாலடி. 93),

"[1]அரிதவித் தாசின் றுணர்ந்தவன் பாதம்
விரிகடல் சூழ்ந்த வியன்கண்மாஞாலத்
துரியதனிற் கண்டுணர்ந்தா ரோக்கமே போலப்
பெரியத னாவி பெரிது"

(பழ. 1)

என வரும். அடியாக வெடுத்துக் கூட்டிப் பொருள்கோடலின், இவை கொண்டு கூட்டுப்பொருள்கோளில் அடங்காவென்க.

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
யேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழி யான்வாழு மாறே"

(யா.வி.)

இதனுள், வேண்டியதோரடியை முதல் இடை ஈறாக உச்சரித்து அடிமறியாதல் காண்க. இஃது ஏனைப்பாக்களினும் வருமாதலால், அடிமறி மண்டிலவாசிரியத்துள் அடங்காதென்க.

அஃதேல், பாட்டிற்குரிய பொருள்கோள்களை ஈண்டுச் சொல்லவேண்டிய தென்னையோ வெனின், அஃதே! நன்று சொன்னாய், மேல், ஒருமொழி, தொடர்மொழி, பொதுமொழி யென்று சொற்கூறு செய்து அவையாமாறு சொன்னாரன்றே; அவற்றுள், தொடர்மொழி அடிமறிமாற் றொழித்த ஏனை ஏழுபொருள்கோளும்படத் தொடர்வனவுளவாகலின், ஈண்டு வைத்தாரென்க. அஃதேற் பெரும்பாலும் யாப்பிற்கே உரிமையுடைமையின் ஆண்டே வைக்கற்பால வெனின், முன்னம் சொல்லறிந்து யாப்பறிய வேண்டுதலிற் சொல் அறிவுழிவைக்க வேண்டுமென்க.

அவை வருமாறு:– பாவஞ் செய்தான் நரகம் புகும், புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகும், தவஞ் செய்தான் வீடெய்தும்; – இவை யாற்றுநீர்ப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

அவர் தந்த சோறும் கூறையும் உண்டு உடுத்திருந்தோம்; இவளும் இவனும் உமையும் உருத்திரனும்; – இவை நிரனிறைப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

---

பாட வேறுபாடு:–

1. அரிறவிர்த்து

தந்தையைக் கண்டு தலையின் வணங்கினான்; – இது பூட்டுவிற் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

நன்மக்களுள்ளும் வீடு பேற்றுலகத்துள்ளுஞ் சென்று இன்பமெய்துவர் அறத்தாற் பாவத்தாற் றீய மானிடருள்ளும் விலங்கினுள்ளும் நரகத்துள்ளும் சென்று துன்பமெய்துவர்;– இது தாப்பிசைப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மெழி. செல்வமும் சிறப்பும் [1]கல்வியும் மீக்கூற்றமும் வலியும் வனப்பும் ஆற்றலும் புண்ணியத்தா னாம்; – இஃது அளைமறிபாப்புப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

மொழிமாற்றுப் பொருள்கோளும் கொண்டுகூட்டுப் பொருள்கோளும்படத் தொடர்ந்த தொடர்மொழி வந்த வழிக் கண்டுகொள்க. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், அடிமறிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு உணர்–ற்று.

இ–ள்.:– பொருளுக்கு ஏற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியினை யுடையவும், யாதானும் ஓரடியை எடுத்து அச் செய்யுட்கண் முதல் இடை ஈறுகளின் யாதானும் ஒரிடத்துக் கூட்டினும் பொருளோடு ஓசை மாட்சியும் ஓசையொழியப் பொருள் மாட்சியும் வேறுபடாத அடியினை யுடையவுமாகிய பொருள்கோள் அடிமறிமாற்றுப் பொருள்கோளாம், எ–று.

மாட்சி – நெறிப்பட்டொழுகுதல்.

ஏற்புழியெடுத்துக் கூட்டுதல் இருவகை அடிமறிமாற்றிற்கும் பொருந்துமாயினும் அவ்வடிகள் மாற்றுதற்கு அமைந்து நீங்கும், இவ்வடிகள் நீங்கா என்பார், 'உடன்' என்றும், ஓசை ஒழியப் பொருள்மாட்சி மாத்திரையும் மாறா அடியவும் என்பார், 'பொருளிசைமாட்சியும்' என உம்மை தந்தும் கூறினார்.

வ–று.:–

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார்
கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்"

என்பதனுள் கொடுத்துத் தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும், விடுக்கும் வினையுலந்தக்கால் மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம், இஃது

பாட வேறுபாடு:–

1.கல்வியுந் தேற்றமும்

அறியார் நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார் என அடிகளை ஏற்புழி எடுத்துக் கூட்டுக.

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
ஏறா மென்தோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே"

என்பதனுள் யாதானும் ஓரடியை யெடுத்து யாதானும் ஓரிடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலும் குற்றம் விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலும் குற்றம் சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம் கொலைப்பாலும் குற்றமே யாம்"

என்பதனுள் ஈற்றடி ஒழிந்த மூன்றடியுள் யாதானும் ஒன்றை எடுத்து யாதானும் ஓரிடத்துக் கூட்டி உச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமையும், ஈற்றடியை எடுத்து யாதானும் ஓரிடத்துக் கூட்டி உச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையும் காண்க.

செய்யுளடி பலவினையும் தொகுத்துக் கூறாது மூன்றும் ஒன்றுமாகப் பிரித்தது என்னை யெனின்:– எண் வகைப்பட்ட பொருள்கோளும் அவற்றின் விகற்பங்களுமாய பொருள் கோள்களுள் ஒன்று ஒருசெய்யுள் முழுவதூஉம் அமைந்து கிடக்க வேண்டும் என்னும் யாப்புறவின்றி ஒன்றும் பலவும் அமைந்து கிடத்தலின் என்க. அவ்வாறு அமைந்து கிடத்தல் அவ்வப் பொருள்கோட்குக் காட்டிய செய்யுட்கண்ணும் பிற செய்யுட்கண்ணும் கண்டு கொள்க. அடிமறித்தல் அன்றி மாற்றுதல் ஏற்புழியெடுத்துடன் கூட்டுறும் அடியவும் என்றதற்கு இன்றாம்; அங்ஙனமாக அதனையும் அடிமறிமாற்று என்றது என்னையெனின்:– மறித்தற்குரிய கொண்டுகூட்டோடும் மறித்தற்கும் மாற்றுதற்கும் உரிய அடிமறிமாற்றோடும் சார அதனை முதற்கண் கூறி, அடியாக மறித்தலுடைமையின் அடிமறிமாற்றின் பாற்படுத்து, சில உறுப்புக் குறைந்தாரையும் மக்கள் என்றாற் போல, அதற்கும் அடிமறிமாற்று எனப் பெயர் தந்து கூறினார் என்க.

செய்யுட்கு உரிய பொருள்கோளை ஈண்டுக் கூறியது என்னையெனின்:– செய்யுட்குத் தொடர் என்னும் காரணக்குறி போந்தது மொழி தொடர்ந்ததால் அன்றே அங்ஙனமாதலின், இதுவும் தொடர்மொழியிலக்கணமே யாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், அடிமறிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு கூறுகின்றது.

இ–ள்.:– ஏற்புழி யெடுத்துடன் – பொருளுக்கு ஏற்புடைய இடத்திலே எடுத்துக்கொண்டு வந்து, கூட்டுறு மடியவும் – கூட்டி யுரைத்தற்குப் பொருந்தும் அடியவும், யாப்பீ றிடைமுத லாக்கினும் – வேண்டின அடியைப் பாவிற்கு முதல்

இடை ஈறாகத் தொகுத்துரைத்தாலும், பொருளிசை மாட்சியு மாறா வடியவும் – தம் ஓசையும் பொருளும் தப்பா அழகையுடைய அடியவும், அடிமறி – அடிமறிமாற்றுப் பொருள்கோளாம், எ–று.

உ–ம்.:–

இந்நூலார்க்கு இதுவும் கருத்தன்று. அடிமறிமாற்றன்றி மொழிமாற்று ஆகாமையால்.

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் கொடுத்துத்தான்
றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்"

(நாலடி. 93)

"அரிதவித் தாசின் றுணர்ந்தவன் பாதம் விரிகடல்
சூழ்ந்த வியன்கண்மா ஞாலத் துரிதனிற் கண்டுணர்ந்தா
ரோக்கமே போலப் பெரியத னாவி பெரிது"

(பழமொழி – கடவுள்)

என வரும். இவை அடியாக எடுத்துக் கூட்டிப் பொருள் கோடலிற் கொண்டுகூட்டுப் பொருள்கோளில் அடங்கா என்க.

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
யேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே"

இதனை வேண்டியதோர் அடியை முதல் இடை ஈறாக உச்சரித்து அடிமறியாதல் காண்க. இஃது ஏனை யாப்புகளினும் வருமாதலால் அடிமறிமண்டில ஆசிரியத்துள் அடங்கா என்க.

அஃதேல் யாப்புக்குரிய பொருள்கோள்களை ஈண்டுச் சொல்ல வேண்டியது என்னையோ வெனின், ஒரு மொழி, தொடர்மொழி, பொது மொழி என்று சொற்கூறு செய்து அவை ஆமாறு சொன்னாரென்க. அவற்றுள் தொடர்மொழி அடிமறிமாற்று ஒழிந்த ஏழு பொருள்கோளும்படத் தொடர்வனவாம்.

அவை, 'பாவஞ் செய்தான் நரகம் புகும்', 'புண்ணியஞ் செய்தான் சுவர்க்கம் புகும்' என இவை யாற்றுநீர்ப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

'தந்தையைக் கண்டு தலையினா னிலமுறத் தொழுது வணங்கினான்'. இது பூட்டுவிற் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

'நன்மக்களுள்ளும் விலங்கினுள்ளும் நரகத்துள்ளுஞ் சென்று துன்பம் எய்துவர்.' இது தாப்பிசைப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

'செய்யார் தீமானுடருள்ளும் விலங்கினுள்ளும் அழுந்துவர்;' 'அறஞ் செய்தார் நன்மக்களுள்ளும் வீட்டின்கண்ணும் சென்று இன்பம் எய்துவர்.' இதுவுமது.

செல்வமும், சிறப்பும், கல்வியும், மீக்கூற்றமும், வலியும், வனப்பும், ஆற்றலும், புண்ணியத்தான் ஆம். இது அளமறிபாப்புப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

காதில் வளையுங் கையில் குழையுந் தரித்தான். இது மொழிமாற்றுப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி.

மரத்தின்மேல் ஆமை; கிணற்றில் அணிற்பிள்ளை. இது கொண்டு கூட்டுப் பொருள்கோள்படத் தொடர்ந்த தொடர்மொழி. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

இது, அடி மறிமாற்றுப் பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ—ள்.: ஏற்புழி – பொருளுக் கேற்குமிடத்து, எடுத்து – எடுத்து, உடன்கூட்டுறும் – நீங்காது கூட்டுகிற, அடியவும் – அடியை யுடையவையும், யாப்பீறிடை முதல் – யாதானுமோரடியை, அச் செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதானுமோரிடத்து, ஆக்கினும் – எடுத்துக் கூட்டினும், பொருளிசை மாட்சியும் – பொருளோடிசை மாட்சியும் பொருண்மாட்சியும், மாறா – வேறுபடாத, அடியவும் – அடியை யுடையவையும், அடிமறி – அடிமறிமாற்றுப் பொருள்கோளாம், எ—று.

வ—று.:

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்"

என்பதனுள், கொடுத்துத்தான்றுய்ப்பினு மீண்டுங்காலீண்டும், விடுக்கும் வினையுலந்தக்கா லிடுக்குற்றுப்பற்றினு நில்லாதுசெல்வம் (இஃதறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந்துடையார், என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக் கூட்டுக.

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழுமாறே"

இதனுள் எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன்மிசைதலுங் குற்றஞ்

சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்
கொலற்பாலுங் குற்றமே யாம்"

இதனுள் கடையடியை யாதேனுமோரிடத்துக் கூட்டுபோது ஓசை வேறுபட்டுப் பொருள்வேறுபடாமை காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அடிமறிமாற்றுப்பொருள் கோளாவது யாது?

ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்

யாப்பீ றிடைமுத லாக்கினும் பொருளிசை

மாட்சியு மாறா வடியவு மடிமறி.

(ஏற்புழி எடுத்து உடன் கூட்டுறும் அடியவும் யாப்பு ஈறு இடை முதல் ஆக்கினும் பொருள் இசை மாட்சியும் மாறா அடியவும் அடிமறி.)

இ–ள்.: பொருளுக்கேற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியையுடையவையும் யாதானுமோரடியைஎடுத்து அச்செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதானுமோரிடத்துக் கூட்டினும் பொருளோடு ஓசைமாட்சியும் ஓசையொழியப்பொருண்மாட்சியும் வேறுபடாத அடியையுடையவையும் அடிமறிமாற்றுப் பொருள்கோளாம். எ–று.

வ–று.:–

(1) "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார–கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு–மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்–விடுக்கும் வினையுலந்தக் கால்." என்பதனுள், கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கா விடுக்குற்றுப் பற்றி னுநில்லாது செல்வம் (இஃதறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக்கூட்டுக.

(2) "மாறாக் காதலர் மலைமறந் தனரே–யாராக் கட்பனி வரலானாவே–வேறா மென்றோள் வளைநெகி ழும்மே–கூறாய் தோழியான் வாழு மாறே." இதனுள், எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

(3) "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்–விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலுங் குற்றஞ்–சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்–கொலைப்பாலுங் குற்றமேயாம்." இதனுள், ஈற்றடியொழிந்த மூன்றடியுள் யாதானு மொன்றை யெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டியுச்சரித்துப் பொருளுமோசையும் வேறுபடாமையும், ஈற்றடியையெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டியுச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையுங் காண்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்த முறையே அடிமறிமாற்றுப் பொருள்கோளுணர்த்திற்று.

இ—ள்.: **ஏற்புழி எடுத்துடன் கூட்டுறுமடியவும்** — பொருளுக்கேற்ற இடத்து எடுத்து நிங்காமற்கூட்டும் அடியினையுடையனவும், **யாப்பீறிடை முதலாக்கினும்** — (யாதாகினும் ஓரடியையெடுத்து) அச்செய்யுளின் முதலிடைகடை யென்பவற்றுள் யாதாகினும் ஓரிடத்துக் கூட்டுகினும், **பொருளிசை மாட்சியும்** — பொருளோடு சந்தச் சிறப்பும் சந்தமொழியப் பொருட் சிறப்பும், **மாறா வடிபவு மடிமறி** — வேறுபடாத வடியினை யுடையனவுமாகிய பொருள்கோள் அடிமறிமாற்றுப் பொருள்கோளாம், எ—று.

எனவே, ஏற்புழிக் கூட்டுமறிமாற்றும், பொருளிசைமாட்சி மாறா அடிமறிமாற்று மென விருவகைப்படு மெனவும்; அவற்றுள்ளே பின்னையது, பொருண்மாட்சி மாறாவடிமறிமாற்றும், பொருளிசை மாட்சிமாறா வடிமறிமாற்று மென விருவகைப்படு மெனவும், மறிமாற்றென்றதினால், மறித்தற்குரியதும், மறித்தற்கும், மாற்றுதற்கு முரியதெனவும், அவற்றுள் மறித்தற்குரியது ஏற்புழிக் கூட்டுமடிமறிமாற் றெனவும், ஒழிந்தன மறித்தற்கும் மாற்றுதற்கு முரியன வெனவுங் கொள்க. மறிதல் — மடங்கல்.

வ—று.:

**"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்**
**கொடுத்துத்தாந் துய்ப்பினு மீண்டுங்கா லீண்டு**
**மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்**
**விடுக்கும் வினையுலந்தக் கால்"**

இதனுள், 'கொடுத்துத் தாந்துய்ப்பினு மீண்டுங் காலீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கால் மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம், இஃதுணரார் நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந்துடையார்' என அடிகளைப் பொருளுக்கேற்ற இடத்தெடுத்துங் கூட்டுக.

**"மாறாக் காதலர் மலைமறந் தனரே**
**யாறாக் கட்பனி வரலானாவே**
**வேறா மென்றோள் வளைநெகி ழும்மே**
**கூறாய் தோழியான் வாழு மாறே"**

இதனுள், யாதாயினு மோரடியை யெடுத்துயாதாயினு மோரிடத்துக் கூட்டிச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

**"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம் விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலுங் குற்றஞ் சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங் கொலைப்பாலுங் குற்றமே யாம்"**

இதனுள், ஈற்றடி யொழிந்த மூன்றடியுள் யாதாயினு மோரடியை யெடுத்து யாதாயினு மோரிடத்துக் கூட்டி யுச்சரித்துப் பொருளும் ஓசையும் வேறுபடா

அடிமறிமாற்றெனவும், ஈற்றடியை யெடுத்து அவ்வாறு கூட்டி ஓசையொழியப் பொருள்வேறுபடா அடிமறிமாற்றெனவுங் காண்க.

ஒருசெய்யுளிலேதானே யிரண்டு பொருள்கோளாகக் காட்டியதன்னை யெனின், எட்டுவகைப் பொருள்கோளும் அவற்றின் விகற்பங்களுமாகிய இவற்றுள் ஒன்றுதானே ஒரு செய்யுள் முழுமையும் அமைந்து கிடக்க வேண்டுமென்ற நியதி யின்றி (நியதி – நிச்சயம்,) ஒன்றும் பலவும் அமைந்து கிடக்குமென்க. அவ்வாறு அமைந்துகிடத்தலை அந்தந்தப் பொருள்கோள்களுக்குக் காட்டிய செய்யுள்களிலும் பிற செய்யுள்களிலுங் காண்க. அடிமறித்தலன்றி மாற்றுதல் ஏற்புழியெடுத்துக் கூட்டுமடியவு மென்றதற்கு இணன்மையின் அதனையும் அடிமறிமாற்றென்ற தென்னெனின், சிலவுறுப்புக் குறைந்தாரையு மக்களென்றாற் போல அதற்கும் அடிமறிமாற்றெனப் பெயர்தந்ததென்க. செய்யுட்குரிய பொருள்கோளைச் சொல்லிலக்கணத்துட் கூறிய தென்னெனின், செய்யுளுக்குத் தொடர் என்று காரணப் பெயர்வந்தது. மொழிகள் தொடர்ந்ததாலன்றோ அங்ஙன மாதலால் இதுவுந் தொடர்மொழியிலக்கணமே யாமென்க. இனி உரையிற்கோடல் என்பதனால் அடிமறியாவது சீர்நிலை பெயராமல் அடிநிலை பெயர்தலெனவும் ஒரோவழி யீற்றடி யிறுதிச் சீர்நிலை பெயர்ந்து வருதலுமுண்டெனவுங் கொள்க. அவைவருமாறு:–

"சூரல் பம்மிய சிறுகான் யாறே
சூரர மகளி ராணங் கினரே
சாரனாட நீ வருதியே
வார லெனினே யானஞ் சுவலே"

இது சீர்நிலைபெயராது அடிநிலை பெயர்ந்து தடுமாறிவந்த செய்யுள். அடிநிலை பெயர்ந்து தடுமாறலாவது, இச்செய்யுளில் இது முதலடி இது இரண்டாமடி இதுமூன்றாமடி இது நான்காமடி என நியதி கூறக் கூடாமையாம், 'மாறாக் காதலர் மலைமறந் தனரே' என்னுஞ் செய்யுளில், 'கூறாய் தோழியான் வாழு மாறே' என்னும் ஈற்றடியில் வாழுமாற்றைக் கூறாய் எனயிறுதிச் சீர் நிலை பெயர்ந்து நின்றவாறு காண்க.

"அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே"

எனவும்,

"பொருடெரி மருங்கி – னீற்றடி யிறுதி
சீரெருத்து வயிற் றிரிபுந் – தோற்றமும்
வரையா ரடிமறியான"

எனக் கூறுதலுங் காண்க. அடியவுமடியவும் – என எண்ணி, அடிமறியெனப் பயனிலை கூட்டி முடித்துக் கொள்க.

**இது,** இந்த அதிகாரத்திற்குப் புறனடையுணர்த்திற்று.

**இ—ள்.: சொற்றொறும்** – சொல்லுகடோறும், **இற்று** – இத்தன்மைத்து, **இதன்பெற்றியென்று** – இதனிலக்கண மென்று, **முற்ற மொழிகுறின்** – முழுமையுஞ் சொல்லப் புகின், **முடிவிலவாதலின்** – வரம்பிலவாமாதலால், **சொற்ற வற்றியலான்** – எடுத்துக்கூறிய சொற்களினிலக் கணங்களைக் கொண்டு, **மற்றைய பிறவும்** – சொல்லாத வற்றினி லக்கணங்களையும், (ஒப்புமை குறித்திதுவுமது வென்று) **தெற்றென வுணர்தல்** – தெளிவாக வுணர்ந்துகொள்வது, **தெளிவோர் திறன்** – நூலோதித் தெளிதற்குரிய மாணாக்கரது கூறுபாடாம், எ—று.

இவற்றிற்கு உதாரண முன்னேதானே வந்தவந்த இடங்களிற் காட்டப்பட்டன. அந்தந்த இடங்களிற் கண்டுகொள்க. உணர்தல் – திறன் என முடித்துக் கொள்க.

இது, இந்த நூலிற்குப் புறனடையுணர்த்திற்று.

**இ—ள்.:— பழையனகழிதலும்** – முற்காலத்துள்ள இலக்கணங்களுட் சில பிற்காலத்தொழிதலும், **புதியன புகுதலும்** – முற்காலத்தில்லாதன, சில பிற்காலத்திலக்கணமாக வருதலும், **வழுவல** – குற்றமல்லவாம், **கால வகையினான்** – கால வேற்றுமையது வாதலால், எ—று.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :—** ஏற்புழி – (பொருளுக்கு) ஏற்றவிடத்து, எடுத்து –, **உடன் கூட்டுறும்** – நீங்காமற் கூட்டுகின்ற, **அடியவும்** – அடியையுடையவையும், **யாப்பு ஈறு இடை முதல் ஆக்கினும்** – (யாதாயினுமோரடியையெடுத்து) அச் செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதாயினும் ஒரிடத்துக் கூட்டினாலும், **பொருள் இசை மாட்சியும்** – பொருளோடு ஓசை மாட்சியும் ஓசையொழியப் பொருள் மாட்சியும், **மாறா அடியவும்** – வேறுபடாத. அடியையுடையவையும், **அடிமறி** – அடிமறிமாற்றுப் பொருள்கோளாம்.

குறிப்பு :—

எனவே, ஏற்புழிக்கூட்டும் அடிமாற்று, பொருளிசை மாட்சிமாறா அடிமாற்று என அடிமாற்றுப் பொருள்கோள் இருவகைப் படுமென்றும், அவற்றுள், பின்னது – பொருளிசை மாட்சிமாறா அடிமாற்று, பொருள்மாட்சிமாறா அடிமாற்று என இருவகைப்படுமென்றுங் கொள்க. (இசை, ஓசை, சந்தம் என்பன – ஒரு பொருளன). அடிமறிமாற்று – அடிகளை முழுவதும் எடுத்து முன்பின்னாக மாற்றிவைப்பது.

உதாரணம் :

**1. "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்**

கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்கா லீண்டும் மிடுக்குற்றுப் பற்றினு நில்லாதுசெல்வம் விடுக்கும் வினையுலந்தக் கால்''

இதில், கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்குங்கா லீண்டும், விடுக்கும் வினையுலந்தக்கால் மிடுக்குற்றுப்பற்றினும் நில்லாது செல்வம், (இதனையறியாதவர்) நடுக்குற்றுத்தற் சேர்ந்தார் துன்பந்துடையார் என அடிகளைப் பொருளுக்கு ஏற்றவிடத்து எடுத்துக்கூட்டல் காண்க.

2. (a) "மாறாக்காதலர் மலைமறந்தனரே – ஆறாக்கட்பனி வரலானாவே – வேறாமென்றோள் வளைநெகிழும்மே – கூறாய் தோழியான் வாழுமாறே''

இதில் எந்த அடியை எங்கே கூட்டினாலும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

(b) "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம் விலைப்பாலிற் கொண்டுன் மிசைதலுங் குற்றம் சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம் கொலைப்பாலுங் குற்றமே யாம்.''

இதில் ஈற்றடியொழிந்த மூன்றடிகளுள் எந்த அடியை எங்கே கூட்டினாலும் பொருளும் ஓசையும் வேறுபடாமையும், ஈற்றடியை யெடுத்து யாதாயினு மோரிடத்துக் கூட்டினால் ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையுங் காண்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: ஏற்புழி எடுத்து உடன் கூட்டுறும் அடியவும் – பொருளுக்கேற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியை யுடையவையும், யாப்பு ஈறு இடை முதல் ஆக்கினும் – யாதானுமோரடியை எடுத்து அச் செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதானுமோரிடத்துக் கூட்டினும், பொருள் இசை மாட்சியும் மாறா அடியவும் – பொருளோடு ஓசைமாட்சியும் ஓசையொழியப் பொருண்மாட்சியும் வேறுபடாத அடியை யுடையவையும், அடிமறி – அடிமறிமாற்றுப் பொருள்கோளாம், எ–று.

வ–று.:

"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்.''

என்பதனுள், கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கா லிடுக்குற்றுப் பற்றினுநில்லாது செல்வம் (இஃதறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக் கூட்டுக.

"மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக்கட்பனி வரலா னாவே

வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே."

இதனுள் எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டுண் மிசைதலுங் குற்றஞ்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்
கொலைப்பாலுங் குற்றமேயாம்."

இதனுள், ஈற்றடி யொழிந்த மூன்றடியுள் யாதானு மொன்றை யெடுத்து யாதானு மோரிடத்துக் கூட்டி யுச்சரித்துப் பொருளுமோசையும் வேறுபடாமையும், ஈற்றடியை யெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டி யுச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையுங் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். ஏற்புழி எடுத்து உடன் கூட்டுறும் அடியவும் – பொருளுக்கேற்குமிடத்து எடுத்து நீங்காது. கூட்டும் அடியையுடையவையும் – யாப்பு ஈறு இடை முதல ஆக்கினும் – யாதானுமோரடியை எடுத்து அச்செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதானுமோரிடத்துக் கூட்டினும், – பொருள் இசை மாட்சியும் மாறா அடியவும் – பொருளோடு ஓசை மாட்சியும் ஓசைமொழியப் பொருண்மாட்சியும் வேறுபடாத அடியையுடையவைபும், – அடிமறி – அடிமறி மாற்றுப் பொருள்கோளாம். எ–று.

வ–று

(1) நடுக்குற்றுத்தற் சேர்ந்தார் துன்பந்துடையார், கொடுத்துத் தான்றுய்ப்பினும் மீண்டுங்காலீண்டு, மிடுக்குற்றுப் பற்றினுநில்லாது செல்வம், விடுக்கும் வினையுலந்தக்கால். என்பதனுள், கொடுத்துத் தான்றுய்ப்பினுமீண்டுங்காலீண்டும், விடுக்கும் வினையுலந்தக்கா, லிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம் (இஃதறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந்துடையார் என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக் கூட்டுக.

(2) மாறாக்காதலர் மலை மறந்தனரே, யாறாக்கட் பனிவரலானாவே, வேறாமென்றோள் வளை நெகிழும்மே, கூறாய் தோழியான் வாழுமாறே. இதனுள் எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

"தீர்த்தமென்பது சிவகங்கையே, மூர்த்தியம்பலக்கூத்தன துருவே, ஏத்தருந்தலமெழிற்புலியூரே", இதுவும் எவ்வடிவை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாது வந்தது."

3. "அலைப்பான் பிறிதுயிரையாக்கலுங் குற்றம், விலைப்பாலிற் கொண்டுன்மிசைதலுங்குற்றஞ், சொலற்பாலவல்லாத சொல்லுதலுங் குற்றங், கொலைப்பாலுங்குற்றமேயாம்." இதனுள் ஈற்றடி யொழிந்த மூன்றடியுள் யாதானுமொன்றை எடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டியுச்சரித்துப் பொருளுமோசையும் வேறுபடாமையும், ஈற்றடியை யெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டியுச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: **ஏற்புஉழி** – (பொருளுக்கு) ஏற்றவிடத்து எடுத்து, **உடன் கூட்டுறும்** – நீங்காமற் கூட்டுகின்ற, **அடியவும்** – அடியை யுடையவையும், **யாப்பு ஈறு இடைமுதல் ஆக்கினும்** – (யாதாயினும் ஓரடியை எடுத்து) அச்செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதாயினும் ஓரிடத்துக் கூட்டினாலும், **பொருள் இசை மாட்சியும் மாறா அடியவும்** – பொருளோடு செய்யுளோசை மாட்சியும் செய்யுளோசையொழியப் பொருள்மாட்சி மாத்திரமும் வேறுபடாத அடியை யுடையவையும், **அடிமறி** – அடிமறிமாற்றுப் பொருள்கோளாம், எ–று.

எனவே – ஏற்புழிக்கூட்டும் அடிமாற்று, மாறா அடிமாற்று என அடிமறிமாற்றுப் பொருள்கோள் இருவகைப்படுமென்றும்; அவற்றுள், பின்னது பொருளிசை மாட்சிமாறா அடிமாற்று; பொருள் மாட்சிமாறா அடிமாற்று என இருவகைப்படு மென்றும் கொள்க. (இசையெனினும், செய்யுளோசை யெனினும் ஒக்கும்.) அடிமறி மாற்று – மொழிமாற்றும் கொண்டு கூட்டும் போல அடியிலுள்ள சொற்களை முன்பின்னாக மாற்றுவதல்லாமல் அவ்வடிகளையே முழுவதும் எடுத்து முன்பின்னாக மாற்றிவைப்பது.

**உ–ம்.:**

**"நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந்துடையார்**

**கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்காலீண்டும் மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்**

**விடுக்கும் வினையுலந்தக்கால்"**

இதில், கொடுத்துத் தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும், விடுக்கும் வினை உலந்தக்கால் மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்; (இதனை அறியாதவர்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளைப் பொருளுக்கு ஏற்ற விடத்து எடுத்துக் கூட்டல் காண்க. இது, ஏற்புழிக்கூட்டும் அடிமறிமாற்று.

**இதன்பொருள்:**– (செல்வம்), **கொடுத்து தான் துய்ப்பினும்** – (பிறர்க்கும்) கொடுத்துத் தானும் அனுபவித்து வந்தாலும், **ஈண்டும் கால் ஈண்டும்** –

(நல்வினையால்) வளரவேண்டுங் காலத்து வளரும்; விடுக்கும் வினை உலந்தக்கால் – (முற்பிறப்பிற் செய்து குறையாக) விட்ட அந்நல்வினை முடிந்து விட்டால், மிடுக்கு உற்று பற்றினும் நில்லாது செல்வம் – இறுக்கிப் பிடித்தாலும் செல்வம் நிலைபெறாமற் போய்விடும்; (இதனையறியாத பலர்) நடுக்கு உற்று தன் சேர்ந்தார் துன்பம் துடையார் – (வறுமையினால்) நடுங்குதலையடைந்து தம்மைச் சேர்ந்தவரது துன்பத்தை (அவர் வேண்டின கொடுத்துப்) போக்கார் எனக் காண்க.)

"மரகத மணிப்பணி செய் மாளிகைகளொருசார், அரிமணியழுத்தியன ஆலயமதொருசார், எரிமணியழுத்தியன வில்லின்விதமொருசார், தருணமணிமுத்தினியலுஞ் சதன மொருசார்"

இதில், எந்த அடியை எங்கே கூட்டினாலும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க. இது, பொருளிசைமாட்சி மாறா அடிமறிமாற்று.

இதன்பொருள்:– மரகத ரத்தினங்களால் வேலை செய்யப்பட்ட வீடுகள் ஒருபக்கத்திலும், செந்நிறமான பதுமராகக் கற்களைப் பதித்துக் கட்டிய வீடுகள் ஒருபக்கத்திலும், மிக விளங்குகிற நீலமணிகளைப் பதித்தனவான வீடுகளின் வகைகள் ஒருபக்கத்திலும், முதிர்ந்த அழகிய முத்துக்களினாலமைந்த வீடுகள் ஒருபக்கத்திலும் (உள்ளன) எனக் காண்க.

"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்

விலைப்பாலில் கொண்டூண்மிசைதலுங் குற்றஞ் சொலற்பாலவல்லாத சொல்லுதலுங் குற்றங்

கொலைப்பாலுங் குற்றமேயாம்"

இதில், ஈற்றடியொழிந்த மூன்றடிகளுள் எந்த அடியை எங்கே கூட்டினாலும் பொருளும் ஓசையும் வேறுபடாமையும், ஈற்றடியை யெடுத்து யாதாயினு மோரிடத்துக் கூட்டினால் ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையும் காண்க. இது பொருள்மாட்சி மாறா அடிமறிமாற்று.

இதன்பொருள்:– கொல்லுதற்பொருட்டு வேறோருயிரை வளர்த்தலும் பாவம், விலைக்கு வாங்கி மாமிசத்தைப் புசித்தலும் பாவம்; சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லுதலும் பாவம்; கொல்லுதலும்பாவம் எனக் காண்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– ஏற்புழி – பொருளுக்கு ஏற்குமிடத்து, எடுத்து உடன் கூட்டுறும் – எடுத்து நீங்காது கூட்டும் அடியவவும் – அடியையுடையவையும், யாப்பு ஈறு இடை முதல் ஆக்கினும் – (யாதானுமோரடியை எடுத்து) அச் செய்யுளின் இறுதி நடு முதல்களில் யாதானு மோரிடத்துக் கூட்டினும், பொருள் இசை மாட்சியும் – பொருளோடு ஓசைமாட்சியும் ஓசையொழியப் பொருண்மாட்சியும், மாறா அடியவும் – வேறு படாத அடியையுடையவையும், அடிமறி – அடிமறிமாற்றுப் பொருள் கோளாம். எ–று.

உ–ம். (1) “நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்.”

இதனுள், கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கி லீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கா லிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்; (இஃதறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக் கூட்டக் கிடத்தல் காண்க.

(2) “மாறக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே.

இதனுள் எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

(3) “அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்
கொலைப்பாலுங் குற்றமே யாம்.”

இதனுள், ஈற்றடியொழிந்த மூன்றடியுள் யாதானு மொன்றை யெடுத்து யாதானு மோரிடத்துக் கூட்டி யுச்சரித்துப் பொருளுமோசையும் வேறு படாமையும், ஈற்றடியை யெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டியுச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையும் காண்க.ஈண்டுக் கூறிய எட்டுவகைப் பொருள் கோள்களில், ஒன்றே ஒரு செய்யுள் முழுமையும் அமைந்து கிடக்கவேண்டுமென்ற நியதியின்றி ஒன்றும் பலவும் அமைந்துகிடக்கு மென்றறிக.

## கா. நமச்சிவாய முதலியார்

ஏற்புழி – (பொருளுக்கு) ஏற்குமிடத்து, எடுத்து – எடுத்து, உடன் கூட்டுறும் – நீங்காது கூட்டுகின்ற, அடியவும் – அடியை யுடையவையும், யாப்பு ஈறு இடை முதல் – (யாதானும் ஓரடியை) அச் செய்யுளின் இறுதி நடு முதல்களில் (யாதானும் ஓரிடத்து), ஆக்கினும் – (எடுத்துக்) கூட்டினும், பொருள் இசை மாட்சியும் – பொருளோடு ஓசைச் சிறப்பும் ஓசை ஒழியப் பொருட்சிறப்பும், மாறா – வேறுபடாத, அடியவும் – அடியை யுடையவையும், அடிமறி – அடிமறி மாற்றுப் பொருள்கோளாம்.

எனவே, அடிமறி மாற்றுப் பொருள்கோள் மூன்று வகைப் படும் என்பதாம்.

**உதாரணம்**

1. 'நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பம் துடையார்

கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும்
மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்'

'கொடுத்துத்தான் துய்ப்பினும் ஈண்டுங்கால் ஈண்டும், விடுக்கும் வினையுலந்தக்கால், மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம். (இஃது அறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பர் துடையார்' என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக் கூட்டுக.

2. 'மாறாக் காதலர் மலைமறத் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே'

இதனுள், எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

3. 'அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால அல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்'

இதனுள், கடையடியை யாதேனும் ஓரிடத்துக் கூட்டும் போது, ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமை காண்க.

## மோசகு பொன்னையா

பொருளுக்கு ஏற்புடைய இடத்தில் கொண்டுகூட்டியுரைத்தற்குப் பொருந்தும் அடியை உடையனவும்,

வேண்டியவாறே எந்த அடியைச் செய்யுளுக்கு முதல் இடை ஈறாக இயைத்துப் பொருள் உரைத்தாலும், அதன் பொருளும் சந்தமும் அழகும் மாறாத அடியினையுடையவும் அடிமறி மாற்றுப்பொருள் கோளனவாம் எ—று.

எ—டு.

மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரலா னாவே
ஏறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே.

இதன்கண் எந்த அடியை எடுத்து எந்த இடத்தில் கூட்டி உச்சரிப்பினும் பொருளும் ஓசையும் வேறுபடாமையைக் கண்டு கொள்க.

தொல்காப்பியர்,

**அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து**
**சீர்நிலை திரியாது தடுமா றும்மே,1**

எனவும்,

**பொருடெரி மருங்கி**
**னீற்றடி யிறுசீ ரெருத்துவயிற் றிரிபுந்**
**தோற்றமும் வரையா ரடிமறி யான,2**

எனவும் இலக்கணம் அமைத்தார். அடிமறிப்பொருள்கோள் நான்கடிச் செய்யுட் கண்ணன்றிப் பெரும்பான்மையும் வாராது எனக்கொள்க.

தொல்காப்பியர் நிரல்நிறை, கண்ணம், அடிமறி, மொழிமாற்று என்பதை ஓராற்றான் சொற் பொருள்தெரி மரபுக்கு இன்றியமையாதன வாதலின் சொல்லதிகாரத்துள் வேறு பிரித்து ஓதினார். இவ்வாசிரியர் ஈண்டுக் கூறி பொருள்கோள் எட்டனுள் பூட்டுவில், அளைமறிபாப்பு, தாப்பிசை, கொண்டுகூட்டு என்னும் நான்கும் மாட்டென்னும் செய்யுளுறுப்பின் கண்ணும், யாற்றொழுக்கு யாப்பு என்னும் உறுப்பின் கண்ணும் அடங்கும் என்னபதே தொல்காப்பிய கருத்தாம் என்பதை அவர் நூல் நோக்கி அறிக.

(6)

**நன்னூல் உரைவளம்**

பொதுவியல்-3 முற்றிற்று